


வேளாண்மை செழித்து, தொழில் துறை வளர்ந்து, வணிக வளம் பெருக்கி நம் வாழ்க்கைத் தரம் சிறக்க என்றும் முன்னிலையில் விரைந்து வருவது TMB.

உலகமயமாக்கல் இந்திய வங்கித் துறையில் உருவாக்கி வரும் மாறுதல்களுக்கு ஈடுகொடுத்தும், புதுமைகளை புகுத்தியும் ஆண்டாண்டுகளாய் புதிய சாதனைகளைப் படைத்தும் TMB முன்னணியில் விரைகிறது.

எங்களது சேவைக்கும், வளர்ச்சிக்கும் உறுதுணையாய் உயிர் மூச்சாய் விளங்குவது உங்களது ஆதரவே.

எமது வாழ்த்துக்கள் நமது நெருங்கிய உறவின் பிரதிபலிப்பே.



தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிட்.

57, வி.இ. ரோடு, தூத்துக்குடி - 628 002

விரைவான வளர்ச்சிப் பாதையில்

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

# இன்னாத்துக்கு ஹாலிடே?

கல்கி பொஸ்தகம் படிக்கிற நம்ப தோஸ்துங்களுக்குக் கபாலி ஒரு வணக்கம்போட்டு தம் மாத்தூண்டு அட்வைஸ் கொடுக்குறானாங்காட்டியும்...

நீங்க எல்லாரும், ஆபீஸு, ஃபைலு, தேர்தல், கூட்டணி, பரீட்சை, ஹால் டிக்கட், போர்வெல், தண்ணி லாரி, எல்லா கஸ்மாலத்தையும் மூட்டை கட்டி வெச்சிட்டு ஜாலியா உங்க அரை டிக்கட்டுகளை இஸ்துகினு, ஒரு வாரம், எங்கனாச்சும் டூர் போயிட்டு வரணும்.

உதகமண்டலத்துக்கு வேணும்னாலும் போங்க... சந்திரமண்டலத்துக்கு வேணும்னாலும் போங்க. எத்தினி மைலுக்குக் கைல சில்லறை கீதோ அத்தினி மைல்! ஆக மொத்தத்திலே, எங்கனாச்சும் போகணும், அவ்ளோதான்!

போயிட்டு வந்திங்கன்னு வைச்சுக்கங்க, உங்க எல்லார் மனசிலேயும் புத்துணர்ச்சி, கும்மா ஸாம்பெயின் பாட்டிலை உடைச்சா கணக்கா (அதான்பா, கிரிக்கெட் ஆளுங்க, கெலிச்சா, புஸ்,, புஸ்னு உடைக்கிறாங்களே!) பீய்ச்சுக்கிட்டு வரும். நீங்க எல்லாரும் புச்சா பொறந்த மாதிரி ஃபீல் ஆவீங்க.

அந்த ஃபீலிங்கோடே வேலை செஞ்சிங்கன்னு வெச்சுக்கங்க, இன்கிரிமெண்ட், பெப்பர்மிண்ட் எல்லாம் நீங்க கேக்காமலே வந்திடும். உங்க வூட்டுக்காரி 'வசீகரா'வை முனங்கிக்கிட்டே வருசம் பூரா சந்தோசமா ஆக்கிப் போடும், உங்க பசங்க பாஸ்

ஆனா புள்ளை யாருக்குச் சிதறுகாய் உடைச்ச காலம் போய் சளை சளையா மார்க் எடுத்துக்கிட்டு வருவானுங்க... மொத்தத்திலே டி.வி. விளம்பர குடும்பமாட்டம் டாப் டக்கர் குடும்பமாயிடும் உங்களோடது!

நான் சொல்றதெல்லாம் நடக்கலேன்னா, நான் என் பெயரை 'கபோதி கபாலி'ன்னு மாத்திக்கிறேன் வாத்யாரே- ஓ.கே. வா?

கமாஆஆன், என்ஜாய்ய்ய்ய்ய்!



● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

*? கர்நாடகத்தில் மளிகைக் கடைகளில் பீர் விற்பதற்கு அம்மாநில முதல்வர் கிருஷ்ணா அனுமதி அளித்துள்ளாரே?*

! காந்திஜி கண்ட கனவு நனவாக வேண் டும்; இந்தியா முழுவதும் பூரண மதுவிலக்கு அமலாக வேண்டும் என்ற நம் ஆசை 'பீர்'இடுகிறது!

● க. பூங்கொடி, சித்தோடு

*? எம்.எல்.ஏக்கள் தவறு செய்தால் மக்கள் முன்னிலையில் வெயிலில் முட்டி போட வைத்து தண்டனை கொடுப்பேன் என் கிறாரே ராமதாஸ்..?*

! அவருக்கு இதெல்லாம் சகஜமுங்க. ஏற் கெனவே சாட்டை சொடுக்கியவர் தானுங்களே!

● கல்வார் ரஹ்மத், நாகை-1

*? மக்கள் தொகை 102 கோடியைத் தொட்டுவிட்டது என்ற செய்தியைக் கேட்டவுடன் பயம் ஏற்பட்டதா? பெருமை ஏற்பட்டதா?*

! வறுமை கோட்டுக்குக் கீழ் வாழும் மக் களின் கதியை எண்ணி கவலை ஏற்பட்டது.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

*? த.மா.கா. பேரவையை நிறுவிய சிதம் பரத்தை, அவரது நிழல்கூட பின்தொடராது என்று வாழப்பாடி ராமமூர்த்தி கூறி யுள்ளாரே..?*

! மாங்காய் அடிக்க வீசிய கல், தன் மண் டையையே பதம் பார்த்துவிட்ட ஆதங்கத்தில் இப்போது அடுத்த வீட்டுக் கூரையில் கல் எறிந்து பார்க்கிறார். பாவம், வாழப்பாடி!

● ஆர். சுப்பாராவ், திருக்கோணலூர்

*? நடிகர் மன்சூர் அலிகான் நிஜ வாழ்க் கையிலும் வில்லனாக விளங்குகிறாரே...?*

! அவர் வில்லனாக விளங்குகிறார் என் பதைக் காட்டிலும் அவரால் அநீதிக்கு உட் படுத்தப்பட்ட பெண் ஸ்நேகா, அதை எதிர்த் துப் போராடி ஜெயித்து, கதாநாயகியாக விளங்குகிறார் என்பதே முக்கியம்.

● என். தாமோதரன், சேலம் - 7

*? கங்குலிக்கு இப்போதெல்லாம் ரொம்ப கோபம் வருகிறதே, கவனித்தீர்களா?*

! கூடவே, எடுக்கும் ரன்களும் கடுகாய்ச் சிறுத்து வருகிறதே கவனித்தீரா? நல்ல ஆட்டத்துக்கு மனநிலை முக்கியம்.

● காவிரி மணாளன், கோனாபட்டு

*? ஏழைகளுக்குப் பொங்கலையொட்டி தமிழக அரசு வழங்கிய இலவச வேட்டிகள் டெல்லியில் வேஸ்ட் துணிகளாக, தொழிற் சாலைகளுக்கு மிகுந்த அளவில் விற்கப் பட்டுள்ளதாமே..?*

! நலத்திட்டங்கள் - அதிலும் இலவச திட் டங்கள் அனைத்திலும் இந்தப் பிரச்னை திரும்பத் திரும்ப வரும். ஆனால், வோட்டுப் பிரச்னை காரணமாக இதுபோன்ற திட் டங்களை நிறுத்த எந்த அரசுக்கும் துணிவு வராது! விஷ வட்டம்தான்.

● பாலு. கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம் - 1



● ...கதாநாயகியும்



● வில்லனும்...

## 'திங் மேக்கரின்'

*? ஜெயலலிதா கிரிக்கெட்டில் நடுவராக இருந்தால்..?*

! லெக் அம்பயராக சசி கலாவும் தர்ட் அம்பயராக தினகரனும் கண்டிப் பாக இடம் பெறு வார்கள். அப் புறம் மேட்



* மூ(ச்!)ப்பனார்!

* ஆடாத மனம்!





* வெயில் வீணாகாமல்...



* பங்கீடுப்...



* எறிந்த கல்!

சாவது ஒண்ணாவது! விளையாட்டு வீரர்கள் லஞ்சம் வாங்கினார்கள் என்ற பேச்சே வராது.

● க.பொன்னிலா சேகர், பெங்களூர்-53★

*? 'கிங் மேக்கராக' இருந்த மூப்பனார் நிலை என்ன..?*

# நிலை என்ன..?

! தவறிப் போய் கூட குவீன் மேக்கர் என்று சொல்லிக் கொள்ள முடியாது. அம்மாவுக்குக் கோபம் வந்துவிடும்.

● அ. கென்னடி, நன்னிமங்களம்

*? ஜெயலலிதா மீண்டும் ஆட்சிக்கு வந்தால், அவரைத் தமிழக மக்கள் முழு மனத்துடன் ஏற்றுக் கொள்வார்களா..?*

! ஏற்றுக் கொண்ட பிறகுதானே ஆட்சிக்கு வர முடியும்? அரை மனத்துடன் ஏற்றுக் கொண்டாலே ஆட்சிக்கு வந்துவிடலாமே! அப்புறம் இந்தக் கேள்விக்கு இடமேது..?

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்

*? 'பாரதி' படத்துக்கு நான்கு தேசிய விருதுகள் கிடைத்திருப்பது குறித்து மகிழ்ச்சிதானே..?*

! அரசியல் தலையீடு, பாரபட்ச தேர்வு என்றெல்லாம் கூக்குரல் கேட்காமலிருந்திருந்தால், இன்னும் சந்தோஷமாக இருந்திருக்கும்.

● அ. சுகுமார், காட்டுக்காஞர்

*? கூட்டணிகளில் தொகுதிப் பங்கீடுப் பிரச்னையை வெற்றிகரமாக சமாளித்தவர் கலைஞரா? ஜெவா..?*

! அங்கே சரணாகதி தத்துவம் வென்றது. இங்கே தன்மான அணுகுமுறை தாக்கியது. அந்த வெற்றியிலே பெருமை இல்லை. இந்தத் தாக்குதலில் அறிவுடைமை இல்லை.

● என். மாணிக்கம், அரக்கோணம்

*? சட்டப் பிரச்னை கிளப்பாமல் ஜெ, தாமாக முன்வந்து தேர்தலைத் தவிர்த்தால் அவருடைய மதிப்பு கூடாதா? வெளியேயிருந்தே ஆட்சியை வழி நடத்தலாமே..?*

! ஒப்பு நோக்க, அவர் தேர்தலில் நின்று வெற்றி பெற்று முதல்வராவதே மேல். தேர்தலில் நிற்காமல் அ.தி.மு.க. ஆட்சியை வழி நடத்துவது என்று ஆரம்பித்தால், பொறுப்புணர்ச்சி லவலேசமும் வாராது. தமிழகம் குட்டிச்சுவர்தான்.

● இரா. சந்திரசேகரன், விருதுநகர் ❒

*? வங்கிகளில் வேலை நிறுத்தம் செய்தால் சம்பளத்தை 'வெட்டி' விடுகிறார்கள். ஆனால் சட்டம் இயற்றும் பாராளுமன்றத்தில் ஒரு வாரமாகக் கூச்சலும் குழப்பமும் ஏற்படுத்தி கோடிக்கணக்கில் நஷ்டம் உண்டாக்கிய எம்.பிக்களுக்குச் சம்பள வெட்டு இல்லையே..?*

! அரசுடைமையான வங்கி ஊழியர்களுக்குச் சம்பளத்தை நாடாளுமன்றம் தருகிறது. நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கான சம்பளத்தை அவர்களே தந்து கொள்கிறார்கள் - அதனால்தான்!

● டி.எஸ்.சேகர், தென்கடப்பந்தாங்கல்

*? திறமையற்ற, பொறுப்பற்ற செயலுக்கு உதாரணம் ஒன்று கூறுங்களேன்..?*

! தி.மு.க. கூட்டணியிலிருந்து பிரிந்துபோய் தனித்துப் போட்டியிடுவதாக ம.தி.மு.க. எடுத்த முடிவு!

❒ ரூ.50 பரிசு பெறுபவர் :
இரா. சந்திரசேகரன்,
25/1, கட்டபொம்மன் தெரு,
விருதுநகர் - 626 001

★ ரூ.25 பரிசு பெறுபவர் :
க. பொன்னிலா சேகர்,
12, கிலாரி ரோடு,
பெங்களூர் - 53



# "சவால்களைச் சந்திப்போம்!"

தலைவர் பொறுப்பேற்றுக் கொண்ட பிறகு முதல் முறையாகச் சென்னை வந்த ஜனா. கிருஷ்ணமூர்த்தி, ஓய்வே இல்லாமல் மதுரை, திருச்சி என்று ஓடியபடி இருந்தார். முதல்வர் கலைஞரை மரியாதை நிமித்தம் சந்தித்துவிட்டு வந்தவர் அதே மூச்சோடு பேட்டி அளித்தார்.

**இந்தச் சூழ்நிலையில் தலைமை பொறுப்பு, ஒரு முள்கிரீடம்தானே!**

ஒரு சோதனையான கால கட்டத்தில் கட்சியின் தலைமைப் பொறுப்பு என்னிடம் வந்து சேர்ந்திருப்பதை நான் உணர்கிறேன். இந்தச் சவாலை சந்திக்க என்னால் முடியும் என்று நம்புகிறேன். இந்த அடிப்படையில்தான் வாஜ்பாய், அத்வானி மற்றும் கட்சியின் மத்திய செயற்குழு உறுப்பினர்கள் ஆகியோர் இந்தப் பெரும் பொறுப்பை என் தலையில் வைத்திருக்கிறார்கள். அரசியலில் எதிர் நீச்சல் போட்டு வந்தவன் நான். என் அனுபவம் எனக்குக் கை கொடுக்கும் சகாக்களின் ஒத்துழைப்பில் சவால்களைச் சந்திப்பேன்.

**பா.ஜ.க.வில் கட்சிக்காரர்களுக்கு இது வரை நடத்தை நெறிமுறைகள் ஏதும் கிடையாதா? ஏனென்றால் அது போன்று நெறிமுறைகள் வகுக்கப்பட வேண்டும் என்று பேசியுள்ளீர்களே!**

"பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு நெறிமுறை வேண்டுமென்று சொன்னேன். சவாண் தலைமையில் பாராளுமன்ற உறுப்பினர்களுக்காக நெறிமுறைகளை உருவாக்க ஒரு கமிட்டி போடப்பட்டது. அந்தக் கமிட்டி முன் மூன்று முறை ஆஜராகி என் கருத்துக்களைச் சொல்லியிருக்கிறேன். பிரதமர், சபாநாயகர் ஆகியோர் கலந்து கொண்ட சர்வகட்சி கூட்

டத்திலும் இது பற்றி வலியுறுத்தி இருக்கிறேன். பாராளுமன்ற ஜனநாயக முறையை செம்மைப்படுத்த இந்த நெறிமுறைகள் தேவை. எங்கள் கட்சியில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட, மாநகராட்சி, நகராட்சி, பஞ்சாயத்து ஆகியோர்களுக்கு நெறிமுறை தேவை என்று 1999ல் சென்னையில் கூடிய எங்கள் பொதுக்குழு தீர்மானித்தது. எனவே இன்றைய அரசியல் சூழலுக்கு ஏற்ப சொன்ன புதுக் கருத்தல்ல.

**சென்னையில் நடந்த அதே பொதுக்குழுவில், வாஜ்பாய் பிரதமராக தொடர்வதற்குக் கட்சி சில அடிப்படைக் கொள்கைகளை விட்டுக் கொடுக்கும் நிலையுள்ளதாகவும் விவாதிக்கப்பட்டதே!**

ஜூலை 1992 முதலே இந்திய அரசியல் போக்குகளைக் குறித்து கட்சியின் தலைமை தீவிரமாக சிந்தித்து வந்தது. மோதல் அரசியலால் நாட்டுக்கு எதுவும் நன்மையில்லை என்று முடிவு செய்தோம். அதன் விளைவாகத்தான் ஒத்த கருத்துடைய கட்சிகளைத் தோழமையாக்கிக் கொள்ளும் நோக்கம் செயல்படத் துவங்கியது. 1998ல் அதற்கு வெற்றி கிட்டியது. அப்போது தேர்தலுக்குப் பின்னர்தான் கூட்டணி கட்சிகளுடன் குறைந்தபட்ச திட்டம் உருவானது. அதன் பிறகு 1999ல் ஒரு செயல் திட்டத்தை உருவாக்கி மக்களைச் சந்தித்தோம். பல கட்சிகள் சேர்ந்து அணி அமைத்துச் செயல்படும் போது, ஒவ்வொரு கட்சியும் தனித்தனியாக கொள்கைகளை வலியுறுத்த முடியாது. நாங்கள் எப்படி எங்கள் அடிப்படையான கொள்கைகளை வலியுறுத்தவில்லையோ அதேபோன்று மற்ற தோழமை கட்சிகளும் அவர்களுடைய சில முக்கி



**பொதுவாழ்வில் ஒரு உயர்ந்த மரபை உருவாக்கக்கூடிய வகையில் ஜார்ஜ் ராஜினாமா செய்திருக்கிறார். வெறும் குற்றச்சாட்டுக்களை கூறிவிட்டதால் மட்டுமே ஒருவரைத் தண்டித்து விட முடியாது.**

யக் கொள்கைகளை வலியுறுத்தாத நிலையில் இருப்பதை நீங்கள் பார்க்கலாம். இப்போது கிட்டத்தட்ட 60, 70 சதவிகித விஷயங்களில் எங்களுக்குள் ஒத்த கருத்து இருக்கிறது. நாட்டை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளைச் சமாளிக்க மற்ற சில விஷயங்களிலும் ஒத்த கருத்தை உருவாக்க முடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது. கருத்து வேறுபாடு உள்ள விஷயங்களைப் பின்னால் பார்ப்போம்.

**மற்றவர்களை விட நாட்டுப் பற்று மிக்கவர்கள் நாங்கள்' என்று சொல்லி வந்த உங்கள் மீது தெஹல்கா மூலம் கரும் புள்ளி விழுந்திருக்கிறதே!**

தெஹல்கா விவகாரத்தில் கட்சியினர் மீது களங்கம் கற்பிக்கப்படவில்லை என்பது என் கருத்து. ஆனால் அந்த விவகாரம் காரணமாக, தலைவராக இருந்த பங்காருவின் மீது களங்கம் ஏற்படுத்தும் முயற்சி நடந்திருக்கிறது. கட்சி நிதிக்காக அவர் வாங்கிய பணம் கட்சிக் கணக்கில் வரவு செலவாகி இருக்கிறது.

**அப்படியென்றால் ரசீது இருந்திருக்க வேண்டுமே! என்ன இருந்தாலும் கட்சித் தலைவர் பணத்தை எடுத்து மேஜை டிராயரில் வைப்பதைப் பார்க்கும் போது நடுத்தர மக்கள் மனத்தில் சந்தேகம் எழுவது நியாயம்தானே!**

நாங்கள் எல்லோரிடமும் சென்று ரசீது இதோ என்று காட்டிக் கொண்டிருக்க முடியாது. எங்கள் கட்சியின் கணக்குகள் முறையாகத் தணிக்கைச் செய்யப்பட்டு வருமானவரி அலுவலகத்துக்குச் சமர்ப்பிக்கப்படுகின்றன. விசாரணை கமிஷன் போடப்பட்டிருக்கிறது. அந்தப் பணம் வரவு செலவில் வைக்கப்பட்டிருப்பதை ரசீது ஆதாரத்துடன் கமிஷனில் தாக்கல் செய்வோம். தீர்ப்பு வரும்வரையில் பொறுத்திருக்க வேண்டும்.

**கட்சிக்காகத்தான் பங்காரு நிதி வாங்கினார் என்று உறுதியாக நீங்கள் கருதும் பட்சத்தில் அவரை ராஜினாமா செய்யச் சொன்னது ஏன்?**

கட்சியின் மீது களங்கம் உருவாகக் கூடாது என்று



"கல்யாணத்துக்கப்புறம் 'மெகாசீரியல்' பார்க்கறதை நிறுத்திட்டியா... ஏன்?"
"ஒரே சமயத்துல ரெண்டு கஷ்டங்களை அனுபவிக்க வேண்டாம்னுதான்."
— தஞ்சை ராகவ், மகேஷ்

தான் பங்காரு ராஜினாமா செய்துவிட்டார். 'ராஜினாமா செய்யச் சொல்லி நாங்கள் அவரை வற்புறுத்தவில்லை. தம்மை நிரபராதி என்று நிருபித்துக் கொள்ள பங்காரு ஆயத்தமாகியிருக்கிறார். பொறுத்திருந்து பார்ப்போமே!

**பிரதமர் அலுவலக அதிகாரி பிரஜேஷ் மிஸ்ரா, பிரதமரின் வளர்ப்பு மகன் ரஞ்சன் ஆகியோர் மீதும் சந்தேகம் எழுந்துள்ளதே?**

பிரஜேஷ் மிஸ்ரா, ரஞ்சன் பட்டாச்சார்யா, ஜார்ஜ் ஆகியோர் மீது இந்த தெஹல்கா நாடாக்கள் நேரடியாக எந்த விதமான குற்றமும் சாட்டவில்லை. பொது வாழ்வில் ஒரு உயர்ந்தபட்ச மரபை உருவாக்கக்கூடிய வகையில் ஜார்ஜ் ராஜினாமா செய்திருக்கிறார். வெறும் குற்றச்சாட்டுக்களை கூறிவிட்டதால் மட்டுமே ஒருவரை தண்டித்து விட முடியாது. கையும் களவுமாகப் பிடிபட்ட கொலைகாரனைக்கூட கண்டிக்க, சட்ட விதிமுறைகள் அனுசரிக்கப்படுகின்றன. கமிஷன் தனது தீர்ப்பில் யாரையெல்லாம் "குற்றம் செய்திருக்கிறார்கள்" என்று சுட்டிக்காட்டுகிறதோ, அவர்கள் எல்லோர் மீதும் பாரபட்சமின்றி நடவடிக்கை எடுக்கப்படும் என்ற ஒரு உறுதிமொழியைத்தான் இப்போது என்னால் கொடுக்க முடியும்.

**இந்த விவகாரத்தின் காரணமாக வாஜ்பாய் அரசுக்கு ஒரு தள்ளாட்டம் ஏற்பட்டிருக்கிறதே!**

தெஹல்கா விவகாரத்தின் காரணமாக இந்த அரசு மக்களின் நம்பிக்கையை இழந்துவிட்டது என்று எதிர்க்கட்சிகள் கருதினால் பாராளுமன்றத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரலாமே! அதை விட்டு பாராளுமன்ற நடவடிக்கைகளை ஸ்தம்பிக்கச் செய்வது என்ன நியாயம்? வாஜ்பாய் அரசு தனது முழு பதவிக் காலத்தை வெற்றிகரமாகப் பூர்த்தி செய்யும். இன்னமும் வெளிப்படையாகவே சொல்வது என்றால் பாராளுமன்ற உறுப்பினர்கள் யாரும் தேர்தலை விரும்பவில்லை என்பது தவிர வாஜ்பாய்க்கு ஈடு கொடுக்கக்கூடிய உயர்ந்த தலைவர் வேற யாரும் நாட்டில் இல்லை என்பதும் யதார்த்தமான நிலை.

**தமிழகத்தில் தே.ஜ.கூ.வில் பிளவுகள் பிரச்னைகள். இந்த நிலையில் பா.ஜ.க.வுக்கு 21 தொகுதிகள் திருப்திதானா?**

மாநில அளவில் தே.ஜ.கூ. இல்லை. இங்கே இருக்கும் தோழமைக் கட்சிகள் முதன்மைக் கட்சியான தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்திருக்கின்றன. கூட்டணி என்றால் கொஞ்சம் விட்டுக் கொடுத்துப் போக வேண்டியதுதான். எங்கள் மாநில அமைப்பு தி.மு.கவிடம் தனது பலத்தை எடுத்துச் சொல்லி வாங்கியிருக்கிறது. ஏன் கலைஞரேகூட எங்கள் செல்வாக்குக்கு ஏற்ப கொடுக்கப்பட்டிருக்கிறது என்று கூறியுள்ளார். ம.தி.மு.க பிரிவு வருத்தம் தரக் கூடியதுதான். ஆனால் அதன் காரணமாக எங்கள் வெற்றி பாதிக்கப்படாது. கலைஞர் நல்லாட்சி தருவார் என்று அத்வானி கூட பேசியுள்ளாரே! வாஜ்பாய் மற்றும் அத்வானியிடம் வைகோ பெரும் மதிப்பும் நம்பிக்கையும் வைத்திருக்கிறார். அதன் காரணமாக தே.ஜ.கூ.யில் தொடர்ந்து இருப்பார்.

**திருச்சி பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிடுவீர்களா?**

நான் திருச்சி பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிட மாட்டேன். நான் போட்டியிட்டு இங்கே 'லாக்' ஆகி விட்டால் ஐந்து மாநில தேர்தல் வேலைகளை கவனிக்க எனக்கு நேரம் இருக்காது.

**கட்சியை வளர்க்க என்ன திட்டங்கள் வைத்திருக்கிறீர்கள்?**

என்னுடைய உடனடிக் கவலை வருகின்ற மாநில சட்டசபைத் தேர்தல்களில் தே.ஜ. கூ. வெற்றி பெறப் பாடுபடுவதுதான். மற்ற விஷயங்களெல்லாம் தேர்தலுக்குப் பிறகுதான்.

சந்திப்பு: **ப்ரியன் ஸ்ரீநிவாசன்**
படங்கள்: **ராஜன்**

# ஒரு மெய்க்குள் சின்னவர்

மிடில் கிளாஸ் முகத்துடன் நின்று கொண்டிருக்கும் அபார்ட்மெண்டிற்குள் நுழைகிறோம். "யாரைப் பார்க்கணும்" என்றபடி இரக்கமே இல்லாமல் வழி மறித்தார் அமிதாபச்சன் உயரத்திலிருந்த வாட்ச்மேன் தாத்தா. 'ஜெனிபர் வீடு?' நாம் இழுத்த அடுத்த வினாடி, "அதோ கடையில நிக்குது பாருங்க... அந்தப் பொண்ணுதான்" என்று அபார்ட்மெண்ட் எதிரேயிருந்த கடையைக் காட்டினார்.

'காதல் ஜாதி' படத்தின் கதாநாயகி ஜெனிபர் காய்கறி கடையில் நிற்பதாவது... அச்சரியமாய் அவரை நெருங்கியபோது... தினசரிகளில் புகைப்படமாய் வெளியாகியிருந்த அதே ஆவின் முகம்.

அவசரமாய் அறிமுகப்படுத்திக்கொள்ள, நடுரோட்டில், நமக்கு ஐஸ்க்ரீம் புன்னகையோடு வணக்கம் சொல்லி 'வாங்க...' என்றார்.

அபார்ட்மெண்டின் கீழ்த் தளத்திலேயே வீடு. வரவேற்பறையில் ஒரு பிபிஎல் கலர் டீவி, சில பைபர் நாற்காலிகள், சுவரில் சாய்பாபா, ஜீசஸ் படங்கள், ஷோகேசில் நிறைய ஷீல்டுகள்.

அறிமுகமாகும் முதல் படமே இன்னும் வெளிவராதபோது அதற்குள் இத்தனை ஷீல்டுகள் எப்படி? சந்தேகத்தோடு ஜெனிபரின் முகத்தைப்பார்த்தோம்.

"இவை அத்தனையும் அப்பாவின் உழைப்பிற்குக் கிடைத்த விருதுகள். தமிழ், தெலுங்கு, மலையாளம், ஹிந்தி, உட்பட பதினான்கு மொழிகளில், எண்ணூறு படங்களுக்கு நடன இயக்குனராக பணியாற்றியிருக்கிறார். டான்ஸ் மாஸ்டர் சின்னாதான் எனது அப்பா. எனக்குக் குருவும் அவர்தான்" என்றவரிடம் சுவரைக் காட்டி "அதென்ன சாய்பாபா படத்திற்குப் பக்கத்தில் ஜீசஸ்?"

"அப்பா சாய் பக்தர். அம்மா ஜூலி ஒரு ஆங்கிலோ இந்தியக் கிறிஸ்தவர். லவ் மேரேஜ் பேரண்ட்ஸ். அக்கா ரெஜினாவும் ஒரு டான் ஸர். தம்பிகள் ஹேரம்நாக், ரங்கா, மித்ரன் படிக்கிறாங்க, கடைசித் தம்பி சாயிக்கு என்கூட விளையாடுறதுன்னா ரொம்ப பிடிக்கும். அவன் எனக்கு வெச்சிருக்கிற செல்ல பெயர் பர்பி" என்று தமது பாசமான குடும்பத்தை அறிமுகப்படுத்திய ஜெனியிடம், "உங்களைப் பற்றி சொல்லுங்க" என்றோம்.

"ஐந்தாம் வகுப்பு வரைக்கும் படிச்சேன். அதுக்குப் பிறகு படிப்பு வரலே. டான்ஸ்தான் வந்தது. அப்பாகூட சூட்டிங் போயிடுவேன். சூட்டிங் ஸ்பாட்ல டான்ஸர்களுக்கு அப்பா சொல்லிக் கொடுக்கிறதைக் கவனிச்சு உடனே அதே மாதிரி திருப்பி ஆடுவேன். 'யார் இந்த சின்னப் பொண்ணு நெருப்பு மாதிரி புடிச்சுக்கறா'ன்னு கேப்பாங்க. என்னோட ஆர்வத்தைப் பார்த்து அப்பா அசிஸ்டென்டாகச் சேர்த்துக் கொண்டார். அப்பாகூட நிறைய படம் ஒர்க் பண்ணியிருக்கேன். இப்போ 'ஆனந்தம்' படத்துக்கு அப்பாதான் டான்ஸ் மாஸ்டர். எனக்கு அந்த படத்துல ஒரு தனி சாங்



• பெற்றோருடன் ஜெனிபர்

# பொண்ணு!



கொடுத்து [illegible] சொன்னார். செய்திருக்கேன்.

"பரதம், பாலே, ஜாஸ், ஸ்விங்கர்ஸ், குச்சுப்புடி, ஃபோக் இப்படி நிறைய டான்ஸ் கத்து வெச்சிருக்கேன். என்னோட திறமைகளை, அப்பா மாதிரி ஒரு டான்ஸ் டைரக்டராகி எக்ஸ்போஸ் செய்யணும்ன்னு நினைச்சேன். ஆனா நீ பெரிய நடிகையா வருவேன்னு சொல்லி

கஸ்தூரி ராஜா சார் 'காதல் ஜாதி' படத்துல என்னை ஆடு மேய்க்கிற பெண்ணாக்கிட்டார். நடிகர் உதயா மாடு மேய்க்கிறவர். எங்க இரண்டு பேருக்கும் இடையில காதல். எங்க காதலால் இரண்டு கிராமத்துல புயல் வீசப்போகுது அதை நாங்க எப்படி தடுத்து நிறுத்தப் போறோம்கிறதுதான் கதை. முதல் படமே எனக்குப் பெரிய கிப்ட். நடிப்புக்கு ஸ்கோப் இருக்கிற ரோல்" என்று சந்தோஷமாகச் சொன்ன ஜெனிபரிடம் "சினிமாவுக்காக ஏன் பெயரை மாற்றிக் கொள்ளவில்லை" என்று கேட்டோம்.

"அப்பாவுக்கு எல்லாவற்றிலும் வெளிப்படையாக இருக்க வேண்டும். ஆடம்பரத்தை விரும்பாதவர். இவர்தான் சின்னா என்று சொன்னால் யாரும் நம்ப மாட்டார்கள். அவ்வளவு எளிமையாக



இருப்பார். அவரிடமிருந்து நான் கற்றுக் கொண்டது நடனம் மட்டுமல்ல. அவரது எளிமையையும் தான்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே கோரஸாய்க் கத்தியபடி பள்ளி முடிந்து வந்த தம்பிகள் அவரின் கழுத்தைக்கட்டிக் கொண்டார்கள். கொஞ்ச நேரத்தில் அக்கா ரெஜினா ஷூட்டிங் முடித்து வர, ஜெனியின் வீட்டில் ஒரு சின்ன திருவிழா தொடங்கிவிட்டது.

**விஷ்வல்தாசன்**

படங்கள் : **ஜரிஸ்**

✉ 'வாக்காளர்' சிறுகதை ரொம்ப யதார்த்தம். தரமான கதைகளைத் தருவதில் கல்கிக்கு இணை கல்கியே.

கரூர், பாரதி மகன்

✉ 'தேர்தல் ஃபாஷன் - டீனேஜ் ஃபாஷன்!' இருஷ் தொகுப்பு வெகு அருமை. கிராமப் புறங்களில்கூட குறைந்து வரும் மாமன் மகன் - அத்தை மகள் நையாண்டியைவிட வெகு அற்புதமாக இருந்தது இந்தக் காலத்துப் பிள்ளைகளின் வெளிப்படையான பேச்சு. ஹாட்ஸ் ஆப் டு யங்ஸ்டர்ஸ்.

கோவை, காசிவிஸ்வநாதன்

✉ கல்கியின் தலையங்கங்கள் மூலம் த.மா.கா.வுக்கு அறிவுறுத்தல்கள் கொடுத்தும் பய னில்லை என்று வட்ட மேஜையில் ஆதங்கப்பட்டுக் கொண்ட சிவகாசி வாசகரின் பெயரைப் பார்த்தால் அவரின் பெயரும் சிதம்பரம் : என்னே வித்தியாசமான ஒற்றுமை?

நெய்வேலி, ஸ்ரீகாந்த்

✉ 'வளர்ந்துவிட்ட இளைஞர்' கட்டுரையைத் தொடர்ந்து எல்.கணேசனின் பேட்டி அற்புதமாக இருந்தது. ஸ்டாலின் விஷயத்தில் நிரம்ப நடுநிலை வகித்தது 'கல்கியா அல்லது எல்.கணேசனா' என பட்டிமன்றமே வைக்கலாம்.

குட்டலாடம்பட்டி, மூர்த்தி

✉ அட்டையில் தேர்தல் ஸ்பெஷல் என தலைப்பிட்டு விட்டு, உள்ளே கிரிக்கெட் தகவல் களைத் தந்து கிரிக்கெட் ஸ்பெஷலாக்கிவிட்டீரே... தேர்தலும், கிரிக்கெட்டும் ஊழலைச் சார்ந்தது என் பதைச் சொல்லாமல் சொல்கிறீரோ...!

விசலூர், ஜி.ஜி.கிருஷ்ணன்

# சொல்லாமல் சொல்கிறீரோ?

✉ கல்கி இதழ் தி.மு.க. கூட்டணியை எதிர்க்கும் காரியத்தை ஆரம்பித்து வைத்திருக்கிறது. 39ம் பக்கத்தில் வைகோ.விற்கும் மு.க.ஸ்டாலினுக்கும் பனிப்போரைத் துவக்கி வைத்திருக் கிறது. அதே இதழில் தராசு கேள்வி பதில் பகுதியில் சிவகங்கை, ப.ராம்முருகன் கேட்ட கேள்விக்குத் தராசு, 'வரவேற்றுப் பாராட்டப்பட வேண்டிய நல்ல முடிவு' என பதில் கூறி அம்மாவுக்கு நேசக்கரம் நீட்டியிருக்கிறது.

மும்பை, ஜான்சாமுவேல்




வட்ட மேஜை

✉ சமீப காலமாக 'கல்கி' பத்திரிகை ஆளும் கட்சி சார்பு பத்திரிகை என எண்ணும் அளவுக்குத் தராசின் துலாக்கோல் ஒரு தலை பட்சமாக நடந்து வருகிறதோ் என நினைக்க வேண்டியுள்ளது. இனிமேலாவது தராசு நடுநிலை தவறாவண்ணம் நடந்தால் நாட்டுக்கு நல்லது.

சென்னை, கே.ரமேஷ்

# அக்கரை நாடுகளில் சித்திரைத் திருவிழா!

சித்திரை வந்தால் கல்யாணப் பத்திரிகை வந்துவிடும் தானே! தமிழ் நாட்டுக்கு மட்டுமல்ல தாய்லாந்து, பர்மா, கம்போடியா, லாவோஸ் ஆகிய நாடுகளிலும் அப்படித்தான். தமிழ்ப் புத்தாண்டு தினமே அவற்றுக்கும் புத்தாண்டு நாள்.

திருமணங்களையும் மங்கல நிகழ்ச்சிகளையும் புத்தாண்டில் நிச்சயிப்பதும் நடத்துவதும் அந்த நாடுகளில் நெடுங்காலமாக வழக்கத்தில் இருக்கிறது. தாய்லாந்தில் சித்திரைப் புத்தாண்டு 'சொங்கரான்' என்று அழைக்கப்படுகிறது. சூரியன் மேஷத்தில் பிரவேசிப்பதைக் குறிக்கும் 'சொங்கரான்' என்ற வடமொழிச் சொல்லே தங்கள் வருடத்தின் பெயர் என்று கூறுகின்றனர் தாய்லாந்து மக்கள். ஏப்ரல் பதிமூன்றாம் தேதியிலிருந்து மூன்று நாட்களுக்குத் தாய்லாந்து முழுவதிலும் கோலாகலமான புத்தாண்டுக் கொண்டாட்டங்கள். ஏழு நாள் வரை கூட நீடிக்கிறது.

### தண்ணீர்... தண்ணீர்!

தண்ணீர் இல்லாமல் 'சொங்கரான்' இல்லை. ஒருவிதத்தில் வட இந்திய ஹோலிப்பண்டிகையை நினைவுபடுத்தும் சடங்குகள். தெருவில் நடமாடும் யார் மீதும் தண்ணீரை வாரி அடிக்கலாம். உறவினர், அந்நியர், அதிகாரிகள், போலீஸ்காரர்கள் என்று யாராக இருந்தாலும் தப்ப முடியாது. தண்ணீர் அபிஷேகத்துக்கு ஆளானவர்கள் ஆத்திரம் அடைவதில்லை. அவரவரும் மகிழ்ச்சியான அனுபவமாகவே எடுத்துக் கொள்கிறார்கள்.

ஆனால் பர்மாவில் (இப்போது மியான்மர்) இஷ்டம் போல் தண்ணீரை வாரி அடிப்பதற்குக் கட்டுப்பாடு உண்டு. விளையாட்டு வினையாக மாறிவிடும் அளவுக்குப் போய்விடக் கூடாது என்பது அதிகாரிகளின் உத்தரவு. லாவோசிலும் அப்படித்தான். கொண்டாட்டம் குதூகலமாக இருக்கட்டும். ஆனால் குழப்பத்தையும் கலவரத்தையும் உண்டு பண்ணும் அளவுக்குப் போய் விடக் கூடாது என்பது லாவோஸ் அரசாங்கத்தின் எச்சரிக்கை!

கம்போடியாவில் தண்ணீர் விளையாட்டு 'தண்ணி' ஆட்டமாக மாறிவிடுவதுண்டு. புத்தாண்டு மகிழ்ச்சி, கேளிக்கைக்காக ஒயின் தயாரித்து விற்கப் படுவதுண்டு. அதில் நச்சுத் தன்மை கலந்து விடுவதால் உயிர்ப்பலி நிகழ்வது வழக்கம். 'சொங்கரான்' வரு முன்பே மதுபான வியாபாரிகளுக்கும் மக்களுக்கும் அதிகாரிகள் எச்சரிக்கை விடுப்பதும் கம்போடியாவில் வழக்கம்.



● கம்போடியா நடனம் ஒரு

### வாட்... வாட்!

இந்த நாடுகளில் 'சொங்கரான்' முதல்நாள் காலையில் எல்லா வயதினரும் வண்ண வண்ணமான புத்தாடை அணிந்து கோவில்களுக்குச் செல்கிறார்கள். தாய்லாந்திலும்



நின்றபடி நீரை வாரி வாரி இறைப்பார்கள். அந்தி சாயும் வரை அந்த நிகழ்ச்சி தொடரும். ஒரு துறவி அல்லது சமய குரு அங்கு வந்து சேர்ந்ததும் அவருடைய மேலங்கியில் தண்ணீரைத் தெளிப்பார்கள். அதற்குப் பிறகுதான் தண்ணீர் வீச்சு முடிவுக்கு வரும்.

'சொங்கரான்' புத்தாண்டுச் சடங்குகளைக் குறைவில்லாமல் நிறைவேற்றினால் ஆண்டு முழுவதும் வளம் பொங்கும் என்று மக்கள் நம்புகிறார்கள்.

'சொங்கரான்' விழா நாட்களில் தாய்லாந்திலும் கம்போடியாவிலும் ஏராளமான நிச்சய

• தாய்லாந்து நீர் விளையாட்டு

கம்போடியாவிலும் கோவிலையும் புத்த மடங்களையும் 'வாட்' என்று அழைக்கிறார்கள். புகழ்பெற்ற கம்போடிய ஆலயம் அங்கோர் வாட் என்று அழைக்கப்படுவது தெரிந்ததுதான்.

சொங்கரான் வழிபாட்டுடன் ஆலயங்கள், மடங்களில் உணவு, பூ, பழம், இனிப்புப் பண்டங்களின் வினியோகம் உண்டு.

எல்லா வீடுகளிலும் புத்தாண்டுக் கொண்டாட்டம் தூள் பறக்கும். இளவயதினர் மூத்தவர்களின் ஆசீர்வாதத்தைப் பெறுகிறார்கள். ஆசி பெறுமுன் பெற்றோர், மூத்தோர் கைகளிலும் தலையிலும் நறுமணம் கலந்த நீரை இளவட்டங்கள் ஊற்றுவது வழக்கம்.

வீட்டுச் சடங்கு முடிந்ததும் வீதிகளுக்குப் படையெடுப்பார்கள். தெருவில் வருவோர் போவோர் மீது தண்ணீரை வாரி அடிப்பார்கள். இப்படித் தண்ணீர் வீசுவது புத்தாண்டு வாழ்த்தின் அடையாளமாம்!

## ஆடல்... பாடல்!

வீதியுடன் விழா முடிவதில்லை. ஆற்றிலும் கால்வாய்களிலும் பெருங் கூட்டத்தைப் பார்க்கலாம். வயது வித்தியாசம் இல்லாமல் எல்லோருமே முழங்கால் அளவு தண்ணீரில்



• தாய்லாந்து ஆலயம்

தார்த்தங்கள். தொடர்ந்து திருமணங்களும் வைபவங்களும் நடக்கின்றன.

புத்தாண்டுப் பண்டிகையில் இந்திரனுக்கும் இந்த நாடுகளில் வழிபாடு நடத்துகிறார்கள். தாய்லாந்தைத் தக்கோலம் என்றும் கம்போடியாவை கம்போஜம் என்றும் அந்த நாளில் தமிழர்கள் அழைத்தார்கள். அந்த வரலாற்றுத் தொடர்பின் அடையாளமே இந்தப் புத்தாண்டுக் கொண்டாட்டம்!

— ஜே.எம்.சாலி

Dictionary !
Dictionary !
Dictionary !

# வர்த்தமானன் பதிப்பகம் வழங்கும் பல்வேறு அகராதிகள்

**அத்தனையும் அகராதிகளே !**

**ஆம் ! ஆறு அகராதிகள் !**

*முன்னர் வெளிவந்த அவை வேறு ; இப்போது வெளிவரும் இவை வேறு அவை ஆங்கிலம் கற்க வந்தவை ; இவை ஆங்கிலத்தில் புலமை பெற வருபவை !*

## 2. DICTIONARY OF IDIOMS AND PHRASES

**மரபுச் சொற்கள், தொடர்கள் அகராதி தமிழ்மொழி பெயர்ப்புடன்**

மரபுச் சொற்கள், தொடர்கள் காலங்காலமாக - வழி வழியாக வழங்கி வரும் சொற்கள். பொருள் அறிந்து அவற்றை எழுதும் போதும், பேசும் போதும் பயன் படுத்த வேண்டும். இத் தகைய சொற்கள், தொடர்கள் ஆங்கில மொழியில் ஏராளமாக இருக்கின்றன. ஆயினும் தமிழ் விளக்கத் துடன் வரும் அகராதி இஃது ஒன்றே !

ஆங்கில மொழியில் புலமை பெறப் பெரிதும் துணை செய்யும் இந்நூல் !

Dictionary !
Dictionary !
Dictionary !

## 1. DICTIONARY OF SYNONYMS AND ANTONYMS

**ஒத்த கருத்துடைய சொற்கள் எதிர்ச்சொற்கள் அகராதி**

ஒரே பொருளைத் தரும் சொற்கள் பல எம் மொழியிலும் உண்டு. அதுபோலவே எதிரான பொருள் தரும் சொற்களும் பல உண்டு. ஒரு பொருளைக் குறிக்கும் ஒரு சொல்லையே திரும்பத் திரும்பக் கூறும்போது படிப்பதற்கும் கேட்பதற்கும் அலுப்புத் தட்டும். மாறாக, ஒரே பொருளைத் தரும் வேறு வேறு சொற்களைக் கூறும்போது, உணர்ச்சி குன்றாமல் இருக்கும்; உற்சாகம் குறையாமல் இருக்கும். இங்கே கூடப் பாருங்கள், 'குன்றாமல்', 'குறையாமல்' என வரும் இரு சொற்கள் ஒரே பொருளைத் தந்து சுவை கூட்டும் பான்மையை! ஆங்கில மொழியில் BEAUTIFUL, EXCELLENT, BRILLIANT, FANTASTIC, MARVELLOUS, SUPERB, WONDERFUL போன்ற பல சொற்கள் ஏறக்குறைய ஒரே பொருளைத் தந்து உணர்ச்சிப் பிரவாகமாக இன்பம் பயக்கின்றன! இவை போன்ற ஏராள மான சொற்கள் பல இதில் உண்டு. ஆங்கில மொழியில் பெரும் புலமை பெற விரும்பு வோர்க்கு இந்நூலும் தேவையே !

## 3. DICTIONARY OF PROVERBS

**பழமொழிகள் அகராதி தமிழ் விளக்கத்துடன்**

பழமொழி என்பது நம் முன்னோர்கள், தங்கள் அனுபவத்தில் கண்ட அப்பழுக்கற்ற உண்மை யாகும். இதில் கற்பனைக்குச் சிறிதும் இடம் இல்லை. இப்பழமொழிகள் நம் வாழ்க்கைக்கு வழி காட்டும் இயல்பின. மேலை நாட்டுப் பழமொழி களுக்கு ஏற்ற தமிழ் மொழி பெயர்ப்பும், தேவை யான இடங்களில் விளக்கங்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. ஆங்கிலத்தில் புலமை பெற இந்நூலும் தேவையே !

## 4. DICTIONARY OF QUOTATIONS WITH TAMIL TRANSLATION
### பொன்மொழிகள் அகராதி – தமிழ் மொழி பெயர்ப்புடன்

பழமொழிகள் போலவே இந்தப் பொன்மொழிகளும் முன்னோர் அனுபவமொழிகளே ! அப்படியானால், பழமொழிக்கும் பொன் மொழிக்கும் உள்ள வேறு பாடு தான் என்ன என்ற கேள்வி எழும் அல்லவா ? பழமொழி என்பது நெடுங்காலமாக வழங்கி வருவது; இந்தப் பொன்மொழிகள் பிற் காலத்தில் எழுந்தவை ! மற்றபடி சிறப்பால்இரண்டும்உயர்ந்தவையே ! இத்தகைய பொன்மொழி களைத் தாங்கி நிற்கும் இந்நூலும் ஆங்கிலப் புலமை பெற தேவைதான் !

## 6. TAMIL - TAMIL DICTIONARY
### தமிழ் – தமிழ் அகராதி

உலகிலேயே பழம் பெருமை வாய்ந்த மொழிகளுள் மூதன் மையாக விளங்குவது, தமிழ் மொழி. கல்தோன்றி மண் தோன் றாக் காலத்தே மூன் தோன்றிய மூத்த மொழி நம்மொழி எனச் சான்றோர் இதன் பழைமையைச் சுட்டிக் காட்டி மகிழ்வர் ! தாம் அறிந்த மொழிகளிலேயே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம் எனப் பூரிப்படைகிறார், பாரதியார். இப்படி ஆயிரமாயிரம் ஆண்டுகளாக வளர்ந்து வரும் நம் அருமை மொழியில் உள்ள சொற்களின் பொருளை எளிதில் அறிய முடிவதில்லை. இந்த அகராதி உங்கள் கையில் இருந்தால் பழந் தமிழ் இலக்கியச் சொற்களாயி னும் பிற்காலச் சொற்களாயினும் யாவற்றிற்கும் இனிய எளிய பொருளை அறியலாம்.

## 5. TAMIL - TAMIL - ENGLISH DICTIONARY
### தமிழ் – தமிழ் – ஆங்கில அகராதி

சங்க காலம் எனப்படும் தொன்மைக் காலம் முதல் தற்காலம் வரையிலான ஏராளமான தமிழ்ச் சொற்களுக்கு எளிய தமிழ்ச் சொற் களும் அவற்றிற்குரிய ஆங்கிலச் சொற்களும் உண்டு. அதனுடன் அமையாது, அந்தச் சொற்களைஎப்படிவாக்கி யத்தில்பயன்படுத்து வது என்பதனை யும் விளக்குகிறது, இந்தத் தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி, மேலும் வீடு, கட்டிடங்கள், பறவைகள், நீர் வாழ்வன, ஒளி நிறக் கற்கள் ஆகியவற்றுக்கு உரிய ஆங்கிலச் சொற்கள் இந்நூலில் ஏராளமாக உண்டு.

1. DICTIONARY OF SYNONYMS AND ANTONYMS
ஒத்த கருத்துடைய சொற்கள் எதிர்ச்சொற்கள் அகராதி
2. DICTIONARY OF IDIOMS AND PHRASES
மரபுச் சொற்கள் - தொடர்கள் அகராதி தமிழ்மொழி பெயர்ப்புடன்
3. DICTIONARY OF PROVERBS
பழமொழிகள் அகராதி - தமிழ் விளக்கத்துடன்
4. DICTIONARY OF QUOTATIONS WITH TAMIL TRANSLATION
பொன்மொழிகள் அகராதி - தமிழ் மொழி பெயர்ப்புடன்
5. TAMIL - TAMIL - ENGLISH DICTIONARY
தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி
6. TAMIL - TAMIL DICTIONARY
தமிழ் - தமிழ் அகராதி

| | |
|---|---|
| 6 நூல்களின் விலை | ரூ. 650.00 |
| வர்த்தமானன் அறக்கட்டளை வழங்கும் உதவித்தொகை | 200.00 |
| | 450.00 |
| வர்த்தமானன் பதிப்பகம் வழங்கும் சலுகை | 150.00 |
| **சலுகை விலை** | ரூ. 300.00 |

இந்நூல்களைத் **தபாலில் பெற,** கடிதம் எழுதுக. நூல்களை V.P.P. மூலம் உடனே அனுப்புகிறோம். நூலின் சலுகை விலை ரூ. 300 + தபால் மற்றும் கட்டுச்செலவு ரூ.40 சேர்த்து ரூ.340 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம். **நேரில் பெற,** ரூ.300 செலுத்தி நூல்களை உடனே பெறலாம். நேரம் : காலை 9.30 முதல் இரவு 7.30 வரை. (உணவு இடை வேளையின்றி). ஞாயிறு விடுமுறை.

**வர்த்தமானன் பதிப்பகம்,**
ஏ.ஆர். ஆர். காம்ப்ளெக்ஸ், 141, வடக்கு உஸ்மான் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
(பனகல்பார்க் அருகில்) ✆ : 8142377

இந்த சட்டையைப் போட்டுகிட்டு அசத்திட மாட்டேன்...!

நான் அதுக்கு மேலே அசத்திட்டேன் பாரு....

வைகோ

213 தொகுதிகளில் தனித்துப் போட்டி

தமிழ்க்குடிமகன்



2001 ஏப்ரல் 15
விஷு சித்திரை 2
மலர் : 59
இதழ் : 37

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# வைகோவின் ஈகோ!

கேட்ட தொகுதி கிடைக்கவில்லை என்பதற்காக தமிழ்க்குடிமகன் அ.தி.மு.க.வில் சேர்ந்திருப்பது நகைப்புக்கிடமாகியிருக்கிறது.

'தி.மு.க.வில் ஸ்டாலினின் ஆதிக்கம் தலைதூக்கியிருக்கிறது. தொகுதி ஒதுக்கீடையெல்லாம் முடிவு செய்பவர் ஸ்டாலின்தான். இளையான்குடியை எனக்குத் தராததுகூட பரவாயில்லை; ஊழல் குற்றச்சாட்டு சுமந்து நிற்கும் கண்ணப்பனின் கட்சிக்கு அதை ஒதுக்கித் தந்ததுதான் வேதனை; அதை வேறு ஒரு தி.மு.க வேட்பாளருக்கு அளித்திருந்தால்கூட ஆட்சேபித்திருக்க மாட்டேன்' என்று தமிழ்க்குடிமகன் விளக்கமளிக்கிறார்.

கட்சியில் ஸ்டாலினின் செல்வாக்கு இன்று நேற்றைய விஷயமல்ல. நீண்ட நாட்களாகவே நிலவி வருவது. தமிழ்க்குடிமகன் இன்று திடீரென்று அதை ஆட்சேபிக்க வேண்டிய அவசியம் என்ன? அவருடைய கோபமும் வருத்தமும் தார்மிக அடிப்படையிலானது எனில், அவர் அ.தி.மு.க.வில் ஏன் போய்ச் சேர வேண்டும்? அதே அ.தி.மு.க.விலிருந்து புறப்பட்டு வந்தவர்தானே கண்ணப்பன்? ஊழல் குற்றச்சாட்டுத் தாங்கி நிற்கிறார் அ.தி.மு.க தலைவி. அவர் எந்த தொகுதி அளித்தாலும் அதில் போட்டியிடத் தயார் என்று தமிழ்க்குடிமகன்




எதற்காக அறிவிக்க வேண்டும்?

'இப்போது இளையான்குடியும் முக்கியம் இல்லை; நேர்மையும் முக்கியமில்லை; கொள்கையா, கிலோ என்ன விலை? தேர்தலில் நின்று எம்.எல்.ஏ ஆவது மட்டுமே முக்கியம்' என்கிற தமிழ்க்குடிமகனின் மனப்போக்குதான் வெளிச்சமாகியிருக்கிறது.

சரி, தேர்தலில் ஜெயிப்பாரா என்று கேட்டால், தி.மு.க வேட்பாளராக அவர் பெற்றிருக்கக்கூடிய வாக்குகளை, அ.தி.மு.க.வுக்குக் கட்சி மாறிய நிலையில் பெறுவது சந்தேகமே. அவருக்கு அ.தி.மு.க தொண்டர்கள் எவ்வளவு தூரம் உதவியும் ஒத்துழைப்பும் தருவார்கள் என்பது கேள்விக்குறிதான்.

ஜெயலலிதாவேகூட இன்று அவரை வரவேற்றுவிட்டு, நாளை அவரை ஒதுக்கிவிடக் கூடும். அவர் காலில் விழுந்தவர்களுக்கு முன்பு அந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது! அவ்வாறு நடந்தால், அரசியல் வட்டாரத்தில் தமிழ்க்குடிமகன் சீக்கிரமே காணாமல் போய்விடுவார். அதுதான் நிகர பலனாக அவருக்கு அமையும்.

தமிழ்நாட்டின் ஆதாயம் என்ன? தமிழ் மக்களுக்கு எது நல்லது? என யோசித்து ஆராயாமல் முடிவெடுத்திருக்கும் மற்றொரு தலைவர் மறுமலர்ச்சி திராவிட முன்னேற்றக் கழகப் பொதுச் செயலாளர் வைகோ!

கேட்ட தொகுதிகள் ஒதுக்கப்படவில்லை என்பதால் தி.மு.க கூட்டணியிலிருந்து வெளியேறியிருக்கிறது ம.தி.மு.க.

தனித்துப் போட்டியிட முடிவெடுத்து, தொகுதிகளை ஒதுக்குவதிலும் மும்முரமாகிவிட்டது.




தி.மு.க கூட்டணியில் இருந்திருப்பின் இருபத்தியோரு தொகுதிகளில் மட்டுமே போட்டியிட்டு, அவற்றுள் சிலவற்றையேனும் ஜெயித்த திருப்தியைப் பெற்றிருக்கலாம். இப்போதோ, பி.ஜே.பிக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகுதிகள் நீங்கலாக மற்ற தொகுதிகளில் ம.தி.மு.க போட்டியிடவிருக்கிறது. அவற்றுள் எத்தனை தொகுதிகளில் வெற்றி கிட்டக்கூடும் என்பது பற்றி எந்த ம.தி.மு.க தலைவரும் பேசுவதில்லை. தொகுதிகள் அதிகரிக்க அதிகரிக்க வெற்றி வாய்ப்பு குறையும். ஒப்புநோக்க புதியதும் சிறியதுமான ஒரு கட்சி தனது பலத்தை இவ்வாறு சோதித்துக் கொள்வதால் யாருக்கு என்ன பயன்? தி.மு.க அணி வாக்குகள் சிதறிப்போய் ஜெயலலிதாவின் வெற்றி வாய்ப்புகளை அதிகரிப்பதற்குத்தான் ம.தி.மு.கவின் இந்த முடிவு உதவும்.

தேர்தலையொட்டி வியூகங்கள் அமைக்கப்படும்போது கூட்டணியில் இடம் பெறும் கட்சிகளின் தலைவர்கள் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையையும் பரஸ்பர ஒத்துழைப்பையும் உறுதி செய்ய வேண்டும்.

அதிலும் தமிழ்நாட்டில் இன்று நிலவும் அரசியல் சூழலில் அ.தி.மு.க அணி ஜெயித்து ஆட்சிக்கு வருமானால், ஜெயலலிதா பேரிலான வழக்குகள் அனைத்தும் பழங்கதையாகி விடும். தமிழ்நாட்டின் எதிர்காலம் பெரிய கேள்விக்குறியாகிப் போகும்.

இந்த விஷயங்கள் வைகோவுக்கோ தமிழ்க்குடிமகனுக்கோ தெரியாது என்பதல்ல... ஆனால் அவர்கள் சுயநலத்தோடும் தன்மானம் என்கிற பெயரில் குறுகிய நோக்கோடும் தவறான முடிவெடுத்திருக்கிறார்கள்.

இனி வாக்காளர்கள் மனம் வைத்து, சந்தர்ப்பவாதிகளையும் சுயநலவாதிகளையும் இனம் கண்டு ஒதுக்கினால்தான் உண்டு. ○

''விடுமுறைக்காக ஜாலியா வந்திருக்கோம். இங்கேயும் ஹாலிடே ஹோம்வொர்க்னு என் உயிரை வாங்காதே!''

'' 'டைட்டானிக்'னு பேர் இருக்கும்போதே இந்தப் படகை எடுக்காதீங்கன்னு சொன்னேன்!''






''ஆபீஸ்ல முக்கால்வாசி பேர் கோடை விடுமுறை கேட்டதால ஆபீஸையே இங்க மாத்திட்டோம்...''

''இவங்க உலகச் சுற்றுப் பயணத்தில அப்பா, அம்மாவுக்கு மட்டுந்தான் சார்ஜ். குழந்தைகளுக்கு இலவசம். அதான் கூட போகிறது சொந்த பிள்ளைகளானு இன்ஸ்டன்ட் DNA டெஸ்ட் பண்றாரு!''







''பிடிங்க படுக்கை பாக்கேஜ்! இந்தாங்க டென்ட் பாக்கேஜ்! மூணு நாளைக்கு சாப்பாடு பேக்கேஜ் பிடிங்க!''

''அப்பவே சொன்னேன். பாக்கேஜ் டூர் வேண்டாம்னு...''



''டூர் நோட்டீசை சரியாப் பாருங்க. பனிமலை உச்சியைக் காட்டுவோம்னுதான் போட்டிருக்கு, கூட்டிக்கிட்டுப் போவோம்னு போடலை.''







# M.I.E.T

**MADRAS INSTITUTE OF ENGINEERING TECHNOLOGY**

Regd. No.560/99 No.385, Arcot Road, Kodambakkam, Chennai - 24.

*Admissions open for Regular / Postal Classes For 2001 - 2002 BATCH*

## DEGREE LEVEL COURSES (Equivalent to BE)

- ★ A.M.I.E., (India) Sec. A, Sec B
- ★ A.M.I.E.T.E. (Electronics & Telecom)
- ★ A.M.I.E.T.E. (Computer Science & Engg.)
- ★ A.M.I.E.T.E. (Information Technology)
- ★ A.M.Ae.S.I. (Aeronautical Engg.)
- ★ A.M.I. Chem.E. (Chem. Engg.)
- ★ A.M.I.A.E. (Automobile Engg.)
- ★ A.I.I.A. (Architectural Engg.)
- ★ A.M.I.M.E. (Mech. Engg.)
- ★ C.E.I. (London) Part I & II
- ★ Special Coaching for B.E. & B.Tech. Students

*Eligibility* : 10+2 (MPC) / Diploma / Degree

## DIPLOMA COURSES (3 Years) (Govt. Recognised)

★ Computer Science & Engg. ★ Electronics and Telecommunication Engg. ★ Mechanical Engg. ★ Production Engg. ★ Ref. & Air Conditioning Engg. ★ Automobile Engg.

*Eligibility* : 10th/S.S.L.C.; 10+2 with M.P.C. direct admission to II Year

## M.I.E.T. / I.T.I. NCVT COURSES (Govt. Recognised)

★ Ref. and Air Conditioning ★ Electrician ★ Instrument Mechanic ★ Fitter ★ Mechanic Motor Vehicle ★ Electronics ★ Mechanic Diesel

*Eligibility* : Pass in 10th / S.S.L.C.

## M.I.E.T. COMPUTERS

★ Software Engineering from MS(Dos) to RDBMS in different modules
★ DTP ★ Hardware Engineering

For Prospectus and application form send M.O. / D.D. or Cash in person for Rs.110/- for Degree / Diploma Courses and Rs.30/- for I.T.I. / Computer to "The Principal, M.I.E.T.", E-mail : tmgraja@md2.vsnl.net.in

HOSTEL FACILITY AVAILABLE FOR GIRLS AND BOYS

T.M. GUNARAJA, M.I.E., FIMechE.,
Director



# TMG College of Arts & Science

(Approved by Govt. of Tamilnadu and affiliated to the University of Madras)

Admn. Office : No.385, (New 10), Arcot Road, Kodambakkam, Chennai - 600 024

Tel : 4836965, 4723406 Fax : 4839064 E-mail : tmgraja@md2.vsnl.net.in

**Applications are invited for admission to the following courses :**

- B.C.A Computer Application
- B.Sc Computer Science
- B.Sc Maths
- B.B.A Business Administration
- B.Com Commerce

Prospectus and application form can be obtained from the Admn.office on payment of Rs.70/- by cash or Rs.90/- by D.D. in favour of "TMG College of Arts & Science" payable at Chennai.

TMG CAS is a modern Co - Educational College established near Chennai at No.85, Mudichur Road, Manimangalam, Chennai - 601 301.The College offers ideal environment, seperate Hostel facilities for girls & boys and bus facilities.

Er.T.M.GUNARAJA, M.I.E. F.IMechE.
CORRESPONDENT

Appu Ads

கற்பனையில்
ஓவியம்
வரையவேண்டுமா?



சிறப்புப் பயிற்சி உண்டு..

மாயா
சித்ராலயாவில்
தபால் மூலமாக
ஓவியம்
பயிலுங்கள்....

மாயா சித்ராலயா
B-225, 15 அவன்யூ, அசோக் நகர்
சென்னை - 600 083
தொலைபேசி:4891240

பண்டிட் D.கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும் பலத்திற்கும்

**அருணா**
ஸ்திரீகளின் ஆரோக்கியத்திற்கு



**சியவன ப்ராஷ்**
இருமலுக்கு

**ரக்த சோதக**
ரத்த விருத்திக்கு

1898 முதல் பிரசித்தி பெற்றது

**பால ப்ராஷ்**
குழந்தைகள் டானிக்

ஆயுர்வேதாஸ்ரமம் பிரைவேட் லிமிடெட்
155, G.N. செட்டி ரோட், தி.நகர்,
சென்னை - 600 017.
போன் : 91-044-8281381, 8214193
E-mail : drdesikacharulu@yahoo.com
Website : ayurvedasramam.com

தேவயானி தேவயானியாகவே வருகிறார்... அதாவது, தேவயானி என்ற பிஸி-பிஸி நடிகையாக. காதலன் விக்ரம்.

'வயல் காட்டில் நின்றுகொண்டு ஏரோப்ளேனை வேடிக்கைப் பார்க்கும் விவசாயக் குடும்பத்தில் பிறந்த உனக்கும், இருபத்தி நான்கு மணி நேரமும் ஏரோப்ளேனில் சுற்றி வரும் எனக்கும், ஏணி என்ன, ராக்கெட் விட்டாலும் எட்டாது' என்று விக்ரமின் காதலைக் காலால் போட்டு நசுக்கிவிடும் தேவ்ஸ், க்ளைமாக்ஸில் கிளீன் - போல்டாகி 'ஐ லவ் யூ' சொல்லிவிடுகிறார் என்பதுதான் கதை.

ஹீரோயின் சப்ஜெக்ட். தேவயானியின் நடிப்பில் புது தன்னம்பிக்கை தெரிகிறது. சொந்தக் குரலில் வேறு பேசி (கொஞ்சி) இருக்கிறார் உச்சரிப்பு சரோஜா தேவியை ஞாபகப்படுத்துகிறதோ?

விக்ரமின் அண்ணனாக சரத்குமார். முரமுரப்பான கதர் வேஷ்டி + கடுக்கன் + குங்குமப் பொட்டு + கோவைத் தமிழில் கம்பீரமான பேச்சு + கம்பீரமான நடிப்பு... அப்பாடா, காணாமல் போன சரத்குமார் கிடைத்துவிட்டார், காணாமல் போன அன்று இருந்த அதே 'செட்-அப்'பில்.

'தர்மபத்தினி' டயலாக் ஒன்றுகூட இல்லாமல், தனக்கும் சரத்குமாருக்கும் உள்ள நெருக்கத்தை, நெருக்கத்தின் ஆழத்தை வெளிப்படுத்தும் அண்ணியார் குஷ்பூவின் நயம், நியூஸ் - ரீடர் - பாஷையில் 'குறிப்பிடத்தக்கது!'

'கிரேன் - அப்', 'கிரேன்-டவுன்' என்று கிரேனிலேயே குடியிருக்கும் டைரக்டராக ரமேஷ் கண்ணாவும், சி.கே. சரஸ்வதியின் மில்லினியம் பதிப்பாக சுகுமாரியும் நம்மை அளவோடு சிரிக்க வைத்து வளமோடு படம் பார்க்க விடுகிறார்கள்.

இவர்களுடைய நடிப்பை எல்லாம் தூக்கிச் சாப்பிடுவதைப் போல் இருக்க வேண்டாமா விக்ரமின் நடிப்பு?

'உனக்கென உனக்கென பிறந்தேனே' பாட்டில் எஸ்.பி. பி குரலில் பொங்கும் உணர்ச்சியில் பத்தில் ஒரு பங்கைக் கூட விக்ரமால் பிரதிபலிக்க முடியவில்லையே...!

முதல் பாதியில், அண்ணனின் துண்டையும் அண்ணியின் முந்தானையையும் பிடித்துக் கொண்டு அலையும் சூழ்நிலை என்பதால், நடிப்பதற்கு ஸ்கோப் இல்லாமல் விக்ரம் நடிக்கவில்லை. மறுபாதியில், ஸ்கோப் இருந்தும் நடிக்கவில்லை. பலன், அவர் மேல் ஈவு இரக்கமோ அவருடைய காதல் வெற்றி அடைய வேண்டும் என்ற துடிப்போ நமக்குத் துளிகூட ஏற்படாமல் தேவயானியின் மனநிலையிலேயே நாமும் இருக்கிறோம். தேவயானிக்காவது, க்ளைமாக்ஸில் மனத்தை மாற்றிக் கொள்ள வேண்டிய நிர்பந்தம். நமக்கு அதுவும் இல்லை. போதாதற்கு, விக்ரமின் அண்ணன் பெரிய புள்ளி என்று தெரிந்த உடன்



# ஒன்னுக்கும் மண்ணுக்கும்

தேவயானியின் மனத்தில் காதல் முளைப்பது...

பெண்களைப் புண்படுத்துகிறது!

- ○ க்பெயில்
- ○ ஜஸ்ட் பாஸ்
- ● ஆவெரஜ்
- ○ அபவ் ஆவெரஜ்
- ○ டிஸ்டிங்ஷன்

— கிருஷ்ணா சிதம்பரம்



# கடவுளின் தேசம்..!

பச்சை பசேலென்ற பின்னணியில் சலசலக்கும் ஓடைகள்; மிருகங்கள் வளையவரும் அடர்ந்த காடுகள்; அழகான பீச்சுகள்; 'சில்' என்ற ரம்யமான மலைப்பிரதேசங்கள்; இடையிடையே பரபரப்பான நகரங்கள்... இவை அனைத்தும் ஒன்றுக்கொன்று, இரண்டு மணி நேரப் பயண இடைவேளையில். ஆசியாவிலேயே மிக அழகான டூரிஸ்ட் ஸ்பாட்டாகக் கருதப்படும் கேரளாதான் கல்கியின் இந்த வருட ஹாலிடே சாய்ஸ்!

"கேரளாவைப் படைக்கும் பொழுது மட்டும், நடுநிலை வகிக்காமல், பாரபட்சத்தோடு இயற்கை அழகை வாரி வழங்கி விட்டான் இறைவன். அதனால்தான் 'காட்ஸ் ஓன் கன்ட்ரி' என்ற ஸ்லோகனை வைத்துக் கொண்டோம்!'' என்கிறது கேரளா டூரிஸம் டெவலப்மெண்ட் கார்ப்பரேஷன், பெருமை பொங்க.

அக்டோபர் - மார்ச்தான் சீசன் என்று சொல்லப்பட்டாலும் ஆஃப்-சீசனில் கேரளாவைப் பார்ப்பதில் ஒரு கஷ்டமும் இல்லை. என்ன, குளிர்ச்சி சற்றுக் குறைச்சலாக இருக்கும், அவ்வளவுதான். 40 டிகிரி வெய்யிலைச் சர்வசாதாரணமாக எடுத்துக் கொள்ளும் தமிழ்நாட்டு வாசிகளுக்கு இது ஒரு பெரிய விஷயமே இல்லை. அதோடு, ஆஃப்-சீசன் ரேட்டுக்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டால், பாதிக்குப் பாதி செலவில் கேரளாவை 'ஜம்'மென்று ஒரு ரவுண்டு வந்து விடலாம்!

கேரளாவின் விதவிதமான அழகுப் பிரதேசங்களில், சாம்பிளுக்கு ஒவ்வொன்று...



### தேக்கடி

குமிளியிலிருந்து கிளம்பும் மினி பஸ்ஸில், மிளகு, ஏலக்காய்த் தோட்டங்களுக்கு ஊடே குலுங்கிக் கொண்டு போனால் இந்தியாவிலேயே அழகான வைல்டு லைஃப்

பார்க்குக்குப் போய்ச் சேர்ந்து விடலாம். தேக்கடியைச் சுற்றி இருக்கும் பெரியார் வைல்டுலைஃப் சாங்சுவரி.

இங்குள்ள மிருகங்களைப் பார்க்க ஒரு த்ரில்லிங்கான வழி என்ன தெரியுமா? அங்குள்ள காட்டு பங்களாக்களில் ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொள்வது!

ஒன்றிரண்டையும், காலை 7.00 மணி ரைடிலும் மாலை 4.00 மணி ரைடிலும் அதிர்ஷ்டமிருந்தால் பார்க்கலாம். ஆனால் டூரிஸ்டுகளின் கச்மூச்சிலும் மோட்டர்போட்டின் என்ஜின் சத்தத்திலும் பயந்து ஓடிவிடும் மிருகங்களை மிஸ் பண்ணாமல் இருக்க, டைனாகுலர்கள் அவசியம்.

மிருகங்கள் ஒரு பக்கம் ஓடையின் சலசலப்பும், குரங்குகளின் தாவுதலால் உரசும் இலைகளின் சத்தமும் பறவைகளின் கீச்கீச்சும் ஒரு ரம்மியமான சூழ்நிலையை ஏற்படுத்துவது சத்தியம்.

காலை 7:30 மணிக்கு 'ஜங்கிள் வாக்' உண்டு. கலர்கலரான பட்டாம்பூச்சிகள், பச்சைக் கிளிகள், புள்ளிமான்கள் இவற்றோடு அரட்டை அடித்துக் கொண்டே வாக் போகலாம், கைடுகளின் துணையோடு.

கே.டி.டி.ஸி.யின் ஆரண்யநிவாஸில் தங்குபவர்களுக்கு யானை - ரைடு கூடுதல் போனஸ்!

## கோவளம்

கால் விரல்களில் கிச்சு-கிச்சு மூட்டும் வழுவழுத்த வெள்ளை மணல். முன்னறிவிப்பு இல்லாமல் திடீர் - திடீர் என்று அஸ்தமனமாகி விடும் சூரியன். கடலின் நீலமும் தோப்புகளின்

(இவற்றிற்கு ஏக மவுசு, அட்வான்ஸ் புக்கிங் இல்லாமல் முடியாது) பகலில், ஜன்னல்களை உரசிக் கொண்டு போகும் மிருகங்களைப் பார்த்து, இரவில் அவற்றின் உறுமல்களைக் கேட்டால் கை - கால்கள் ஜில்லிட்டுப் போய்விடும்.

'துணிச்சலா- கிலோ என்ன விலை' பேர்வழிகளுக்கு இருக்கவே இருக்கிறது, மோட்டர்போட்ரைடு. அங்கு இருக்கும் 750 யானைகளில் சிலவற்றையும் 35 புலிகளில்



இருக்கட்டும். படகுச்சவாரியின் போது ஏலக்காய் தோட்டங்களிலிருந்து வீசும் நறுமணமும்,

பச்சையும் போட்டிவிடும், வண்ண போஸ்ட்கார்டுக்காகவே கடவுள் சிருஷ்டித்த கடற்கரைக் கிராமம்.

கலப்படமற்ற ஓஸோனைச் சுவாசிக்க படையெடுக்கும் வெளிநாட்டு டூரிஸ்டுகள்; ஃபாரின் அழகிகளை ஆராதிக்க குழுமியபடி இருக்கும் லோக்கல் ரோமியோக்கள்.

கோவளத்தின் பீச்சுகளைப் பற்றிய 'ஸ்டார்' அம்சம் – ஆயுர்வேத மசாஜ். எண்ணெயைத் தளர தளரத் தடவி விட்டு ஒருத்தர் நமக்கு மசாஜ் செய்து விடும் பொழுது கிடைக்கும் ரிலாக்சேஷன்... அடேங்கப்பா, அபாரம்! ஒரு மணி நேர மசாஜுக்கு 300 ரூபாய். 21 நாட்களுக்கு , வாசனை எண்ணெய்களால் நரம்புகளுக்குப் புத்துணர்ச்சி ஊட்டும் ஸ்பெஷல் மசாஜ்களும் உண்டு.. ரசாயான சிகிட்ஸா, காயகல்ப சிகிட்ஸா என்ற நாக்கைச் சுளுக்க வைத்துவிடும் பெயர்களோடு.

கோவளம், இன்று பல மில்லியன் டாலர்களை இந்தியாவில் குவிக்கும் மேஜிக் டூரிஸ்ட் ஸ்பாட். குறிப்பாக, மாதக்கணக்கில், வாயில் நுரை தள்ள, இந்தியாவை வலம் வரும் ஐரோப்பிய டூரிஸ்டுகள் ரெஸ்ட் எடுக்க, தலைதெறிக்க ஓடிவரும் 'ஸ்தலம்'!

## குமரகம்



***1900*** கி. மீட்டருக்கு நீளும் பேக்வாட்டர்ஸ் எனப்படும் கால்வாய்கள்... கிராமங்களில் திடீர் திடீர் என்று முளைப்பதும், கள்ளத்தனமாக கடலோடு கலப்பதும், பிறகு திரும்ப குடியிருப்புப் பகுதிகளில் தலைகாட்டுவதுமாய்.

பேக்வாட்டர் ஃபேவரிட் – குமரகம்.

சூரியனின் ஒளியில் பொன்னிறமாய் மின்னும் வயல்களையும் சோம்பலாக அசைந்தாடும் தென்னை மரங்களையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே படகில் போகும் நம்மை, கால்வாய் ஓரத்தில் அரிசி புடைக்கும் அம்மணிகள் கண்டுகொள்ளாமல் வேலையில் குறியாக இருப்பது வேடிக்கை. சரக்குகள் சகிதம் மார்க்கெட்டுக்குப் போகும் வியாபாரிகளை ஏந்திச் செல்லும் படகுகள்; சொந்தக்காரர்களை விசிட் செய்ய குடும்ப சமேதராக கிளம்பி விட்டவர்களைச் சுமந்து செல்லும் படகுகள்; நம்மைப் போல டூரிஸ்டுகளை அழைத்துப் போகும் படகுகள் – இப்படிப் பல காரணகாரியங்களோடு போனவண்ணம், வந்தவண்ணம் இருக்கின்றன இவை. கன்னி (கட்டம் போட்ட) முண்டுகளோடு ஆண்களுக்கு நாங்கள் சளைத்தவர்கள் அல்ல என்று வேகவேகமாகப் படகோட்டிச் செல்லும் பெண்மணிகளைப் பார்க்க பெருமையாய் இருக்கிறது.

கோடைக்குக் கோடை விசிட் செய்யும் சைபீரியன் கொக்குகளும் வாத்துகளும் குக்கூ பறவைகளும் தஞ்சமடையும் பறவை சாங்க்சுவரி வெகு பிரசித்தி.

அதைவிட பிரசித்தம், படகு வீடுகள். வரவேற்பறை, படுக்கையறை, சமையலறை (சமையற்காரர்கள் உட்பட) என்று சகல வசதிகளோடு இருக்கும் போட்ஹவுஸ்கள். போட்ஹவுஸில் இருந்தபடியே மீன்களைப் பிடித்து மீன் வறுவல் செய்து தருகிறார்கள் இந்த எக்ஸ்பெர்ட் சமையல்காரர்கள். ஆப்பம்,

கவலையை மறந்து வாய்விட்டுச் சிரிக்க

ஹாஸ்யச் சக்ரவர்த்திகள்

# எஸ்.வி.வி. தேவன் சோ மெரீனா

எழுதிய

## நகைச்சுவைப் புத்தகங்கள்



### எஸ்.வி.வி.

| | |
|---|---|
| ராஜாமணி | 75.00 |
| ரமணியின் தாயார் | 40.00 |
| சபாஷ்! பார்வதி! | 15.00 |
| செல்லாத ரூபாய் | 28.50 |
| கோபாலன் ICS | 43.50 |
| வாழ்க்கையே வாழ்க்கை | 30.00 |
| ராமமூர்த்தி | 55.00 |
| புதுமாட்டுப் பெண் | 8.00 |
| At a Dinner | 16.00 |
| Marriage | 12.00 |

### தேவன்

| | |
|---|---|
| துப்பறியும் சாம்பு I | 75.00 |
| துப்பறியும் சாம்பு II | 80.00 |
| ஜஸ்டிஸ் ஜகந்நாதன் I&II | 140.00 |
| மிஸ்டர் வேதாந்தம் I&II | 160.00 |
| ஸி.ஐ.டி. சந்துரு I&II | 145.00 |
| லக்ஷ்மி கடாக்ஷம் I, II & III | 210.00 |
| கோமதியின் காதலன் | 56.00 |
| மைதிலி | 39.00 |
| ஸ்ரீமான் சுதர்சனம் | 65.00 |
| ராஜத்தின் மனோரதம் | 50.00 |
| மிஸ் ஜானகி | 75.00 |
| கல்யாணி | 55.00 |
| நடந்தது நடந்தபடியே | 33.00 |
| சின்னஞ்சிறு கதைகள் | 39.00 |
| மனித சுபாவம் | 33.00 |
| பல்லிசாமியின் துப்பு | 37.00 |
| சீனுப்பயல் | 36.00 |
| ஜாங்கிரி சுந்தரம் | 32.00 |
| போக்கிரி மாமா | 45.00 |
| பார்வதியின் சங்கல்பம் | 30.00 |
| விச்சுவுக்குக் கடிதங்கள் | 32.00 |

### சோ

| | |
|---|---|
| கூவம் நதிக்கரையினிலே II | 45.00 |
| கூவம் நதிக்கரையினிலே III | 27.00 |
| எங்கே பிராமணன்? | 85.00 |
| துக்ளக் படமெடுக்கிறார் | 30.00 |
| காமராஜை சந்தித்தேன் | 33.00 |
| முகமது பின் துக்ளக் | 21.00 |
| யாருக்கும் வெட்கமில்லை | 23.25 |
| இந்தியா எங்கே போகிறது? | 12.00 |
| அதிகப் பிரசங்கம் | 32.00 |
| துக்ளக் தலையங்கங்கள் | 25.00 |
| இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | 37.50 |
| இன்பக் கனா ஒன்று கண்டேன் | 14.00 |
| துக்ளக் கேள்வி – பதில் I | 24.00 |
| துக்ளக் கேள்வி – பதில் II | 45.00 |
| திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 30.00 |
| சாதல் இல்லையேல் காதல் | 41.00 |
| வந்தே மாதரம் | 72.00 |
| உண்மையே உன் விலை என்ன? | 28.00 |
| உறவுகள் இல்லையடி பாப்பா | 20.00 |
| புரட்சி கீதை | 18.00 |
| சம்பவாமி யுகே யுகே | 30.00 |
| மனம் ஒரு குரங்கு | 27.00 |
| ஏன் கூடாது? | 27.00 |

### மெரீனா

| | |
|---|---|
| தனிக் குடித்தனம் | 36.00 |
| சாந்தி நீ எங்கே? | 40.00 |
| கால் கட்டு | 36.00 |
| சாமியாரின் மாமியார் | 35.00 |
| மாப்பிள்ளை முறுக்கு | 50.00 |
| அடாவடி அம்மாக்கண்ணு | 28.00 |
| எங்கம்மா | 55.00 |
| அப்பா ஒரு அப்பாவி | 28.00 |
| நேர்மை | 60.00 |
| நாடகம் போட்டுப் பார் | 15.00 |
| ஊர் வம்பு | 28.00 |
| கல்யாண மார்கெட் | 30.00 |
| வடபழனியில் வால்மீகி | 30.00 |
| மாமியார் மெச்சிய மாப்பிள்ளை | 32.00 |
| சீதா கல்யாணம் | 28.00 |

### ஜி.எஸ். பாலகிருஷ்ணன்

| | |
|---|---|
| சிரிங்க சார்! | 40.00 |

### 'துக்ளக்' சத்யா

| | |
|---|---|
| ஸ்மைல் ப்ளீஸ் | 30.00 |
| நையாண்டிக் கட்டுரைகள் | 28.00 |

## அல்லயன்ஸ் கம்பெனி

(நூற்றாண்டு காணும் முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலாப்பூர், சென்னை–600 004

போன் : 494 13 14 – www.alliancebook.com.

ஓலன், அவியல், தோரென், இஞ்சி-தயிர், பிரதமன் என்ற சகல கேரள ஸ்பெஷல்களையும் மலையாளத்தில் சம்சாரித்துக் கொண்டே விருந்து படைக்கிறார்கள்.

ஒருநாளைக்கு 3000 ரூபாய் என்றிருந்த வாடகை வாஜ்பாய் விசிட்டுக்குப் பிறகு ஏறிவிட்டது!

## கொச்சின்

எர்ணாகுளத்திலிருந்து 'ஃபெரி' என்று சொல்லப்படும் படகில் இருபது நிமிடப் பயணம். போர்ச்சுகீஸ் டிசைன் வீடுகள். ஐரோப்பிய ஸ்டைல் சர்ச்சுகள். வளைந்து நெளியும் தெருக்கள். துறைமுகத்தில் அணிவகுக்கும் படகுகள்.

பிரம்மாண்ட கம்பங்களில் கட்டித் தொங்க விடப்பட்டிருக்கும் 'சைனீஸ் ஃபிஷிங் நெட்ஸ்' என்ற மீன் பிடிக்கும் வலைகள் இயங்கும் விதம் வெகு சுவாரஸ்யம்.

'கதகளி' நடனத்தை மிஸ் பண்ணினாலும் கதகளி கலைஞர்களைத் தூங்கவைத்து மேக்-அப் போடும் விந்தையைப் பார்க்க மறக்கக் கூடாது.

## மூணாறு

ஊட்டி கொடைக்கானலைப் போல ஒரு மலைப்பிரதேசம். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பச்சைப் பசேலென்ற தேயிலைத் தோட்டங்கள்; பல வண்ணங்களில் கொத்துக் கொத்தாகப் பூத்துக் குலுங்கும் மலர்கள் – 12 வருஷத்துக்கு ஒருமுறை பூக்கும் நீலக்குறிஞ்சி உட்பட.

(அடுத்து 2006-ல்தான் பூக்குமாம்!)

யூகலிப்ட்ஸ் வாசனையோடு ஜில் என்று முகத்தில் அடிக்கும் காற்று... இவற்றோடு, போட்டிங், சைக்ளிங், டிரெக்கிங் என்ற மலைப் பிரதேசங்களுக்கு உரித்தான அத்தனை பொழுதுபோக்கு அம்சங்களும் சேர்ந்து மூணாறை ஒரு ஃபேவரிட் ஹனிமூன் ஸ்பாட்டாக ஆக்கிவிட்டதில் என்ன ஆச்சர்யம்?

**என்ன, கல்கி வாசகர்களே, நீங்கள் எல்லாம் கேரளத்துக்குப் போகுவான் தய்யார் ஆனோ?**

— கிருஷ்ணா சிதம்பரம்

# தேன் கூடு!

வாசகர்களே,
இது உங்கள் பக்கம்.
இதை சுவாரசியமாக்கப் போவதும் நீங்கள்தான்.
இந்த வாரத் தேன்கூட்டை, வழக்கமாய்த் துணுக்கு எழுதும் வாசகர்கள் உருவாக்கியிருக்கிறார்கள். புதிய வாசகர்களை வரவேற்கிறோம்.
ஒவ்வொரு தேன்சொட்டும் சுவைக்கேற்ற சன்மானம் பெறும்!

## ஹால் டிக்கெட்டுக்கு பூஜை!

இந்திரா நகர் இந்து சீனியர் செகன்டரி பள்ளியில், இந்த ஆண்டு தேர்வு எழுதிய



பத்தாம் வகுப்பு மற்றும் ப்ளஸ்டு மாணவ மாணவிகளுக்குப் பள்ளி வளாகத்தில் அமைந்திருக்கும் விநாயகர் கோயிலில் விசேஷப் பூஜைகள், ஹோமங்கள் செய்து, பள்ளி முதல்வர் வெங்கடாசலம் தம் கையால் ஆசி வழங்கி ஹால் டிக்கெட்டுகள் தந்தார்.

- வி. பச்சை, சென்னை - 85.

---

உச்ச நீதிமன்றம், உயர்நீதிமன்றங்கள் மற்றும் மாவட்ட நீதிமன்றங்களில் தேங்கியுள்ள வழக்குகளின் எண்ணிக்கை ஒரு நீதிபதிக்கு 833 என்ற அளவில் உள்ளது...!

— ராஜி ராதா




## இரண்டு மாதம் நடந்து...

உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த அரசு அதிகாரியான ஜல் நிகாம் என்பவரை 1980 ஆம் ஆண்டு அலிகார் என்ற இடத்திலிருந்து டேராடூனுக்கு மாற்றினார்கள். புது ஊருக்குப் போகத் தனக்குப் பிரயாணப்படி வேண்டும் என்று பலமுறை இவர் கேட்டும், மேலதிகாரிகள் கொடுக்கவில்லை. பிறகு

## கோல மாவு...

பிரம்பு நாற்காலிகளை சோப்பு நீரினால் கழுவி பிறகு உப்பு கலந்த நீரில் கழுவினால் சுத்தமாகி விடும்.

- மழைக்காலத்தில் ஜன்னல் கதவுகள் சட்டத்தோடு முட்டிக் கொண்டு பிரிய மறுக்கும். சிறிது கோல மாவை உப்புத் தூளுடன் கலந்து ஜன்னல் விளிம்பில் தூவுங்கள். சட்டம், ஜன்னலை எளிதில் விட்டுவிடும்.

— பா. அச்சுதன்



இரண்டு மாதங்கள் வரை இவரைப் பற்றி ஒரு தகவலும தெரியவில்லை. பின்னர்தான் தெரிந்தது. அந்த இரண்டு மாதத்தில் அவர் நடந்தே புது ஊருக்கு வந்த சேர்ந்த விஷயம்!

– கே.வீ. இராஜேந்திரன்,



## கழுதைக்கு நினைவுச் சின்னம்!

கோவேறு கழுதைக்கு நினைவுச் சின்னம் என்றால் ஆச்சரியமாக இல்லை...? அப்படியொரு நினைவுச்சின்னத்தை எழுப்பி சாதனை படைத்திருக்கிறார்கள் பூனாவைச் சேர்ந்த ஹாப்கின் பார்மா மருந்து நிறுவனத்தினர். பாம்பு கடிக்கு மருந்து தயாரிக்கத் தேவையான இரத்தத்தை இந்தக் கழுதையிடமிருந்து 23 வருடங்களாக எடுத்து வந்தாம் இந்த நிறுவனம்... எடுத்த இரத்தத்தின் அளவு சுமார் 4520 லிட்டராம். பாம்பு விஷத்திலிருந்து பல மனித உயிர்களைக் காப்பாற்ற உதவிய இந்தக் கழுதை சமீபத்தில் இறந்துவிட, நன்றிக்கடனாக நினைவுச் சின்னம் எழுப்பியிருக்கிறார்கள். கழுதை கெட்டால் நினைவுச்சின்னம்!



தக்காளியை உணவில் சேர்த்துக் கொள்ளும் பழக்கம் கி.பி. 1860 ஆண்டுக்குப் பிறகே ஏற்பட்டது. அதற்கு முன்பெல்லாம், தக்காளி சாப்பிட்டால் இறந்து விடுவோம் என்ற மூடநம்பிக்கை இருந்தது. அமெரிக்க நாட்டிலே ஜான்சன் என்பவர் 'தக்காளி நல்ல உணவு, சாப்பிட்டால் மரணம் உண்டாகாது என்று சொன்னதோடு, சாப்பிட்டும் காட்டினார். அவர் சாப்பிடத் தொடங்கியதும், அவருக்கு உடனடி மருத்துவ உதவி செய்ய ஆம்புலன்ஸ் தயார் நிலையில் வைக்கப்பட்டிருந்தது!

வைட்டமின் 'சி' சத்தும், பேரிச்சம் பழத்துக்கு இணையான இரும்புச் சத்தும் உள்ள தக்காளி, ரத்தத்தைச் சுத்தம் செய்யும்; நோய்க் கிருமிகளை வெளியேற்றும்.

– பத்மா தேசிகன்,
பெங்களூர் – 86.




மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மன் திருக்குளத்தில் மீன்கள் கிடையாது. மீன்கள் வளரவும் வளராது. கோபுரங்கள் அதிகமுள்ள கோயிலும் இதுவே. மொத்தம் 14 கோபுரங்கள்.

## விழுந்து கும்பிடுவது எப்படி?

கோயில்களில் பலி பீடம், கொடிமரம் அருகே மட்டும் விழுந்து கும்பிடலாம். மற்ற இடங்களில் அப்படிச் செய்யக் கூடாது. கிழக்கு, மேற்கு நோக்கிய கோயில்களில் வடக்கு முகமாகவும், வடக்கு, தெற்கு நோக்கிய கோயில்களில் கிழக்கு முகமாகவும் விழுந்து நமஸ்கரிக்க வேண்டும்.

- கோவை எஸ். கோவிந்தராசன்.



**கிச்சன் கிளினிக்!**

# தேன், தேன், தித்திக்கும் தேன்!

சில நோய்களைக் குணப்படுத்த, பலவிதமான மருந்துகளைக் கொடுக்க வேண்டியிருக்கும். ஆனால், ஒருசில மருந்துகளை, எந்த வியாதிக்கும் வெவ்வேறு காம்பினேஷனில் கொடுத்து, குணப்படுத்திவிட முடியும். அது மாதிரியான சிரஞ்சீவித்துவமான ஒன்றுதான் தேன்!

மனிதனுக்கு வரும் நோய்களில் பெரும்பாலானவை பித்தம், கபம், வாய்வு சம்பந்தமானவைதான். எனவே, எந்த நோயானாலும் சரி, அதற்குரிய மருந்தை, பல மருத்துவக் குணம் கொண்ட தேனில் குழைத்துக் கொடுப்பது சித்த மருத்துவத்தில் மரபு. இதில் வயது வித்தியாசமே கிடையாது. சர்க்கரை நோய் உள்ளவர்கள் மட்டும், தேன் சாப்பிடக் கூடாது.

சித்த மருத்துவத்தில், அனுபானம் என்று ஒரு மரபு உண்டு. எந்த மருந்தானாலும் திரவத்துடன் சேர்த்து உட்கொள்வது. சித்த மருந்துகளை, தண்ணீருடன் சாப்பிடாமல், பால் அல்லது தேனுடன் சேர்த்துச் சாப்பிடச் சொல்வோம். மருந்தின் சக்தி, உடனடியாக, உடலால் கிரகித்துக் கொள்ளப்பட வேண்டும் என்பதுதான் இதன் காரணம்.

தேன் மிகச் சிறந்த முறையில் ரணத்தை ஆற்றும் குணம் படைத்தது. வாய் தொடங்கி, உணவுப் பாதை, சிறுநீரகப் பாதை வரை எங்கே புண் என்றாலும் தேன் சாப்பிட்டால், புண் உடனடியாக ஆறிவிடும். உட்புறப் புண்கள் மட்டுமில்லை; வெளிக் காயங்களுக்கும் தேனைத் தடவலாம். வெட்டுக்காயம், தீப்புண் உட்பட எந்தவிதமான காயம் என்றாலும், அதன் மேல் தேனைத் தடவிக் கொண்டே இருந்தால், காயம் சீக்கிரமே ஆறிவிடும். அது மட்டுமில்லை, தழும்புகள் கூட ஏற்படாது.

என் அனுபவத்தில், படுத்த படுக்கையாகக் கிடக்கிற பல நோயாளிகள் படுக்கைப் புண் (bed sore) வந்து அவதிப்படுகிறபோது,




மூலிகைமணி
டாக்டர். க. வேங்கடேசன்
டாக்டர் க.வே. அபிராமி

தேனைப் பயன்படுத்திய சிகிச்சையைச் சிபாரிசு செய்திருக்கிறேன். டாக்டர்களே ஆச்சரியப்படுகிறாற்போல, நிவாரணம் கிட்டியுள்ளது.

இன்று கடைகளில், சுத்தமான தேன்என்று விற்கப்படுவது, அத்தனை சுத்தமானது அல்ல; சர்க்கரைப் பாகுகலந்த கலப்படத் தேன்தான் என்பது என் அனுபவம். நாம் வாங்கும் தேன் சுத்தமானதுதானா என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது?

''நம்ம கபாலி முதுகுல என்னடா போஸ்ட்டரு?''
''தேர்தல் நேரம்; நெனச்ச எடத்துல படுத்துத் தூங்காதேன்னு சொன்னா கேட்டாத்தானே!''
– ஆர். எல். நாராயணசாமி

ஒரு தம்ளர் தண்ணீரில், ஒரு சொட்டுத் தேனை விடுங்கள். அந்த ஒரு சொட்டுத் தேன், மெள்ள, மெள்ள அப்படியே மூழ்கி, தம்ளரின் அடிப்பகுதிக்குச் சென்று, அதன் பிறகு மெதுவாக நீரில கரைய வேண்டும். கலப்படத் தேன், தண்ணீரில் விடப்பட்டவுடன், கரைந்து விடும்.

சுத்தமான நல்ல தேன் பார்க்க, வெளிர் மஞ்சள் நிறத்தில் இருக்கும்.

சுத்தமான தேனை, பிளாட்டிங் பேப்பரில் சில சொட்டுகள் விட்டால், அதை பிளாட்டிங் பேப்பர் உறிஞ்சாது. இந்த முறையிலும், தேன் சுத்தமானதுதானா என்று பரிசோதித்துப் பார்க்கலாம். தோட்டங்களில் தேனீப் பெட்டி அமைத்து, தேனீக்கள் வளர்த்து, அதன் மூலமாக சேகரிக்கப்படும் தேன்தான் பெஸ்ட்.

தேன் எடுக்கப்பட்டவுடன், ஆறு மாதத்துக்குள், அதனைப் பயன்படுத்தினால்தான் நல்லது. அதன்பின் அது கெட்டுப் போய் விடும் சாத்தியம் உண்டு. தேன் கெட்டுப் போய் விட்டது என்பதை எப்படிக் கண்டு பிடிப்பது? நாள்பட்ட தேனின் கலர் பழுப்பு நிறமாக இருக்கும். அது மட்டுமில்லை. விரலால் தொட்டு, நாக்கில் வைத்தால், புளிப்புச் சுவை தெரியும். இதுபோல அறிகுறிகள் கொண்ட தேனை, பயன்படுத்தாமல் தவிர்த்து விடுங்கள்.

தேன் சம்பந்தப்பட்ட ஹெல்த் டிப்ஸ் சில:

1. தாகம், உடல் சூடு தணிய, எலுமிச்சம்பழ ஜூஸில், தேன் கலந்து சாப்பிடலாம்.

2. சளி, வாய்வு, பசியின்மை, குமட்டலுக்கு இஞ்சிச் சாறு எடுத்து, அதில் சிறிதளவு தேன் கலந்து சாப்பிடலாம்.

3. கருவுற்றப் பெண்களுக்குக் குமட்டல், வாந்தி இருந்தால், மாதுளைச் சாறு+தேன்+கல்கண்டு சாப்பிடலாம்.

4. விஷக்கடி, பூச்சிக்கடிக்குச் சிரகத் தண்ணீரில் தேன் கலந்து சாப்பிடலாம்.

5. வாய் கொப்புளிக்க உபயோகிக்கும் தண்ணீருடன் தேன் சேர்த்துக் கொப்பளித்தால் கோழையை அகற்றும்.

6. பாலில், தேன் கலந்து தினசரி சாப்பிட்டு வந்தால், உடல் நல்ல வளர்ச்சி பெறும். எடை கூடும்.

7. வெந்நீரில், தேன் கலந்து, தினமும் காலையில் சாப்பிட்டு வந்தால் எடை குறையும்.

8. தெளிந்த பார்லி கஞ்சி தண்ணீரில், தேன் கலந்து சாப்பிட்டு வர எடைகுறையும். கேரட் ஜூஸிலும் தேன் கலந்து சாப்பிட்டு, எடையைக் குறைக்கலாம்.

9. சிறிது எலுமிச்சை சாறுடன், தேன் கலந்து முகத்தில் தேய்த்து, கால் மணி நேரம் ஊறியபின், முகத்தைத் தேய்த்துக் கழுவி வந்தால், முகத்தில் இருக்கும் சுருக்கம், கரும்புள்ளிகள் மறைந்து, புதுப்பொலிவு பெறும். ஆனால், நேரடியாக தேனோ, அல்லது இந்தக் கலவையோ, புருவத்திலோ, தலைமுடியிலோ, படாமல் எச்சரிக்கையோடு இருக்க வேண்டும். காரணம், தேன், முடியை நரைக்கச் செய்து விடும்.

கிச்சன் கிளினிக் என்ற இந்தத் தொடர், மஞ்சளில் தொடங்கி, இந்த வாரம் இனிப்பாக தேனுடன் நிறைவடைகிறது. இந்தத் தொடர் ஆரம்பித்தது முதலே, வாசகர்களிடமிருந்து, ஆர்வம் மிகுந்த வரவேற்பு.

உங்களுக்கு உடல்நலம் பாதிக்கப்படுகிற போது, கிச்சன் கிளினிக்கில் இடம்பெற்றுள்ள மருத்துவக்குணம் கொண்ட ஐட்டங்களை மருந்தாகப் பயன்படுத்தி, குணமடைய உங்களை ஊக்கப்படுத்த வேண்டும் என்பதை விட, இவற்றையெல்லாம், உங்களுடைய அன்றாட உணவில் கடைபிடித்து, ஆரோக்கியமான வாழ்வு வாழ வேண்டும் என்பதே நமது விருப்பம்.

சந்திப்பும், தொகுப்பும் :

**எஸ். சந்திரமௌலி**




சிவப்ரியாவுக்குக் கூச்சமாக இருந்தது. தன் முகமே அன்னியமாகப்பட்டது. நிமிடத்துக்கு ஒரு முறை ஒரு பெண்மணி வந்து அவள் முகத்தில் பொடித்திருந்த வியர்வையை ஒற்றியெடுத்தாள். கைக்கடக்கமான கண்ணாடியை அவள் முகத்துக்கு எதிரே அடிக்கடி நீட்டினாள்.

ஒப்பனை செய்து கொள்வது என்றால் சிறு வயதிலிருந்தே வெறுப்புதான். ஆனால் ஈடுசெய்வது போல் ஆகிவிடும், கூந்தலுக்காக செலவிடும் நேரம். நீளமும் அகலமுமாய்ப் பரப்பளவு அதிகம் கொண்ட குழல். 'ஆழமும் கொண்ட 3-டி கூந்தல்டி உன்னுடையது' என்று தோழி காந்திமதி ஒருமுறை வியந்திருக்கிறாள். சற்றே தீசல் நெடியுடன்.

"முகத்துக்குப் பவுடர் கூடப் பூசிக்க மாட்டா என் பொண்ணு. ஆனா அதெல்லாம் தேவையில்லேன்னே வச்சுக்குங்க. மினுமினுப்பில்லாத வெண்ணெயாச்சே என் சிவப்ரியாவின் முகம்." அம்மா அவள் காதுபடவே குறைந்தது வாரம் ஒருமுறை யாரிடமாவது கூறுவாள்.

இப்போது வட்டியும் முதலுமாக ஒப்பனை. கூட்டு வட்டி! "இப்பச் சொல்றேன் எழுதி வச்சிக்கம்மா. இன்னும் ஆறு வருஷத்துக்காவது நீதான் தமிழ்ச் சினிமாவின் நம்பர் ஒன் கதாநாயகி" என்றார் அந்த வயதான ஒப்பனைக் கலைஞர்.

சிவப்ரியா புன்னகை செய்து கொண்டாள். 'ஒன்று என்கிற வரையில் சரி. ஆனால் அது தான் நடிக்கப் போகும் பட எண்ணிக்கையும் கூட!'

ஒப்பனை மட்டுமல்ல. ஒளி வெள்ளமும் தாங்கிக் கொள்வதற்குக் கடினமாகவே இருந்தது.

யாரோ ஒருவன் தயாரிப்பாளரிடம் கத்திக் கொண்டிருந்தான். "நீங்க சொல்றது என் குதிரைக்கான ஒருநாள் வாடகை. ஆனா அதை வச்சு 'ராஜாவின் பார்வை ராணியின் பக்கம்' மாதிரி வண்டியோட்ட வைக்கப் போறீங்கன்னு பாத்தா ஏதோ ஃபைட்டிங் ஸீன்ல யூஸ் பண்ணிருக்கீங்களே. கீழே விழுந்து குதிரை நொண்டுது சார். இனி மேல் அதனாலே என்ன பிரயோஜனம்? கட்

டுத்தான் தள்ளணும். நஷ்ட ஈடா எனக்கு ஆறாயிரமாவது வேணும்."

தயாரிப்பாளர் தரப்பிலிருந்து பேசியவர் ஐந்தாயிரத்தை வாங்கிக் கொண்டு சப்தமில்லாமல் போகச் சொன்னார். இதற்கே ஒப்புக் கொள்ள மாட்டார் என்று நினைத் தானோ என்னவோ வந்தவன் சந் தோஷத்தோடு அந்தத்தொகையை வாங்கிக் கொண்டு நடந்தான். போகும்போது 'அடுத்த படத் துக்குக் குதிரை வேணும்னாலும் கேளுங்க சார். ஃபைட்டிங் ஸீன் னாலும் பரவாயில்ல' என்றான்.

சிவப்ரியாவுக்கு அந்தக் குதிரையை நினைத்துப் பரிதா பம் ஏற்பட்டது. கதாநாயகன் பந்தா காட்டுவதற்காகக் கீழே விழுந்து நொண்டிக் கொண்டு தன் உயிரை விடப் போகும் விலங்கு. அதற்கு ஆதரவாக அதன் முதலாளி கூட இல்லை. 'இரு அரசர்கள் போரிட்டபோது அந்த அப்பாவிப் புல்தான் அதிகம் வதைபட்டது' என்ற தாகூரின் வரி நினைவுக்கு வந்தது.

ஒரு மூலையில் கடும் வெயி லில் துணை நடிகைகள் கூட்ட மாகக் கூடிப் பேசிக் கொண்டி ருந்தார்கள். 'என்ன மதியத் துக்குக் கோழி உண்டா இல் லையா? நாலு நாளா அரைவயிறு கேப்பக் கூழ் சாப்பிட்டு நாக்கும் வயிறும் அலை யுதுக்கா' என்று சொன்ன ஒரு குரல் அடுத்த கணமே 'ஏ' ஜோக் ஒன்றை எடுத்துவிட்டது கூட விநோதமாக இருந்தது.

"ஷாட் ரெடி".

படபடத்துக் கொண்டிருந்த ஆயிரம் புறாக்கள் ஒருசேர மாயமாக மறைந்தது போல் சட்டென்று ஒரு மௌனம் நிலவியது.







பதிவுசெய் யப்பட்டிருந்த இசை உயிர் பெற்றது. ஒரு மின் பொத்தானை யாரோ தட்ட, 'உய்'யென்று வட்ட வடிவ நீரூற்றுக்கள் மேலே கிளம்பி மையத்தை நோக்கி வீழ்ந் தன. சிவப்ரியா அதற்கு முன்பாக நிற்க வைக்கப்பட்டாள்.

இயக்குனர் மணிசங்கர் வித்தகர். ஆட்டுவிக்கத் தெரிந்தவர். "அந்த இசைக்குத் தகுந்த மாதிரி தலையை ஆட்டும்மா. முகத் திலே துள்ளல் தெரியணும். இசைதான் சுவா சம்கிற மாதிரி ஒரு உணர்வு. இங்கே வேற யாரும் இல்லே. நீ மட்டும்தான் இருக் கேன்னு நினைச்சுக்க."

'யாரும் இல்லையென்று எப்படி நினைக்க? மரத்தில் மறையாது இந்த மாமத யானை. நூற்றுக்கணக்கில் திரைக்குழுவி னரும், பார்வையாளர்களும், தவிர, இங்கு நான் மட்டும்தான் இல்லை.'

இளம் வயதிலேயே சிவப்ரியா தன் பள்ளி வளாகத்தில் வெகு பிரபலம். வருடாந்திரக்

**அருண் சரண்யா**



**''தலைவர் டியூஷன் வாத்தியார் வச்சு கையெழுத்துப் போட கத்துக்கறார்.''**

**''இவ்வளவு நாள் கழிச்சு இப்ப எதுக்கு கத்துக்கறார்?''**

**''தினமும் ஸ்டேஷன்ல வந்து கையெழுத்துப் போடணும்னு சொல்லிட் டாங்களாம்!''**

**– சீர்காழி வி. ரேவதி**

---

கலைநிகழ்ச்சி? சிவப்ரியா நிச்சயம் உண்டு. ('உயரமாக இருந்தாலும் பரவாயில்லே. டிப டான்ஸிலே அவளே முதல் வரிசையில் இருக்கட்டும். அப்போதான் சபைக்கே ஒரு எடுப்பு.). பள்ளிகளுக்கிடையே பேச்சுப் போட்டியா? சந்தேகமின்றி அவள்தான் பள்ளியின் பிரதிநிதி. ('மாத டெஸ்ட் இருக் குன்றதுக்காகவா போட்டியிலே கலந்துக்கத் தயங்கறே? தேர்வே எழுதாவிட்டாலும் உனக்கு முழு மதிப்பெண்கள் தந்துடச் சொல்றேன். போதுமா? தேர்வை எழுதி னாலும் நீ நூத்துக்கு நூறுதானே வாங்கி யிருப்பே. அதனாலே அதைப் பற்றிக் கவ லைப்படாமல் போட்டிக்குப் ப்ராக்டிஸ் பண்ணு'). விளையாட்டுகளிலும் தனி வல் லமை. ('நீ ஓட்டத்திலேயும், லைம் அண்ட் ஸ்பூனிலேயும் முதலில் வந்தது ஒரு செய்தியே இல்ல சிவா. ஷாட்புட்டிலே ஏன் முதல் பரிசைக் கோட்டை விட்டே? கைகளுக்கா? அதானே பாத்தோம். சரி விடு. அடுத்த தடவை பார்த்துக்கலாம்).

ஆனால் அடுத்த தடவை அவள் எதி லுமே கலந்து கொள்ள மாட்டேன் என்று அடம்பிடித்தாள். எதிலுமே என்றால் பேச்சு, கட்டுரை, விளையாட்டு, கலை இப்படி அத் தனையிலுமே. அவள் அம்மா பள்ளிக்கு வர வழைக்கப்பட்டாள். ''என்னன்னு தெரி யல்லே மேடம். ரெண்டு நாளா அவ தனி மையிலே ரொம்ப யோசிச்சுக்கிட்டிருந்தா. அப்புறம் அவ முகத்தில ஒரு தெளிவு. மத்தபடி நல்லாத்தான் இருக்கா. எந்த மனக் கோளாறும் இருப்பதாகத் தெரியலே. வீட்டி லேயும் அமைதியான சூழல்தான். அவ அப்பாவுக்குப் பாசத்தை வெளியிலே காட்டிக்கத் தெரியாதுன்னாலும் பெண்ணை ஒரு வார்த்தை கடிஞ்சு பேசினதில்ல. 'ஏண்டி ஸ்கூல்லே எந்தப் போட்டியிலும் கலந்துக்க மாட்டேன்னு பிடிவாதம் பிடிக்கறி யாமே'ன்னு கேட்டா, 'அதெல்லாம் இனி மேல் வேணாம்மா. என் லட்சியம் முழுசா நிறைவேறணும்னா என் கவனம் வெவ் வேறே திசைகளிலே சிதறிடக் கூடாதுன்றா.''

ஆசிரியைகளுக்கு ஏமாற்றம்தான் என்றா லும் சிவப்ரியாவிடம் இது குறித்துப் பேசிப் பார்த்தபின் அவர்களுக்கே ஒரு தெளிவு பிறந்தது போல் இருந்தது. 'ஆல் தி பெஸ்ட்' சொன்னார்கள். மேற்படிப்புக்காகச் சென் னைக்குக் கிளம்பிய போது ரயில்வே நிலை யத்துக்குச் சுமார் நாற்பது சகமாணவிகளும் ஆறு ஆசிரியைகளும் வந்திருந்தனர். 'உன் லட்சியத்தை அடைவேங்கிற நம்பிக்கை எங் களுக்கு நூறு சதவீதத்தை விட அதிகமாகவே இருக்கு. ஜமாய் கண்ணம்மா. உன்னைச் சேர்ந்த அத்தனை பேருக்கும் உன்னாலே பெருமைதான்.'

தான் திரைப்படத்தில் நடிக்கும் செய்தி இப்போது அத்தனை பேர் காதுகளையும் எட்டியிருக்கும். எப்படி உணர்வார்கள்?

சற்று வேகமான இசைதான். ஐந்தாவது படிக்கும் போது தனக்குக் கர்நாடக சங்கீதம் கற்றுக் கொடுத்த ரஞ்சனி மிஸ், தினமும் ஒரு முறையாவது கூறாமல் விட மாட்டாள். ''மனசுக்கு நிம்மதி தரும் விஷயத்திலே பிற சங்கீதங்களை, நம்ம சங்கீதத்தின் காலிலே கட்டித்தான் அடிக்கணும்''. பாதியைத்தான் சிவப்ரியாவால் ஏற்றுக் கொள்ள முடிந்திருக் கிறது. தேசப்பற்று என்பதற்குப் பொருள் பிற நாடுகளின் மீது வெறுப்பு என்பதில்லையே. அப்படித்தான் எல்லாமே. என்றாலும் இப் போது கிராமத்தில் உள்ள தனது வீட்டின் பூஜையறைக்குள் பாய்ந்து சென்று பாட வேண்டும் போலிருக்கிறது.

''தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரண் இல்லை. விரைகுழுவும் மலர்ப் பொழில் சூழ் வித்துவக்கோட்டம்மானே, அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்றவள்தன் அருள் நினைந்தே அழும் குழவி அதுவே போலிருந்தேனே.''

பிறர் வதைத்தால் அம்மாவின் மடியில்

முகம் புதைக்கலாம். ஆனால் அம்மாவே... "உன்னை தலைமுழுகியாச்சு". வார்த்தைகளைவிட அதன் தொனி அவள் சொன்னதை நடத்திக் காட்டுவாள் என்பதை உணர வைத்தது.

"இப்போ முகத்திலே ஒரு இலேசான ஆச்சரியத்தைக் காண்பிக்கணும். உன் புறங்கை மேலே திடீர்னு ஒரு பட்டாம்பூச்சி உட்கார்ந்த மாதிரி நினைச்சுக்க."

பட்டாம்பூச்சி பிடிக்கும்தான். ஆனால் அதன் சராசரி ஆயுள் பதினான்கு நாட்கள்தான் என்பதை அறிந்ததிலிருந்து அதை நோக்குகையில் பரிதாபம்தான் பொங்குகிறது. தவிர, அது புறங்கையில் உட்கார்ந்தால் வியப்பை விட குறுகுறுப்பே உண்டாகும் என்று தோன்றுகிறது.

காலையிலிருந்தே நிறையப் புகழ் வார்த்தைகள். எல்லாக் கோணத்திலும் சூப்பராக இருக்கிறாள். மிஸ் இந்தியா போட்டியில் எப்படித்தான் அவளால் கலந்து கொள்ளாமல் இருக்க முடிந்ததோ?

'அடுத்த வாரம் எல்லாப் பத்திரிகைகளின் அட்டைப் படங்களிலேயும் நீங்கதான்'. ஏற்கெனவே தனது புகைப்படம் சில வருடங்களுக்கு முன் நாளிதழில் முதல் பக்கத்தில் வந்திருந்தது இங்கு யாருக்கும் தெரியவில்லை. ப்ளஸ் டூவில் சென்னை மாவட்டத்திலேயே முதலாவதாக வந்ததற்குக் கிடைத்த அங்கீகாரம் அது. ஆனால் இது வேறுலகம். அதிகப் படிப்பு என்பது கதாநாயகியின் மதிப்பை விட சுமையையே அதிகரிக்கும். 'படிச்ச திமிரு' என்ற பட்டம் பெறக்கூடாதே!

சில நிமிடங்கள் கூட ஆகவில்லை. 'சார் இந்த வருஷம் நோபல் உங்களுக்குத்தான்' என்றார் வசனகர்த்தா, இயக்குனரைப் பாராட்டி. 'ஆஸ்கர்' என்பதை ஒருவேளை 'நோபல்' என்று குழப்புகிறானோ இவன் என்ற சந்தேகத்தில் மணிசங்கர் அவனை மேலும் கீழுமாகப் பார்க்க, 'இந்த ஆண்டின் சிறந்த கண்டுபிடிப்பு சிவப்ரியாதானுங்களே. அப்போ அவங்க திறமையைக் கண்டுபிடிச்ச விஞ்ஞானியான உங்களுக்குத்தானே நோபல் கிடைக்கணும்'! திரையுலகில் எல்லாமே மிகைதான்.

கதாநாயகன் ஹேமந்த் சுருக்கமாகத் தன் கருத்தைக் கூறி விட்டான். 'மணிசங்கர் சாரோட அறிமுகம் யாருமே வேஸ்ட் ஆனதில்லை. என்ன, மீதியெல்லாம் இருந்தாலும் உங்களுக்குக் குரல் நல்லாயிருக்குது. தமிழ்ப் பொண்ணா இருந்துக்கிட்டு தடையில்லாம தமிழைப் பேசறீங்க. இந்தக் குறையையெல்லாம் அட்ஜஸ்ட் செய்துக்க வேண்டியதுதான்' என்று அவர் கூற, 'அண்ணே கொன்னுட்டீங்க அண்ணே' என்று பல குரல்கள் ரசித்து எதிரொலித்தன. டக்டக்கென்று ஜோக் அடிக்கும் வல்லமை பெற்றிருந்ததால் கதாநாயகர் அந்த விதத்தில் மாபெரும்

## 'தோசா கிங்'

**சாண்ட்விச் தோசை, பாலக்(கீரை) தோசை, பிஸ்ஸா தோசை, ஜின்ஜர் தோசை, கார்லிக் தோசை, ஜீரக தோசை, பூந்தி தோசை, மலையாள அடை, ஜெய்ப்பூரி தோசை, கேரட் தோசை (ஊத்தப்பம்) அவல் தோசை, ஸ்வீட் மற்றும் கார சுருள் தோசை, பிரிஞ்சால் அடை, புளி தோசை,**




**தில் தோசை (வெள்ளை எள், அவல் கலந்து செய்வது), பூசணி தோசை, மஷ்ரூம் தோசை மற்றும் மிருதுவான ஸ்வீட் தோசை (இதில் தேன், வெல்லம், குங்குமப்பூ, அரிசி, உளுந்து போன்றவை கலந்திருக்கும்) யப்பாடி...! மொத்தம் நூறு விதமான தோசை வகைகளைத் தயாரித்து வழங்கி ஜமாய்த்துவிட்டார்கள் திருச்சியில் உள்ள ஸ்ரீ கிருஷ்ணாஸ் ரெஸ்டாரெண்ட்காரர்கள்.**

**"தோசை மேளா" என்ற இந்த தோசைத் திருவிழா சென்ற ஆண்டு தொடங்கியபோது, திருச்சி மக்களிடமிருந்து, அதுவும் இளைஞர்கள் மத்தியில் ஏகப்பட்ட வரவேற்பு. அதனால்தான் இந்த ஆண்டும் நடத்தினோம் என்கிறார்கள் உணவகத்தின் உரிமையாளர்களான மதுவும், நீதியும்.**

**ஒரு நாள், இந்த தோசா மேளாவுக்கு வந்த கல்லூரி மாணவர்கள் சிலர் தங்களுக்குள், 'யார் அதிகம் சாப்பிடுகிறார்கள்' என்று போட்டி வைத்துவிட்டார்கள். அன்று பத்தொன்பது விதமான தோசைகளைச் சாப்பிட்டவருக்குக் கிடைத்த பட்டம் "தோசாகிங்."**

**தகவல்: பா. ரவிச்சந்திரன்**

## வாண்டுகள் ட்ரெண்ட்!

அஜய் தேவ்கான், கஜோல் நடித்த 'ராஜு சாச்சா' என்ற படம் ஓரளவு நன்றாக ஓடியதிலிருந்து 'வாண்டுகளை' வைத்துப் படமெடுப்பது இந்தி திரைப்படத் துறையின் ட்ரெண்டாகி விட்டது. இப்போது மேலும் ஒரு வாண்டுகள் படம். ஷாருக், ஜூகி நடிக்க, 'ஒன் டு கா ஃபோர்' என்று. இப்படத்தின் 'ஃபோர்' வாண்டுகள் அசத்தியிருக்கிறார்கள்!

– சி.எம்.



கொலைகாரராகி விட்டிருந்தார்.

அந்த அன்னியச் சூழலிலும் வாய்விட்டுச் சிரிக்க வேண்டும் என்று தோன்றியது. ஒரு ஜடப் பொருளான புகைப்படக் கருவியைப் பார்த்துத்தான் வியக்க வேண்டும். புன்னகைக்க வேண்டும். ஏன் காதல் பார்வையைக் கூட வீச வேண்டும்! க்ளோஸ்-அப் ஷாட்ஸ்.

'ஆனந்த் ப்ளீஸ் நான் கூட இப்போது ஜடம்தான். ஓடிவந்து உன் காதல் பார்வையை வீசேன். வழக்கம் போல் 'ஹாய் ஷிவ்' என்று செல்லமாய்க் கூப்பிடேன்.'

'என்னம்மா, ஓகேதானே?' என்று மணி சங்கர் கேட்டபோது பதற்றமாக இருந்தது. அவர் என்ன கூறினார் என்பதை மனத்தில் பதிய வைக்காமல் எதையோ நினைத்துக் கொண்டிருந்து விட்டோமே.

'சார் நீங்க தப்பா நினைச்சுக்கலேன்னா...'

'சட்னு தேங்காயை உடைம்மா.'

'கொஞ்சம் முன்னே...' வாக்கியத்தை முடிப்பதற்கு முன்பே எதுவோ மேலிருந்து வேகமாக விழும் சப்தம். 'ஐயையோ' என்று அத்தனை பேரும் அலறியதன் காரணமும் சட்டென்று உரைத்தது. எதுவோ அல்ல. யாரோ!

உயரத்தில் ஏறிப் பணிபுரிந்து கொண்டிருந்த ஒரு லைட்மேன் கீழே விழுந்திருக்கிறார். பாய்ந்து சென்றாள் சிவப்ரியா. விழுந்தவர் மயக்கம் போட்டிருந்தார். சட்டென்று குனிந்து அவரது மணிக்கட்டை அழுத்தி நாடி பார்த்தாள். முகத்தில் இலேசான நிம்மதி. 'வேணி,, சீக்கிரம் எடுத்துக்கிட்டு வா'. புரிந்து கொண்டு செயல்பட்டாள் வேணி.

'ஐயோ மாணிக்கம் அண்ணே, என்ன ஆச்சு உனக்கு?' என்று நாலைந்து பேர் அழு குரலில் கத்தினார்கள். மயக்கமடைந்தவரின் பாக்கெட்டிலிருந்து பாதி வெளியே வந்திருந்த மாத்திரைப் பட்டை சிவப்ரியாவின் கண்களில் புலப்பட்டது. எடுத்துப் பார்த்தாள். 'இவருக்கு வலிப்பு நோய். உடனே ஹாஸ்பிடலுக்குக் கூட்டிக்கிட்டுப் போகணும்.'

'என்னம்மா இது கைகால் எதுவும் வெட்டி இழுக்கக் காணோமே. இது எப்படி வலிப்பாக இருக்கும்?' என்று பலர் கிசுகிசுத்தனர். எனினும் 'இந்தாங்க' என்றபடி ஆறேழு சாவிகள் அவள் முன் நீட்டப்பட்டன.

'இப்ப தேவைப்படுவது சாவி இல்லே. ஆம்புலன்ஸ் அல்லது ஆட்டோ' சிவப்ரியா சற்றே உரத்த குரலில் கூற, சிலர் வாசற்புறம் ஓடினர்.

மாத்திரையைப் போட்டுக் கொள்ள மறந்திருக்கிறார். ஒருமுறை போட்டுக் கொண்டால் ஒருநாளைக்குத் தாக்குப்பிடிக்க வைக்கும் மாத்திரை. ஒரே வெட்டலில் கீழே விழுந்திருக்கிறார். கண் செருகிக் கொண்டிருப்பதுடன், வாயிலிருந்தும் ஒழுகும் எச்சில். சந்தேகமின்றி வலிப்புதான்.

அவரது தலையில் ஏதாவது அடிபட்டிருக்கிறதா என்பதை ஆராய்ந்தாள்.

'இந்தாங்கம்மா' என்று வேணி மரியாதையுடன் நீட்ட, தனது 'மெடிக்கல் கிட்'டை அவளிடமிருந்து வாங்கி, அதிலிருந்த ரத்த அழுத்தமானியை எடுத்தாள் டாக்டர் சிவப்ரியா.

(தொடரும்)




சமைப்பதில் இன்பம்...
பரிமாறுவதில் பெருமை.
ரூபி புளியாச்சே.

இப்பெல்லாம் என் வீட்டில என் சமையலுக்கு ஏகப்பட்ட பாராட்டுக்கள். சாம்பார், ரசம், புளிக்குழம்பு, புளியோதரை எல்லாம் பிரமாதம். சூப்பர் டேஸ்ட். நான் உபயோகிப்பது **ரூபி புளியாச்சே.**

**ரூபி புளி** ,விதை, ஓடு, நார் நீக்கிச்சுத்தம் செய்யப்பட்டு முற்றிலும் சுகாதாரச் சூழலில் தயாரிக்கப்படுவது. ஜூஸ் நிறைந்தது. சிறிதளவு உபயோகித்தாலே போதும்.

எம்மனதையும் கொள்ளை கொள்ளும் அருமையான சமையலுக்கு **ரூபி புளி.**



A quality product by

**O.M.S. AGRO FOOD PRODUCTS CORPORATION**
**3, Parangirinathapuram Compound, Pullalakottai Road**
**Virudhunagar - 626 001 Tamilnadu, India.**

## பத்மா ரவிசங்கர்

எதிரே ஒருவன் வியர்வை வழிய, போஸ்டர்களுக்குப் பசை தடவத் தொடங்கினான்.

"குடும்ப கஷ்டம் துரை! பொண்டாட்டி சீக்காளி. நாலு நோஞ்சான் பசங்க. பேரு தான் ஏட்டு. சம்பளம் பத்தலை. கஷ்ட ஜீவனம். உனக்குத் தெரியாததில்லை. ஒரு நூறு ருபா கை மாத்தா கொடேன்..." என்று ஏட்டு ஏகாம்பரம், கான்ஸ்டபிள் துரையிடம் கடன் கேட்டுக் கொண்டிருந்தபோது –

அந்த விடலைப் பையனை நெட்டித் தள்ளிக் கொண்டு வந்தார் இன்ஸ்பெக்டர் குப்புராஜ். பையன் கையில் ஒரு சூட்கேஸ்!

"ரயில்வே ஸ்டேஷன் பக்கமா நின்னுக்கிட்டிருந்தான் ஏகாம்பரம்! என்னைப் பார்த்ததும் ஒரு மாதிரி முளிச்சான்! சூட்கேஸ் பூட்டியிருக்கு. சந்தேகமாயிருச்சு. எவ்வளவு கேட்டும் வாயைத் திறக்கலை. சரியான எத்தன்யா! ஸ்டேஷன்ல வச்சு 'நம்ம முறைல' விசாரிச்சா கக்கிடுவான்னு தள்ளிட்டு வந்தேன்!" என்று பெருமிதமுடன் மீசையைத் தடவிக் கொண்டார். பின் –

நச்சென்று விடலையின் தாடையில் குத்தினார். பல் பொத்து ரத்தம்! முட்டியில் அடிக்க லத்தியை ஓங்க –

பையன் மடமடவென்று சொல்லத் தொடங்கினான்.

"இரு! இரு! என்னய்யா பாஷை பேசறான்? ஒரு எழவும் புரியலை!"

"மராத்தி சார்!" என்றார் ஏட்டு ஏகாம்பரம் அடக்கமாக.

"அட, மராத்தியா! ஏட்டு உனக்குதான் தெரியுமே! பையன் என்ன சொல்றான்? மொழி பெயரு!"

பெயர்த்தார்.

"அடாடா... பையன் வேற கம்பார்ட்மெண்டாமா... டீ குடிக்க இறங்கி, முன் ரயில்ல பெத்தவங்களைத் தவற விட்டுட்டானாமா...! சர்தான்! பையனை அனுப்பித் தொலைய்யா!" என்றார் குப்புராஜ் – கேஸ் கிடைக்காத ஏமாற்றத்தில். பையன் அகன்றதும்...

'டீ குடிக்கணும்!' என்ற அனுமதியுடன் வெளிப்பட்ட ஏகாம்பரம் இரண்டே எட்டில் அந்தப் பையனைப் பிடித்துக் கொண்டார்! சரளமான மராத்தியில், "ஏண்டா பயலே! இன்ஸ்பெக்டர் அடிச்சதும் – சூட்கேஸ்ல போதைப் பொருள் கடத்தறேன்னு ஒப்புக்கிட்டே பின்னும், தவறா மொழி பெயர்த்து உன்னைத் தப்புவிச்சேனே, எனக்கு ஒரு ஆயிரம் ருபா வெட்டிடு, என்ன?" என்றார்.



# நடப்பு

பையன் தலையாட்டிச் சம்மதித்தான்.

"இந்த வயசுல இந்த வேலை செய்யலாமா?" ஏகாம்பரம் கேட்டார்.

"குடும்ப கஷ்டம்!" என்றான் பையன்.

எதிர்ச்சுவரில் ஒட்டி முடிக்கப்பட்டிருந்த போஸ்டர்கள் வண்ணமயமாக, வானளவு வாக்குறுதிகளுடன், உத்தரவாதமான ஒளிமயமான எதிர்காலத்துக்கு அழைக்க...

மற்றுமொரு தேர்தல்!

# ஒரு டிரைவரின் நியூயார்க் அனுபவங்கள்!

**எஸ். மோகன்ராஜ். இருபது வருடங்களுக்கு முன்பு சென்னையில் இவரை வாடகை கார் ஓட்டுனராகப் பார்த்திருக்கலாம். தமது திறமையால் அமெரிக்கன் எம்பஸியில் ஓட்டுனராகச் சேர்ந்து இப்போது 'கிரீன்கார்டு' வசதியுடன் நியூயார்க்கில் வசிக்கிறார். சமீபத்தில் சென்னை வந்த அவர் அங்கு தாம் வியந்த அனுபவங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டார். அதிலிருந்து...**



நியூயார்க் விமான நிலையத்தில் இறங்கியதுமே வியந்தேன். ஏகப்பட்ட விமானங்கள் அங்கே நிறுத்தப்பட்டிருந்தன. பயணிகள் எல்லாரும் நடந்து கொண்டிருந்தோம். திடீரென்று பார்த்தால் தரை அதுவாகவே நகருகிறது. என்ன இது என்று கேட்டால் 'கன்வேயர் பெல்ட்' என்றார்கள். மேலே ஏற எஸ்கலேட்டர் மாதிரி தரையில் செல்ல இது!



வெளியில் சென்றால் எங்கே எப்படி செல்ல வேண்டும்? பஸ், ரயில் ரூட்களின் வரைபடங்கள் கண்முன். இதில் விசேஷமானது தரையின் அடியில் செல்லும் ரயில்கள். இந்த ரயில் நிலையங்களில் தானியங்கி டிக்கெட் கொடுக்கும் இயந்திரங்கள் இருக்கின்றன. எந்த இடத்திற்கு, ரிட்டர்ன் டிக்கெட்டா என்பது உட்பட பல்வேறு கேள்விகளை இயந்திரமே கேட்கிறது. ஒவ்வொன்றுக்கும் கொடுக்கப்பட்டிருக்கும் பொத்தானை அழுத்தி பதில் சொல்லி பணத்தைச் செலுத்தி டிக்கெட் பெற்றுக் கொள்ளலாம். ஒவ்வொரு ரயில், பஸ் மாறும்போதும் அந்தந்த ரயிலில், பஸ்ஸில் நாம் இங்கு டிக்கெட் எடுப்பது போல் எடுக்க வேண்டாம். ஒரே முறை டிக்கெட் எடுத்துவிட்டு பஸ், ரயிலில் மாறி மாறி பயணம் செய்யலாம். இந்த டிக்கெட்டை ரயிலில் ஏறும் முன் ரயில் கதவில் சொருகினால் மட்டுமே கதவு திறக்கிறது.

**நா**ன் பிரமித்த இன்னொரு விஷயம்

லாட்டரி. இங்கும் லாட்டரிக்கு அடிமையாகி மனிதர்கள் அலைவதைப் பார்த்து அதிசயித்தேன். நம்மூரைப் போலவே சுரண்டல் லாட்டரியிலிருந்து எல்லா வகை லாட்டரிகளும் இருக்கிறது. 'Loto machine' எனப்படும் இதில் மூனு மில்லியன் டாலர், முப்பது மில்லியன் டாலர் வரை பரிசுகள் உண்டு. கோட்-சூட் போட்ட பெரிய மனிதர்களிலிருந்து சாதாரண மனிதர் வரை இதில் தங்களை அழித்துக்கொண்டது ஆச்சர்யமான விஷயம்.

நியூயார்க்கைச் சுற்றி குயின்ஸ், மான்ஹட்டன், புரூக்ளின், ப்ராங்ஸ், ஸ்டேட்டன் ஐலண்ட் என்ற ஐந்து தீவுகள் இருக்கின்றன. இந்தக் குட்டி குட்டித் தீவுகளுக்குச் செல்ல, போக்குவரத்து வசதிகள் இருக்கின் றன. ஸ்டேட்டன் ஐலண்டுக்குச் செல்வதற்கு மட்டும் இரண்டு மாடி கொண்ட இலவச சொகுசுக் கப்பல்கள் இயங்குகின்றன. நியூயார்க்கிலிருந்து இந்தத் தீவு கொஞ்சம் அதிகமான தூரத்தில் இருக்கிறது என்பதற்காக இந்த ஏற்பாடு. நேரம் போகவில்லை என்றால் இந்தக் கப்பலில் ஏறி 'ஹாயாக' ரவுண்ட் அடித்துவிட்டுத் திரும்பி வரலாம். ஒரு நாள் முழுவதையும் இப்படிக் கப்பலில் சென்று வருவதையே சிலர் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.



அங்குள்ள மக்களின் மனமும், பணிவும் மனிதாபிமானமும் மெய்சிலிர்க்க வைக்கின்றன. ஒரு பெரிய ஷாப்பிங் சென்டர். உடைகளுக்கான பகுதியில் துணிகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. அதனருகிலேயே விலை பற்றிய அட்டை. பத்தொன்பது டாலருக்கான துணி அடுக்குகளில் இருபத்தொன்பது டாலருக்கான உடை ஒன்று இருக்கிறது. அதை எடுத்துகொண்டு ஒரு பெண்மணி கேஷ் கவுண்டருக்கு வருகிறார். இது இருபத்தொன்பது டாலர் என்கிறார் காசாளர். 'இல்லை பத்தொன்பது டாலர் அடுக்கில்தான் இதை எடுத்தேன். நான் கஷ்டப்பட்டுத் தேடி எடுத்தது இது. அவ்வளவுதான் தரமுடியும்' என்கிறார் அந்தப் பெண்மணி. 'சரி அது எங்கள் தவறுதான்; மன்னித்துக் கொள்ளுங்கள் நீங்கள் சொன்ன விலைக்கே தருகிறோம்' என்று முக மகிழ்ச்சியுடன் சொல்கிறார் காசாளர். என்ன பணிவு பாருங்கள், தங்கள் தவறுக்குத் தாங்களே பொறுப்பேற்கும் மனப்பக்குவத்தைப் பாருங்கள்! நியூயார்க்கின் பல



பகுதிகளில் இது போன்ற மனிதப் பண்புகளைக் காணலாம். வாடிக்கையாளர்களை அவர்கள் உபசரிக்கும் விதமும் பேசும் விதமும் நம்மை ஆச்சர்யப்படுத்தும். அதே போன்று நாம் விரும்பித் தேர்ந்தெடுத்தப் பொருட்கள் பிடிக்கவில்லையென்றால் திருப்பிக் கொடுத்து விடலாம்.

அமெரிக்காவில் மருத்துவக் குழுவும் போலீஸாரும் எந்த அளவிற்கு விரைவாக வந்து உதவுகிறார்கள் என்பதை நினைத்தால் கண்கள் விரியும்.

நியூயார்க்கில் 'ஜமைக்கா குவீன்ஸ்' என்ற


"ஏழேழு ஜன்மத்துக்கும் நம் வகுப்பு ஆசிரியர் மீது உனக்குள்ள வெறுப்பு மாறாதா... ஏண்டா?"




இடத்தில் உள்ள ஒய்.எம்.சி.ஏவில் நான் செக்யூரிட்டி கார்டு வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். அது அடுக்கு மாடிக் கட்டடம். இங்கு உறுப்பினர்களுக்கு நவீன கருவிகள் உள்ள உடற்பயிற்சிக்கூடமும், நீச்சல் குளமும், பலவிதமான அரங்க விளையாட்டு வசதிகளும் உண்டு. பள்ளிச் சிறுவர்கள் இங்கு நீச்சல் கற்றுக் கொள்ள வருவார்கள். அப்படி வந்த சிறுவன் ஒருவனுக்குத் திடீரென்று நெஞ்சு வலி வந்துவிட்டது. உடன் வந்த் டீச்சரிடம் சொன்னான் அந்தச் சிறுவன். அடுத்த மூன்று நிமிடத்தில் ஒரு காரில் பாரா மெடிக்கல் டீமும், மற்றொரு காரில் இரண்டு காவல்துறை அதிகாரிகளும் வந்திறங்கியது கண்டு வியந்தேன்.

ஆம்புலன்ஸில் வந்தவர்கள் அச்சிறுவனை சோதித்தனர். 'இரண்டு மாத காலமாய் என்னென்ன ட்ரீட்மென்ட் எடுத்து வருகிறாய்?' என்று ஒரு மருத்துவர் கேட்டபோது மருந்து மாத்திரைகளிலிருந்து என்னென்ன விதமான ட்ரீட்மென்ட் எடுக்கப்பட்டது என்பதை அச்சிறுவன் விலாவாரியாக விளக்கினான்.

ஐந்து நிமிடத்தில், சகல வசதிகளும் நிறைந்த மருத்துவமனை ஒன்றில் அட்மிட் செய்து விட்டார்கள் சிறுவனை. சிறுவயதிலேயே குழந்தைகளை எவ்வளவு விவரமாக வளர்க்கிறார்கள் அவர்கள்!

நியூயார்க்கைப் பொறுத்தவரை எல்லோரையும் பரவசப்படுத்தும் விஷயம் சுதந்திர தேவி சிலை. அந்த பிரம்மாண்டமான சிலைக்குள் படிகள் இருக்கின்றன. ஆனால் அந்தச் சிலைக்குள் ஏறுவதற்கான வாயில் கதவைத் தவிர, காற்று புக இரண்டு மூன்று ஜன்னல் மாதிரியானவையே இருப்பதால் அந்த ஏ.ஸி.யிலும் வெப்பம் தகிக்க வைக்கிறது. ஒருவர் மட்டுமே ஏற முடிந்த இந்தப் படிகளில் சுதந்திர தேவி சிலையின் வயிற்றில், கழுத்தில், கண்களின் வழியாக நியூயார்க் நகரின் எழில் கொஞ்சும் அழகை நாம் காண முடியும்.

வானுயர்ந்த கட்டடங்களையும், நேர்த்தியான தெருக்களையும் பார்ப்பது கண்கொள்ளாக் காட்சி. அதில் நிற்பது ஏனோ வானத்தில் நிற்பது போன்ற பிரமையை ஏற்படுத்துகிறது. அங்கிருந்து வாழ்நாள் முழுவதும் இப்படியே பார்த்துக் கொண்டிருக்கலாம் என்ற உணர்வு ஏற்படுகிறது.

தொகுப்பு: **சலாம்ஜி**
படம்: **ஸ்ரீஹரி**



# உயிர் காக்க உதவுங்கள்

படத்திலிருக்கும் R. சுரேஷ் என்கிற நான் கடந்த 17 வருடங்களாக நரம்புத் தளர்ச்சி நோயால் மிகவும் கஷ்டப்பட்டு, சமீபத்தில் சென்னை அப்பல்லோ மருத்துவமனையில் காட்டியபோது மூளையில் அறுவை சிகிச்சை உடனடியாக செய்ய வேண்டும் என்றும் அதற்கு குறைந்தபட்சம் ரூபாய் ஒரு லட்சம் செலவாகும் எனவும் கூறியுள்ளனர். சாதாரணக் குடும்பத்தைச் சேர்ந்த எனக்கு அந்த அளவு வசதியில்லாததினால் நல்ல உள்ளம் படைத்தவர்கள் தாராளமாக பண உதவி செய்து என் அறுவை சிகிச்சை நல்ல விதமாக நடைபெறவும் என்னைக் காப்பாற்றுமாறும் வேண்டுகிறேன்.

உதவிகள் அனுப்ப வேண்டிய முகவரி:

**R. Vijaya,**
**19,Gokul first Street ( I Floor)**
**Rajaji Nagar, Villivakkam,**
**Chennai - 600 049.**
**Ph: 6500298**




**நூல்:** பயணச் சிறகுகள். **வகை:** பயண இலக்கியம், **ஆசிரியர்:** மு.க.ஸ்டாலின், **வெளியீடு:** பூம்புகார் பதிப்பகம், 63, பிரகாசம் சாலை, (பிராட்வே), சென்னை – 600 108, பக். 163, விலை ரூ. 150/-

# பெருமை சேர்க்கும் பதிவு...!

'தற்காலத் தமிழில் பயண இலக்கியம் ஒரு தனித் துறையாகச் செழித்துள்ளது. குமரி மலர் ஆசிரியர் ஏ.கே. செட்டியார் போன்ற முன்னோடிகள் தொடங்கி வைத்த இத்துறை, கல்கி, நா.பா. டாக்டர் மு. வரதராசன், கி.வா.ஜ போன்ற பெருமக்களால் வளம் பெற்று, அண்மைக் காலத்தில் சாவி, மணியன், சிவசங்கரி போன்றோரால் இன்னும் தன் பரப்பளவை விரிவாக்கிக் கொண்டது. இன்று சாருகேசி வரை பயண இலக்கியத்திற்கு உரம் சேர்ப்பவர்கள் பற்பலர்.

தமிழில் சிலர் எழுதிய பயண நூல்கள் உலகெங்கும் உள்ள உணவு விடுதிகளைப் பற்றியே பேசுபவை. அவற்றின் இலக்கியச் சுவையை விடச் சமையல் சுவையே மெச்சத்தக்கது! வேறு சிலர் எழுதிய பயண நூல்கள் சிவப்பு விளக்குப் பகுதியை வெளிச்சமிட்டுக் காட்டும் பச்சை வண்ண நூல்கள்.

* ஹிரோஷி[illegible] தியாகிகள் நினைவிடத்தில்

எவ்வளவுதான் சொன்னாலும் பயண இலக்கியத் துறையில் அதன் முன்னோடியான ஏ.கே. செட்டியாரை மிஞ்சும் எழுத்தாளர் இன்றளவும் இல்லை.

மு.க. ஸ்டாலின் எழுதியுள்ள 'பயணச் சிறகுகள்' என்ற இந்த நூல், பயண



**"கூட்டணியில் எங்க கட்சிக்கு பத்து சீட்டும் ரெண்டு பெட்டியும் கொடுத்துடுங்க... அல்லது இரண்டு சீட்டும் எட்டுப் பெட்டியும் கொடுத்துடுங்க...!"**

**— உ. ராஜாஜி**

இலக்கியத் துறைக்குப் பெருமை சேர்க்கும் புதுவரவு.

நூலாசிரியர் மேயர் என்ற வகையில், பெருநகர் வளர்ச்சிக்கு ஏற்பத் திட்டமிடுவதற்குத் தேவைப்படும் நிதி பெறுவது குறித்து ஆலோசிக்கும் மாநாடு, உலக அமைதியின் அவசியத்தை வலியுறுத்தும் மாநாடு ஆகிய இரு மாநாடுகளில் கலந்துகொண்டார். இவற்றின் பொருட்டு அமெரிக்காவுக்கும் ஜப்பானுக்கும் சென்று வந்த அவர், அதன்பின் தன் அனுபவப் பகிர்வாக எழுதியதே இந்நூல்.

நயாக்ரா அருவி, திமிங்கல விளையாட்டு, டிஸ்னி லாண்ட், அணுகுண்டால் தாக்குண்ட ஹிரோஷிமா போன்றவை பற்றி இனிய எளிய நடையில் விறுவிறுப்பு குன்றாமல் எழுதிச் செல்கிறார் ஆசிரியர்.

தம் கவனத்தைக் கவர்ந்த விஷயங்களைப் பற்றி நூலாசிரியர் எழுதும் சில பகுதிகள், நம் கவனத்தையும் கவர்கின்றன.

"டிஸ்னி பெருமகனாரின் சிலையின் அருகில் புகைப்படம் எடுக்கக் கூட்டம் அலை மோதுகிறது. அதுகூட எவ்வளவு ஒழுங்காக, அழகாக, மனிதப் பண்புடன் அலைமோதுகிறது. ஒவ்வொருவரும் சிரித்துக்கொண்டே தம் முறை வரும்வரை காத்துக் கொண்டுள்ளனர். மற்றவர் புகைப்படம் எடுக்கும்வரை குறுக்கே யாரும் வராமலும் உதவி செய்கின்றனர்... நாடுகள், தேசங்கள் மொழிகள் போன்ற வித்தியாசங்களையே காணோம். நமது நாட்டில் காந்தியடிகள் காண நினைத்த ராமராஜ்யம் இது போன்றதுதானா...?" (பக். 64)

"தென் அமெரிக்க நாட்டு மாணவ, மாணவியர் நிறைய அளவில் விடுமுறைப் பயணமாக அங்கு வந்திருந்தனர். களங்கமில்லா அவர்களது நடையுடை பாவனைகள் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளித்தன... மிகவும் தன்னடக்கத்துடன், மற்றவர்களைச் சீண்டாமல், தொந்தரவு செய்யாமல் தங்களது தனியுலகத்தை அவர்கள் அமைத்துக் கொண்டனர். தெருவில் போகும் அனைவரையும் கிண்டலடிக்கும் நமது 'நாளைய தமிழகம்' இதையும் மனத்தில் கொள்ளலாம்." (பக். 68)

நூலாசிரியர் ஓர் அரசியல் கட்சி சார்ந்தவராகவும் இருப்பதால் ஆங்காங்கே பொருத்தமான இடங்களில் தம் கட்சி சார்ந்த செய்திகளை நினைவு கூர்கிறார். இத்தகைய போக்கு ஒருவகையில் இந்நூலின் பலம். இன்னொரு வகையில் அதுவே பலவீனம். அதே கட்சி சார்ந்த வாசகர்கள் புத்தகத்தை ஈடுபட்டு வாசிக்க இப்போக்கு உதவும். ஆனால் 'பொதுவான கண்ணோட்டத்தில் தமது தெளிந்த தமிழாலும் விறுவிறுப்பான நடையாலும் உயர்ந்து பயண இலக்கிய அந்தஸ்தை அடைய வேண்டிய இந்நூலின் வாசக தளத்தை அது சற்றுக் குறைத்துவிடும்.

எழுத்துப் பிழை இல்லாமல் புத்தகத்தை கொண்டு வர வேண்டும் என்பதில் காட்டியிருக்கும் கவனம் பாராட்டத்தக்கது. (சரியான சொல் பத்திரிக்கை அல்ல. பத்திரிகை – என்னுரையின் இறுதிப் பகுதி. – அது போலவே சித்தரித்தல் அல்ல, சித்திரித்தல். பக். 45 அச்சொல்லின் வேர்ச்சொல் சித்திரம்.)

புத்தகத் தயாரிப்பில் தென்படும் நேர்த்தி நெஞ்சை அள்ளுகிறது. முன்னட்டை, பின்னட்டை வடிவமைப்பு, வழவழப்பான காகிதத்தின் உயர்தரம், விழிகளை சிரமப்படுத்தாதக் குண்டு குண்டான எழுத்துகளின் வசீகரம், இடையிடையே தென்படும் வண்ணப் படங்களின் வனப்பு என எந்த வகையிலும்' புகார் சொல்ல இயலாத பூம்புகார்ப் பதிப்பு.

விலை சற்று அதிகம்தான். (ஏறக்குறைய ஒரு பக்கத்திற்கு ஒரு ரூபாய்.) கொடுக்கலாம். வடிவமைப்பின் தரம் அப்படி.

**— திருப்பூர் கிருஷ்ணன்.**

முன்பெல்லாம் ரஞ்சனிக்கு நிறைய கனவுகள் வரும். நிஜம் போலவே பரவசம் தரும் வீர சாகசக் கனவுகள். இராஜ குமாரிக்காக பருந்தாக மாறுவதைப் போல; ''ச்சூ... மந்திரகாளி...'' என்றதும் மாளிகை எழும்புவதாக; குதிரை மேலேறி ஏழு கடல் தாண்டுவதைப் போல....

பருவமடைந்ததும் கனவுகளும் மாறி விட்டன. தன் அழகுக்கு மயங்கப் போகும் நாயகனைப் பற்றிய கனவுகள் வந்தன. கதைகளில் வர்ணிப்பதைப் போல சாகசங்கள் அறிந்தவன் அவன். வீரதீர பராக்கிரமன். அவளுக்காக எதுவும் செய்வான். பூப்போல தாங்குவான். பறவைகளைப் போல சிறகடித்துப் பறக்கும் வாழ்வு அமையப் போகிறது.

அம்மாதான் புலம்புவாள்.

"பொட்டப்புள்ளைக்குக் கொஞ்சங் கூட கூறே இல்லை. எப்பப்பாரு புஸ்தகம் படிக்கிறது. கண்ணாடி பார்க்கிறது... நாளைக்கு ஒரு மகராசி வீட்டுக்குப் போயி என்னதான் பண்ணுவாளோ... போங்க."

அப்பா சிரித்துக் கொண்டு உள்ளந்தலையில் கை வைத்து மயிலிறகு போல நீவி விடுவார்.

''போம்மா... உனக்கு வேற வேலையே இல்லை...'' ரஞ்சனியின் வாய் ஒப்புக்குச் சிணுங்கினாலும், ''பாரு... நான் எப்படிப் பொழைக்கப் போறேன்னு...'' என நினைக்கும்.

என்ன கஷ்டம் வரும்? அழகுக்குக் குறைவா? வசதி இல்லையா? பிரியம் தெரியாதா?

கல்யாணமாகி அறுபத்து மூன்று தினங்கள் ஆயிற்று.

அம்மாவின் பயம் நிஜமாகி விட்டது. இன்றைக்குக் கணேசன் அவளை அடித்து விட்டான். 'பச்'சென்று கன்னத்தில் விழுந்த அடி. தலை கிறுகிறுத்தது. விக்கித்துப் போய் நின்றான் ரஞ்சனி.

''சேலை வேணுமாம்... இருக்கிறதைக் கட்டினால் போதாது... இப்ப என்னத்துக்குச் சேலையும் சோளியும்... பொழுதுக்கும் நச்சரிக்கிறவ?'' உர்ரென்று கத்தினான். முகம் புதிதாக இருந்தது. இதுவரை கண்டிராத, காணச் சகிக்காத முகம்.

"இன்னும் வாடகை தரலை. மளிகை பாக்கி நிக்கிது. அறிவு வேணாம்; இப்பவே வாங்கிக் குடுன்னா என்னடி அர்த்தம்... ம்?" பின்னும் முறைத்தான். "கொஞ்சம் கூட பொறுப்புக் கிடையாது...த்தூ...."

துப்பிய வெறுப்பு அவளைக் குறுக வைத்தது. ஏமாற்றமும், அவமானமும் கவ்வியது. அப்பாவின் செல்லமும், அம்மாவின் பாசமும் நெஞ்சில்



அலை மோதின.

படீரென கதவைத் திறந்து கொண்டு கணேசன் வெளியேறினான். சூன்யம் கவிந்த மாதிரி இருந்தது. அடுப்பை அணைத்துவிட்டு கட்டிலில் வந்து படுத்தான்.

உடம்பு குலுங்கியது.

# கலையும் கனவுகள்

அடுப்படியிலிருந்து உள்ளே திரும்பியதும் திருமண போட்டோ கண்களில் பட்டது. மாலையும் கழுத்துமாக அவளும், கணேசனும்.

இவன்தான் அமைய வேண்டும் என அவளுக்கு விதிக்கப்பட்டிருந்தது போலும். அக்கம் பக்கம் தனர்களில் இருந்து



என்ன சொல்றே?" திரும்பத் திரும்ப கேட்டார்.

"நான் என்னத்தக் கண்டேன்... அந்த மனுஷரைக் கேளுடா..."

அப்பா படித்ததில்லை. அதனால் படித்தவர்களின் மேல் மரியாதையும் பிரமிப்பும் உண்டு. வெற்றிலைப் பாக்கு மென்றபடி, "என்ன மாப்ளை... வந்ததுல இருந்து பாக்கறேன். அக்கா கிட்டயே சுத்தநீரு... கொண்டு வந்த சீதனத்தை எனக்குக் காட்டமாட்டீரா?" என ஆரம்பிக்க, மாமா பொலபொலவென்று

## மும்தாஜ் யாசீன்

எத்தனையோ பேர் பெண் கேட்டும் அப்பா பிடி கொடுக்காமல் இருந்தார்.

மாமாதான் "நல்ல பையன்க்கா..." என்று இவரது போட்டோவைக் கொண்டு வந்தவர். "அரசாங்க உத்தியோகம். சாதுவான குணம். அவங்க குடும்பத்திலும் இவன்தான் கடைசிப் பையன். நல்ல இடம்...

கொட்டி விட்டார். சொன்ன திலுக ஒன்றும் சோடை இல்லை. பொறுக்கி எடுத்த வார்த்தைகள். அப்பா யோசிக்க ஆரம்பித்து விட்டார்.

"காசு பணம் கெடக்குது... நல்ல பையன் கெடைக்கறதுதான் இந்த நாள்ல கஷ்டம்... போயித்தான் பார்ப்பமே... ஏன்?"

அம்மா தலையாட்டினாள்.

போனார்கள். வந்தார்கள். காரியங்கள் மளமளவென்று நடக்க ஆரம்பித்து விட்டன. அங்கிருந்து சிலர் இங்கு வர, இங்கிருந்து

அங்கு போக, பத்திரிகை அடித்து, முகூர்த்தக் கால் நட்டு, திருப்பூட்டு முடிந்த சில தினங் களிலேயே ரயிலேறி, தனிக் குடித்தனம் வந்து, இன்றைக்குக் கன்னத்தில் அடி வாங்கிய வளாய்...

ஒரு சாதாரண ஆசை. அதற்கு இவ்வளவு பெரிய தண்டனையா?

தவறு எங்கே என்று அவளுக்கு இன்னும் புலப்படவில்லை.

இந்த இரண்டு மாதங்களில் கணேசனும் பிரியத்தை மொத்தமாகக் கொட்டுகிற வனாகத்தான் நடந்து கொண்டான். திகட்டத் திகட்டப் பேசி, சினிமாவுக்கும் கோயிலுக்கும் கூட்டிப் போய், பிரிந்திருக்க முடியாதவனாக மாலையில் சீக்கிரமே வீடு திரும்பி...

எல்லாம் அவ்வளவுதானா? என்ன வாயிற்று?

ரஞ்சனி அவனது விரல் அச்சுப் பதிந்த கன்னத்தைத் தடவிப் பார்த்தாள். மீண்டும் கண்ணீர் துளித்தது.

சிலரது பகைமையை விட பிரியம் எரிச்சல் தருவது. பக்கத்து வீட்டு மாமியும் அந்த ரகம்தான். கதவைத் தட்டினாள் மாமி. "ரஞ்சனி... டி... பால்காரன் வந்திருக் கான்..."

"வேணாம் மாமி, காலையிலேயே வாங்கியாச்சு."

"அவன் அதுக்கு வரலை. இந்த மாசம் இன்னும், பணம் தரலையா?"

"பணமா?"

ரஞ்சனிக்குச் சுருக்கென்று இருந்தது. காலையில் நடந்த ரகளையில் கேட்க ஞாபகம் இல்லை. கணேசனும் கொடுத்து விட்டுப் போகவில்லை. என்ன செய்யலாம் என்று யோசிக்க-

நிலைமை புரிந்து பால்காரனிடம் மாமி சொல்லிக் கொண்டிருந்தாள். "நாளைக்கு வா கோவிந்து... வாங்கிக்கலாம்."

"நீங்க சொன்னீங்கன்னுதான் பால் ஊத்த றேன். மொத மாசமே சரியாத் தரலைங் களே..."

"சரிப்பா... ஆம்பளை இல்லையே... வரட்டும்... வாங்கித்தாரேன்."

"சரீங்க... மறந்துரப் படாது..."

அரைகுறை மனத்துடன் பால்காரன் போனான்.

"என்னடி ஒரு மாதிரியா இருக்கே?"

"ஒண்ணுமில்லை மாமி..."

"பார்த்தியா... மறைக்கிறே... எதையும் மனசுல வச்சுக்கப்படாது. பட்டு பட்டுன்னு கொட்டிரணும்... நான் இல்லையா?"

மாமியைப் பார்க்க பொறாமையாக இருந்தது. கவலை இல்லாத மனுஷி. திருமணமாகி பத்துப் பதினைந்து வருஷங்கள் இருக்கும். அதட்டாத புருஷன். சௌரவமான வாழ்க்கை. சமைப்பதிலிருந்து அந்த மனுஷன் என்ன உடுத்துவது என்பது வரை எல்லாமே அவள் இஷ்டம்...

இதெல்லாம் வரம். புருஷ வரம். சுக துக்கங்களை வசப்படுத்தி குடும்பத்தைத் தனது ஆளுமைக்குள் நடத்திக் காட்டும் உரிமையைப் பெறுகிற பெண்கள் பாக்கியசாலிகள்.

"ம்ஹூம்..."

"அவரு வர்ற நேரமாச்சு. இன்னும் ஒரு வேலையும் ஆகலை. இரு, உன்னை அப்புறம் வச்சுக்கிறேன்" மாமி சிரித்தபடி போனாள்.

ரஞ்சனி வெகு நேரம் வரைக்கும் அவளையே நினைத்துக் கொண்டிருந்தாள்.

ஆபீசுக்கு வந்து விட்டானே தவிர கணேசனுக்கும் இருப்புக் கொள்ளவில்லை. மனம் முன்னும் பின்னுமாக அலைந்தது. லெட்ஜரைத் திறந்ததும் கணக்குத் தாளில் ரஞ்சனியின் முகம் தெரிந்தது. "ஆம்பிள் ளைன்னா... அடிப்பியா?"

குற்ற உணர்ச்சி. குறுகுறுப்பு. அப்படி என்ன கேட்டு விட்டாள் கைநீட்டி அடிக்கும்படி!

ச்சை. தனக்கு ஏன் அவ்வளவு கோபம் வந்தது? இயலாமையா? சுற்றிலும் நெருக்கும் செலவுகளைச் சமாளிக்க முடியாத எரிச் சலா?

ஆபீசில் பார்த்த எல்லோரும் "ஏன் டல்லா இருக்கே?" எனக் கேட்டார்கள். ஒவ்வொரு வருக்கும் ஒவ்வொரு விதமாகப் பதில் சொல்லி சமாளித்துக் கொண்டிருந்தான்.

ராம்குமார் மட்டும் சரியான இடத்தில் கேள்வியை நிறுத்தினான். "என்ன கணேசன்... வீட்ல சண்டையா?"

"இ... இல்லையே...."

"இங்க பாரு. காரணம் கேக்கலை. ஒரு



"மாமல்லபுரம் வோட்டர்ஸ் லிஸ்ட்ல ஏதோ தில்லுமுல்லு நடந்திருப்பதா தோணுது..."

"எப்படி கண்டு பிடிச்சே?"

"ஆயனர், சிவ காமி, நரசிம்மன், மாமல்லர், பரஞ் சோதி, நாகநந்தி, குண்டோதரன், கமலி பெயரெல்லாம் இருக்கு!

— புளியரை கணேசன்

யூகம். ஆம் ஐ கரெக்ட்?"

அவனிடம் பொய் சொல்ல முடியவில்லை.

"முதல் சண்டையா?" ராம்குமார் மீண்டும் கேட்டான்.

"ம்..."

"அடிச்சியா?"

"வந்து..."

"தப்புத்தான். ஆனா முதல் சண்டையில அடிக்காத கணவன் அதிசயம்."

உனக்கு இவ்வளவு தெரியுமா என்ற ஆச்சரியத்துடன் கணேசன் அவனைப் பார்த்தான். அந்தரங்கத்தை ரொம்பவும் நெருங்கிவிட்ட ராம்குமாரின் பேச்சு பிடித்துப் போயிற்று.

"எல்லாம் அனுபவம்தான். எனக்கும் கல்யாணம் ஆகிருச்சு. ஞாபகம் வச்சுக்க."

"..........."

"போ... போயி சமாதானம் பண்ணு. முடியும்னா நாளைக்கு லீவு போட்டுட்டு எங்காச்சும் கூட்டிட்டுப் போ... ரெண்டு மாசத்துக்குள்ள சண்டை... டூ எர்லி... எனக்கு ஆறுமாசமாச்சு." ராம்குமார் சிரித்தான்.

"வந்து... பிரச்னை என்னன்னா..."

"வேணாம். குடும்பம்னா இதெல்லாம் தான்...." கணேசன் தானாகவே எல்லாவற்றையும் ஒப்புவித்தான். ராம்குமார் பொறுமையாகக் கேட்டான். கடைசியாக, "ஆல் ரைட்.... நான் கொஞ்சம் பணம் தர்றேன். இப்போதைக்குச் சமாளி..."

"பிரச்னை அதில்லை. புரிஞ்சுக்கலையேன்னுதான்..."

"புதுசுதானே... விடு..."

அன்றைக்கு என்னவோ வேலை இழுத்துக் கொண்டே போயிற்று. வீடு திரும்பும்போது இருட்டி விட்டது. கருப்புப் போர்வையில் வானம். கோலப் புள்ளிகளாய் நட்சத்திரங்கள். விசுவிசுத்த காற்று எங்கோ நிகழும் ஆக்ரோஷ சண்டையின் சிதைந்த குரல்கள்...

"ரஞ்சி..." என மெதுவாகக் கூப்பிட்டான். முழுவதுமாகப் போர்த்தி அசைவற்றுக் கிடந்தாள். தொட்டுத் திருப்பவும் தயக்கமாக இருந்தது. "ஸாரி...." என மெதுவாகச் சொன்னான்.

"..........."

"என்னவோ ஒரு இது மனசே சரியில்லை...

"..........."

"நிறையப் பிரச்னைகள். நீயும் கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணி நடந்துக்கணும்."

"நான் என்ன பண்ணிட்டேன்..." தலையை உயர்த்தினாள். பொலபொலவென்று கண்களில் நீர்.

"குழந்தை மாதிரிதான் இருக்கே. வீட்டுச் செல்லம் மாறாம..." தயங்கித் தயங்கி நிலைமைகளைச் சொன்னான். பதிலின்றி கேட்டுக் கொண்டிருந்தாள். என்ன புரிந்ததோ. சிறிது இடைவெளி விட்டு நிறுத்த அவளது முகம் தன் பக்கம் திரும்பியிருப்பதைக் கண்டான். மனம் இலகுவாகி விட்டது. "நாளைக்கு நான் லீவு" என்றான் கணேசன்.

"ஏன்?"

"ரெண்டு பேரும் வெளியே போறோம். புடைவை எடுக்க."

"பணம்?"

"அதப்பத்தி உனக்கென்ன?"

"வேணாம்... அப்புறம் புத்தி இல்லையாடின்னு சண்டை போடுவீங்க."

"ஏய்...."

"பால்காரன் வந்துட்டுப் போறான். முதல்ல அவன் கணக்கை முடிங்க."

"எல்லாம்தான். காலையில் நான் சொன்னபடி கிளம்பு..."

அவன் சொன்ன விதமோ, அல்லது சண்டை விலகிய சுகமோ. ரஞ்சனிக்கும், "எல்லாம் சமாளிக்கிற விஷயம்தான் போ..." என எளிதாகத் தோன்றியது. மனத்திலிருந்த சுமை குறைந்தது.

எப்போது கண் அயர்ந்தது என்று தெரியவில்லை.

நடுவில் தாகமடித்தது. தன்மீது படர்ந்திருந்த அவளது கரத்தை ஒதுக்கிவிட்டு எழ, ஏதேதோ கனவு கண்டிருப்பது தெரிந்தது. குழப்பமாய், தெளிவற்று...

அம்மாவின் முகம், மாமியின் சுதந்தரம், புடைவை, சண்டை, பால்காரனின் முணு முணுப்பு...

கால வரிசைப்படி பார்த்தால் எல்லாம் சமீபத்தவை.

தனது பழைய வீர பராக்கிரம இளமைக் கனவுகள் ஏன் வரவில்லை? கேள்விக்கு விடை தெரியாததைப் போலவே, அவை மீண்டும் வரவேயில்லை அவனுக்கு. ○



**"தலைவர் வீட்டுல திருட்டுப் போயிடிச்சாமே...?"**

**"கூட்டணிக்காகக் கதவைத் திறந்தே வச்சிருந்தாராம்; யாரோ புகுந்துட்டாங்க!"**

**— சீர்காழி வி. ரேவதி**

# பொன்னியின் செல்வன்



### எழுபத்து இரண்டாம் அத்தியாயம்

## தியாகப் போட்டி

மழவர் குலத்தில் உதித்தவரும் சிவஞான கண்டராதித்த சோழரின் வாழ்க்கைத் துணைவியுமான செம்பியன் மாதேவியை, 'ஸ்ரீ மதுராந்தகத் தேவரான உத்தம சோழ தேவரைத் திருவயிறு வாய்த்த உடைய பிராட்டியார்' என்று அவர் காலத்திய கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. சாதாரணமாகத் தாய்மார்கள் தம் குழந்தைகளைப் பத்து மாதம் வயிற்றில் வைத்துச் சுமந்தே பெறுவார்கள். சில தாய்மார்கள் வேறு பெண்மணிகளின் வயிற்றில் பிறந்த குழந்தைகளைத் தங்கள் குழந்தைகளைப் போலவே வளர்ப்பதும் உண்டு.

செம்பியன் மாதேவி வேறொரு பிள்ளையை வெகு காலமாகத் தம் பிள்ளையென வளர்த்து வந்த காரணத்தினால், அந்த உண்மையை அறிந்திருந்த ஒருவர் மேற்கண்டவாறு 'உத்தம சோழரைத் திருவயிறு வாய்த்தவர்' என்று கல்வெட்டிலே குறிப்பிட்டார் போலும்!

உத்தம சோழர் ஐந்து பிராயத்துச் சிறுவனாயிருந்தபோதே செம்பியன் மாதேவி அவனையும் வாணி அம்மையையும் பார்க்கும்படி நேர்ந்தது. பல ஆண்டுகள் கழித்து வாணி அம்மையைச் சந்தித்

அமரர் கல்கி

ததும் அவளுடைய க்ஷேம லாபங்களைப் பற்றிச் செம்பியன் மாதேவி அன்புடன் விசாரித்தார். வாணியின் குழந்தை என்று எண்ணிய சேந்தன் அமுதனிடம் இயற்கையாகவே அம்மூதாட்டிக்கு அன்பு சுரந்தது. குழந்தையைப் பற்றி விசாரித்தபோது வாணி அம்மையின் முகத்தில் திகைப்பும் அச்சமும் உண்டானதைக் கண்டார். முதலில், அதற்கு வேறு காரணங்கள் இருக்கக்கூடும் என்று எண்ணினார். வாணி பேசத் தெரியாதவளாய் இருந்தபடியால் திட்டமாக அவளிடமிருந்து ஒன்றும் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆயினும் வாணி அம்மை ஒரு காலத்தில் தமக்குச் செய்த உதவியைக் கருதியும், அவளுடைய குழந்தையிடம் ஏற்பட்ட பாசங் காரணமாகவும், தாயும் பிள்ளையும் கவலையின்றி வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய உதவிகளைச் செய்தார். தஞ்சை நகருக்கு அருகில் குடியிருந்து தளிக் 'குளத்தார் கோயிலுக்குப் புஷ்ப கைங்கரியம் செய்து வருவதற்காக மானியங்களும் அளித்தார்.

சேந்தன் அமுதன் கல்வியிலும் ஒழுக்கத்திலும் சிவ பக்தியிலும் சிறந்து வளர்ந்து வந்தான். அன்னைக்கு உதவியாகப் புஷ்பத் திருப்பணி செய்வதிலும் மிக்க ஊக்கம் காட்டி வந்தான். இதைக் காணக் காணச் செம்பியன் மாதேவிக்கு அவனிடம் இயற்கையாகச் சுரந்த அன்பு வளர்ந்து வந்தது. ஒருநாள் அவருடைய மனத்தில் விசித்திரமான ஐயம் ஒன்று தோன்றியது. அது அவருக்கு ஒரே சமயத்தில் இன்பத்தையும் வேதனையையும் இனந்தெரியாத பீதியையும் உண்டாக்கியது. எத்தனையோ விதமாக அந்த ஐயத்தைப் போக்கிக் கொள்ள முயன்றும் இயலவில்லை. பிறந்து சில தினங்களில் இறந்து போன தம் குழந்தையைப் பற்றிய நினைவு அடிக்கடி எழுந்த வண்ணமிருந்தபடியால் அவர் உள்ளம் அமைதி கொள்ளவில்லை.

கடைசியாக ஒருநாள் வாணி அம்மையிடம் தெளிவாகக் கேட்டுத் தெரிந்து கொள்வது என்று தீர்மானித்தார். வாணியைத் தனியாக அழைத்து வரும்படி செய்தார். இறந்து போன தம் குழந்தையை வாணியிடம் கொடுத்து ஒருவரும் அறியாமல் புதைத்து விட்டு வரச் சொன்னார் அல்லவா? அவ்வாறு புதைத்த இடத்தில் அதன் ஞாபகார்த்தமாகப் பள்ளிப்படைக் கோயில் ஒன்று எழுப்ப வேண்டும் என்று சொல்லி, புதைத்த இடத்தைச் சொல்லும்படி கேட்டார். இந்தப் பழைய நிகழ்ச்சியைப் பற்றிய ஞாபகமே அவருக்குத் துன்பம் அளித்தது. செவிடும் ஊமையுமான வாணியிடம் இதையெல்லாம் சமிக்ஞை பாஷையினால் கேட்க வேண்டியதாக இருந்தது. அது அவருக்கு மேலும் சொல்ல முடியாத வேதனையை அளித்தது.

அவருடைய கேள்விகளுக்கு விடை கூற வாணி மிகவும் தயங்கினாள். கடைசியாக, பேரரசியின் கட்டளையை மீற முடியாமல் உண்மையைச் சொல்லி விட்டாள். புதைப்பதற்காகத் தன்னிடம் கொடுக்கப்பட்ட குழந்தை உண்மையில் இறக்கவில்லை என்பதையும், அதைத் தனக்குக் கருத்திருமன் என்பவன் எடுத்துக் காட்டியதையும், பின்னர் அரசியிடம் திரும்பி வந்தால் என்ன நேரிடுமோ என்று அஞ்சிக் கருத்திருமனுடன் திருமறைக்காடு சென்றதையும், சில காலத்துக்கெல்லாம் கருத்திருமன் தன்னை விட்டு விட்டுப் போய் விட்டபடியால், தான் திரும்பிப் பழையாறைக்கு வந்ததையும் விவரமாகக் கூறினாள்.

சேந்தன் அமுதன் உண்மையிலேயே தன் வயிற்றில் பத்து மாதம் சுமந்து பெற்ற பிள்ளைதான் என்பதை அறிந்த செம்பியன் மாதேவி ஒருபுறத்தில் எல்லையற்ற ஆனந்தம் அடைந்தார். அவர் உடம்பெல்லாம் சிலிர்த்துப் பூரித்தது. கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பொழிந்தது. "மகனே!" என்று

கூவிச் சேந்தன் அமுதனைக் கட்டித் தழுவிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது. ஆயினும், அந்த ஆர்வத்தைக் கட்டுப் படுத்திக் கொண்டார். அந்த உண்மை வெளியானால், அதிலிருந்து ஏற்படக்கூடிய குழப்பங்களை எண்ணி ஒருபுறம் பீதி கொண்டார். "உலகில் பிறக்கும் எல்லாக் குழந்தைகளும் இறைவனுடைய குழந்தைகளே" என்று கருதக்கூடிய உயர் ஞான பரிபக்குவத்தை அவருடைய உள்ளம் அடைந்திருந்தபடியால், பெற்ற



பிள்ளையிடம் தாய்க்கு ஏற்படக்கூடிய பாசத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள அவரால் முடிந்தது. "அரண்மனையில் வளர்ந்தால் என்ன? குடிசையில் வளர்ந்தால் என்ன? இந்த நிலையில்லா மனித வாழ்வின் சுகபோகங்கள் எல்லாம் வெறும் மாயை அல்லவா? உலக வாழ்வை நீத்த பிறகு அடைய வேண்டிய கதி அல்லவோ முக்கியமானது? என் பதி அரச போகங்களை வெறுத்துச் சிவபெருமானுடைய இணையடி நிழலில் திளைத்து வாழ்க்கை நடத்திய படியால் அவருக்குப் பிறந்த பிள்ளை இவ்விதம் குடிசையில் வாழ்ந்து இறைவனுக்குத் தொண்டு செய்யும் பேறு பெற்றான் போலும்!" என்றெல்லாம் அடிக்கடி எண்ணி மனத்தை உறுதிப்படுத்திக்கொண்டார்.

ஆயினும் சேந்தன் அமுதன் தமது வயிற்றில் பிறந்த மகன் என்று அறிந்ததினால், தாம் வளர்த்த குமாரனாகிய மதுராந்தகனைச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்கக் கூடாது என்ற எண்ணம் அவர் உள்ளத்தில் வலுப்பட்டது. முன்னமேயே கண்டராதித்தரிடம் தாம் செய்த குற்றத்தை அவர் ஒப்புக் கொண்டு மன்னிப்பும் பெற்றிருந்தார். "உன் வயிற்றில் பிறந்த குழந்தையானால் என்ன? அநாதைப் பெண் மணிக்குப் பிறந்த குழந்தையாயிருந்தால் என்ன? இறைவனுடைய திருக்கண்ணோட்டத்தில் இருவரும் சமமானவர்கள்தான். ஆகையால் மதுராந்தகனை உன் மகனைப் போலவே வளர்த்து வா! ஆனால் சோழ சிங்காதனத்தில் அவன் ஏற வேண்டும் என்று ஆசைப்படாதே! அதற்கு இணங்கவும் இணங்காதே! அது நான் பிறந்த சோழ குலத்துக்குத் துரோகம் செய்ததாகும். அப்படிப்பட்ட நிலைமை ஏற்படுவதாயிருந்தால் நீ உண்மையை ஒப்புக் கொள்வதற்கும் தயங்காதே!" என்று கண்டராதித்தர் தேவியிடம் சொல்லி அவ்வாறு வாக்குறுதியும் பெற்றிருந்தார். அந்த வாக்குறுதியை எப்படியும் நிறைவேற்றி வைக்கப் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி நிச்சயித்திருந்தார்.

ஆனால் தங்களுடைய சொந்தக் குமாரன் வாணி அம்மையின் மகனாகக் குடிசையில் வளர்ந்து வருவதை அறியாமலேயே அந்த மகான் சிவபதம் அடைந்துவிட்டார். இது தெரிந்திருந்தால், அவர் என்ன செய்திருப்பார்? சேந்தன் அமுதன் விஷயத்தில் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று கட்டளையிட்டிருப்பார்! - இதைக் குறித்துச் செம்பியன்மாதேவி எவ்வளவோ முறை சிந்தனை செய்தார். "இறைவனுடைய சித்தத்தினால் இவ்விதம் நேர்ந்துவிட்டது. ஊமையின் மகன் அரண்மனையில் வளர வேண்டும் என்பதும் பேரரசரின் மகன் குடிசையில் வளர வேண்டும் என்பதும் இறைவனுடைய திருவுள்ளம். அதில் நாம் குறுக்கிடக் கூடாது. அதை மாற்ற முயல்வதால் பல குழப்பங்கள் விளையும். தம் வளர்ப்புக் குமாரனின் மனம் அதனால் பெரிதும் புண்படும். அத்தகைய பாவத்தைச் செய்யக் கூடாது!" என்று முடிவாகத் தீர்மானித்துக் கொண்டார்.

இறைவனுடைய திருவருளில் அவர் கொண்டிருந்த இணையில்லாத நம்பிக்கையின் துணையினாலேதான் மேற்கூறிய தீர்மானத்தை அவர் காரியத்தில் நிறைவேற்றுவதும் சாத்தியமாயிற்று.

ஆயினும் அடிக்கடி சேந்தன் அமுதனைப் பற்றி அவரால் நினைக்க முடியாமலிருப்பதில்லை. அவனுடைய நினைவு வரும்போதெல்லாம் இயற்கையான தாய்ப்பாசம் அவருடைய உள்ளத்தில் பொங்கிப் பெருகாமலுமிருப்பதில்லை. இந்தப் போராட்டமானது அவருடைய இதய ஆழத்திலே பல ஆண்டு காலமாக நிகழ்ந்துகொண்டிருந்தது.

நெடுங்காலமாக அணை போட்டுத் தடுத்து வைக்கப்பட்டிருந்த வெள்ளம் திடீரென்று ஒருநாள் அணையை உடைத்துக்

கொண்டு கிளம்புவது உண்டு அல்லவா? அப்போது வெள்ளம் எவ்வளவு சக்தியுடனும் வேகத்துடனும் பாய்ந்து செல்லும் என்பதைப் பலர் பார்த்து அனுபவித்துமிருப்பார்கள்.

செம்பியன் மாதேவியின் உள்ளத்தில் அணை போட்டுத் தடுத்து வைக்கப்பட்டிருந்த தாய்ப் பாசமாகிய உணர்ச்சி வெள்ளமும் இப்பொழுது கரையை உடைத்துக்கொண்டு பாய்ந்தது.

முதன்மந்திரி அநிருத்தர் **"தேவியின் திருவயிற்றில் உதித்த தேவர்"** என்று குறிப்பிட்டதுதான் அவ்வாறு செம்பியன்மாதேவி உள்ளத்தின் அணை உடைவதற்குக் காரணமாயிற்று.

அந்த வார்த்தைகளை அநிருத்தர் கூறியவுடன், செம்பியன்மாதேவி பத்து மாத காலம் குழந்தையைத் தம் வயிற்றில் வைத்து வளர்த்த அனுபவம். அவ்வளவையும் ஒரு வினாடிப் பொழுதில் மறுபடியும் அனுபவித்தார். தம்மை மறந்து, தாம் செய்து கொண்டிருந்த சங்கல்பத்தை மறந்து, சேந்தன் அமுதனை "என் மகனே!" என்று அழைக்கவும், அவனைத் தழுவிக் கொண்டு கண்ணீர் வெள்ளம் பெருக்கவும் நேர்ந்தது.

இவ்விதம் செம்பியன்மாதேவி உணர்ச்சிப் பெருக்கினால் மெய்மறந்த நிலையில் இருந்தபோதிலும், அமுதன் கூறிய வார்த்தைகள் அவருடைய மனத்தில் நன்கு பதிந்திருந்தன. "தாயே! என்னை 'மகனே!' என்று அழைக்க இப்போதேனும் தங்களுக்கு உள்ளம் உவந்ததோ?" என்று கூறினான் அல்லவா? அவ்வார்த்தைகளின் கருத்து என்ன? அமுதனுக்கு அவனைப் பெற்ற அன்னை யார் என்பது முன்னமேயே தெரியுமா? தெரிந்தும் இத்தனை காலம் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் இருந்தானா?

சற்று நேரம் வார்த்தை சொல்ல முடியாத பரவச நிலையில் இருந்த பிறகு, செம்பியன் மாதேவி தம் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, "மகனே! உனக்கு முன்னமே தெரியுமா, நான் உன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்ற பாவி என்று? தெரிந்து என் பேரில் கோபம் கொண்டிருந்தாயா? அதனால் என்னிடம் அதைப் பற்றிக் கேளாமல் இருந்தாயா?" என்று தழுதழுத்த குரலில் கூறினார்.

அப்போது சேந்தன் அமுதன் கடல்மடை திறந்தது போல் பின்வருமாறு உணர்ச்சி நிறைந்த வார்த்தைகளைப் பொழிந்து தள்ளினான்:-

"தாயே! நான் தங்கள் வயிற்றில் பிறந்த பாக்கியசாலி என்பதைச் சில காலமாக அறிந்திருந்தேன். உலகம் போற்றும் புண்ணியவதியாகிய தாங்கள் ஒருநாள் என்னை 'மகனே!' என்று அழைக்க வேண்டும் என்று தவம் செய்து கொண்டிருந்தேன். தங்களுடைய மகன் என்ற சொல்லுக்குத் தகுதியாவதற்குப் பிரயத்தனம் செய்து வந்தேன். அல்லும் பகலும் சிவபெருமானுடைய திருவடிகளைத் தியானித்துக் கொண்டிருந்தேன். தாங்களே என்னை அழைக்காவிட்டாலும் நானே தங்களிடம் வருவதாகத் தானிருந்தேன். ஆனால் இந்த இராஜ்யத்தின் உரிமை விஷயம் தீரட்டும் என்று காத்திருந்தேன். தங்களை 'அன்னை' என்று அழைக்கும் உரிமையைத்தான் நான் வேண்டினேன். இராஜ்யத்துக்கு உரியவர் யார் என்று நிச்சயமான பிறகு தங்களிடம் வந்து 'தாய்' உரிமை கோர விரும்பினேன். அம்மணி! தங்களுடைய மனங் கோணாமல் நடப்பதற்காக என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பூங்குழலியைத் தியாகம் செய்யவும் சித்தமாயிருந்தேன். நல்லவேளையாக அவளும் தன்னுடைய மனத்தை மாற்றிக் கொண்டாள். தாயே! மூன்று நாளைக்கு முன்பு என் உயிருக்குப் பெரும் அபாயம் வந்தது. தங்களிடம் நானும் பூங்குழலியும் வணங்கி ஆசி பெற்றுக் கொண்ட சிறிது நேரத்துக்கெல்லாம் அந்த அபாயம் வந்தது. அந்த அபாயத்திலிருந்து உத்தம நண்பன்

ஒருவன் என்னைக் காப்பாற்றினான். அதைப் பற்றி நான் அப்போது அவ்வளவு மகிழ்ச்சி அடையவில்லை. அவனிடம் அவ்வளவாக நன்றி செலுத்தவும் இல்லை. இப்போது அவனுக்கு நான் எவ்வளவு நன்றிக்கடன் பட்டவன் என்பதை உணர்கிறேன். தாங்கள் என்னை 'மகனே' என்று தங்கள் திருவாயினால் அழைத்தீர்கள் அல்லவா? இந்த நாளைக் காண நான் உயிரோடு இருந்தேன் அல்லவா? இதுவே போதும்! நான் பாக்கியசாலி ஆகி விட்டேன். இனி ஒன்றும் எனக்கு வேண்டாம். இங்கு இப்போது நடந்தது இங்கு உள்ளவர்களுக்கு மட்டும் தெரிந்திருக்கட்டும். வேறு யாருக்கும் தெரிய வேண்டாம். இராஜ்யத்தில் மேலும் குழப்பம் விளைய வேண்டாம்! கோடிக்கரைக்கு உடனே புறப்பட்டுப் போவதற்கு எனக்கும் பூங்குழலிக்கும் விடை கொடுத்து அனுப்புங்கள்!''

ந்த வார்த்தைகள் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவியின் உள்ளத்தில் உண்டாக்கிய உணர்ச்சிப் புயலைச் சொற்களினால் விவரிக்க முடியாது.

விம்மலுடனும் கண்ணீருடனும் கலந்த மெல்லிய குரலில், ''குழந்தாய்! நீயே என் உத்தமப் புதல்வன்! நீயே தெய்வாம்சம் பொருந்திய என் கணவரின் உத்தமக் குமரன்!'' என்று கூறினார்.

இவ்வளவு நேரமும் சுந்தர சோழர், சின்னப் பழுவேட்டரையர், இளையபிராட்டி குந்தவைதேவி ஆகியவர்கள் பிரமித்துப் போயிருந்தார்கள். அங்கே வெளியான இரகசியமும், அதனால் விளையக்கூடிய



பலாபலன்களும் அவர்களுடைய உள்ளங்களில் பெருங் கொந்தளிப்பை உண்டாக்கியது.

அவர்களில் குந்தவைதான் முதலில் பேசும் சக்தி பெற்றாள். "தந்தையே! பெரிய பிராட்டியார் மதுராந்தகருக்குப் பட்டம் கட்டக் கூடாது என்று பிடிவாதம் பிடித்ததின் காரணம் இப்போது தான் தெரிகிறது!"

என்றாள்.

சுந்தர சோழரும் அப்போது பிரமிப்பும் திகைப்பும் நீங்கி, "ஆமாம், குமாரி! ஆனால் அந்தக் காரணம் இப்போது நீங்கி விட்டது. என் பெரிய அன்னையின் திருவயிற்றில் உதித்த உத்தமப் புதல்வனுக்கு முடிசூட்டுவதில் இனிமேல் அவருக்கு ஆட்சேபம் இருக்க முடியாது அல்லவா?" என்றார்.

செம்பியன் மாதேவி சிறிது பரபரப்புடன் சுந்தர சோழரைப் பார்த்து, "சக்கரவர்த்தி! என் குமாரன் சற்று முன் கூறிய வார்த்தைகளைக் கேட்கவில்லையா? இந்தச் செய்தி இங்கே உள்ளவர்களைத் தவிர வேறு யாருக்கும் தெரியவே வேண்டாம்! என் மகன் இராஜ்ய உரிமை கோரவில்லை. அதைத் தங்கள் முன்னால் அவன் வாயினாலேயே தெரிவித்து விட்டானே!" என்றார்.

"ஆம், பிரபு! இந்தச் சோழ இராஜ்யத்தில் ஏற்கெனவே உள்ள சிக்கல்கள் போதும்! என்னால் வேறு புதிய சிக்கல் உண்டாக வேண்டாம். எனக்கு விடை கொடுங்கள்! என்னையும் என்னை மணந்து கொள்ள உவந்த பூங்குழலியையும் ஆசிர்வதித்து அனுப்புங்கள்...! பூங்குழலி! இங்கே வா!" என்றான் அமுதன்.

வாசற்படியின் அருகில் நின்று கொண்டிருந்த பூங்குழலி உள்ளே வந்தாள். சேந்தன் அமுதனும் பூங்குழலியும் முதலில் செம்பியன்மாதேவிக்கு நமஸ்காரம் செய்தார்கள். பின்னர் சக்கரவர்த்தியை வணங்கினார்கள்.

எழுந்து நின்றதும் சேந்தன் அமுதன் "பிரபு! நாங்கள் உடனே கோடிக்கரை போக விடை கொடுங்கள்! தாயே! விடை கொடுங்கள்!" என்றான்.

செம்பியன்மாதேவி சக்கரவர்த்தியைப் பார்த்து, "ஆம், ஐயா! இவர்களுக்கு விடை கொடுத்து அனுப்புவோம். எனக்கு விருப்பமான போது நான் கோடிக்கரை சென்று இவர்களைப் பார்த்துக் கொள்கிறேன்!" என்றார்.

சுந்தர சோழர் "அது ஒருநாளும் இயலாத காரியம். நான் விடை கொடுக்க மாட்டேன்!" என்றார்.

முதன்மந்திரி குறுக்கிட்டு, "சக்கரவர்த்தி! எதுவும் இப்போது தீர்மானம் செய்ய வேண்டாம். இன்னும் சில தினங்கள் இவர்கள் என் இல்லத்திலேயே இருக்கட்டும். பெரிய பிராட்டியின் மகன் கிடைத்துவிட்டார். ஆனால் சின்னப் பழுவேட்டரையரின் மருமகர் கிடைக்கவில்லை. அவரைப் பற்றிய செய்தி வரும்வரையில் இவர்கள் இங்கு இருக்கட்டும். அதுவரை இங்குள்ளவர்களைத் தவிர வேறு யாருக்கும் இந்த இரகசியம் தெரிய வேண்டாம்!" என்றார்.

"அருள்மொழியிடமாவது அவசியம் சொல்லித்தான் ஆக வேண்டும்!" என்றாள் இளையபிராட்டி குந்தவை தேவி.

"வேண்டாம், வேண்டாம்! அது மட்டும் செய்ய வேண்டாம்," என்று கேட்டுக் கொண்டான் சேந்தன் அமுதன்.

கடைசியாகச் சக்கரவர்த்தி, "தேவி! எது எப்படியானாலும் ஆகட்டும். இத்தனை தினங்கள் கழித்து இன்றைக்கு தங்கள் திருவயிற்றில் உதித்த மகன் உங்களிடம் வந்திருக்கிறான். உங்களை உடனே பிரிப்பதற்கு நான் சம்மதிக்க மாட்டேன். சில தினங்களாவது இங்கே நீங்கள் சேர்ந்திருங்கள். என் அரண்மனையிலோ, முதன்மந்திரியின் மாளிகையிலோ தங்கியிருங்கள். இராஜ்ய உரிமையைப் பற்றி முடிவான தீர்மானம் ஆன பிறகு இவர்களைக் கோடிக்கரை அனுப்புவது பற்றி யோசிக்கலாம். அதுவரையில் இங்குள்ளவர்களைத் தவிர வேறு யாருக்கும் இச்செய்தி தெரிய வேண்டாம்!" என்றார்.

### எழுபத்து மூன்றாம் அத்தியாயம்

# வானதியின் திருட்டுத்தனம்



ருள்மொழிவர்மரின் மனம் பெரிதும் கலக்கம் அடைந்திருந்தது. இராஜ்ய உரிமை சம்பந்தமாகச் சோழ நாட்டில் எழுந்த கொந்தளிப்பின் வேகம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டிருந்ததே அதற்கு முக்கிய காரணமாகும். அவர் மக்களை அமைதிப்படுத்துவதற்காகப் போன இடங்களிலெல்லாம் மக்களின் ஆவேசந்தான் அதிகமாயிற்று. "பொன்னியின் செல்வரே எங்கள் மன்னர்!" "அருள்மொழிவர்மரே திருமுடி சூட வேண்டும்!" என்பவை போன்ற கோஷங்கள் எங்கெங்கும் எழுந்து நாலாபுறமும் முழங்கி எதிரொலி செய்தன.

இவற்றுடன் போட்டியிட்டுக் கொண்டு "பழங்குடி மக்களான பழுவேட்டரையர்கள் வாழ்க!" "கொடுங்கோலரான கொடும்பாளூர் வேளார் வீழ்க!" என்பவை போன்ற கோஷங்களும் சிற்சில இடங்களில் கேட்கும். அத்தகைய இடங்களில் அதிக பலம் தேடலாம் என்று இளவரசர் நெருங்கிச் சென்றால், உடனே அங்குள்ளவர்களும் "பொன்னியின் செல்வர் வாழ்க!" என்று முழங்கத் தொடங்கினார்கள்.

ஏன்? கோட்டைக் காவலுக்காக மாற்றி நியமிக்கப்பட்டிருந்த பழுவூர் வீரர்கள் கூடப் பொன்னியின் செல்வரைக் கண்டதும் தங்கள் பழைய கோஷங்களைக் கைவிட்டு, "அருள்மொழிவர்மரே திருமுடி புனைய வேண்டும்!" "ஈழங் கொண்ட வீராதி வீரர், பொன்னியின் செல்வர் நீடூழி வாழ வேண்டும்!" என்று முழங்கலானார்கள்.

இவ்வாறு தம்முடைய முயற்சி பொதுமக்களிடையிலும் போர் வீரர்களிடத்திலும் வெற்றி பெறாமல் போனது மட்டுமின்றி, தம் கருத்துக்கு மாறான சூழ்நிலை பலப்பட்டு வருவதைக் கண்டு பொன்னியின் செல்வர் சங்கடம் அடைந்தார். சில தினங்களாக மதுராந்தகத் தேவர் காணப்படாமல் இருந்தது வேறு அவருடைய கவலையை அதிகமாக்கிற்று. இதன் பொருட்டுச் சின்னப் பழுவேட்டரையர் கொடும்பாளூர் வேளார் மீது குற்றம் கூறிக் கொண்டிருந்தது அவருக்குத் தெரிந்திருந்தது. அதற்குக் காரணம் இல்லையென்று சொல்ல முடியாது. அருள்மொழிவர்மருக்கே அதைப் பற்றிச் சிறிது சந்தேகம் இல்லாமற் போகவில்லை. தமக்குப் பட்டம் சூட்டி விட வேண்டும் என்று கொடும்பாளூர் வேளார், திருக்கோவலூர் மலையமான் ஆகியவர்கள் உறுதி கொண்டிருந்தார்கள். அவர்களுடன் முதன்மந்திரி அநிருத்தரும் கலந்து சதி செய்வது போலத் தோன்றியது. இவர்கள் எல்லாரும் சேர்ந்துதான் மதுராந்தகத் தேவரை எங்கேனும் மறைத்து வைத்து விட்டார்களோ, என்னமோ? அல்லது ஒருவேளை மதுராந்தகத் தேவரின் உயிருக்கே அபாயம் விளைவித்து விட்டார்களோ?

அவருடைய அருமைத் தமையனாரான ஆதித்த கரிகாலரின் மரணத்துக்குப் பழுவேட்டரையர்களும் சம்புவரையர்களுமே பொறுப்பாளிகள் என்று வேளாரும் மலையமானும் கருதினார்கள். அதற்குப் பழிக்குப் பழி வாங்குவதாக எண்ணிக் கொண்டு மதுராந்தகருக்கு ஏதேனும் தீங்கு செய்து விட்டார்களோ?

ஆகா! இவர்களுக்கு என்ன? யோசனையின்றி ஏதோ செய்து விடுகிறார்கள். கடைசியாகப் பழி எல்லாம் தம்

தலையில் அல்லவோ சார்ந்துவிடும்?

இன்றைக்குச் சோழ நாட்டு மக்கள் இவர் பெயரைக் கூறி வாழ்த்துகிறார்கள். இவரைச் சிங்காதனம் ஏற வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். பொது ஜனங்களின் மனம் இப்படியே என்று மிருக்குமா? மக்களின் உள்ளம் அடிக்கடி சலிக்கும் இயல்பு உடையதல்லவா? இதே ஜனங்கள் நாளைக்கு இவர் பேரிலேயே பழி கூறினாலும் கூறுவார்கள். சிங்காதனம் ஏறுவதற்காகச் சித்தப்பன் மதுராந்தகனைக் கொலை செய்வித்த பாதகன் என்று சொன்னாலும் சொல்வார்கள். ஏன்? கடம்பூர் மாளிகையில் ஆதித்த கரிகாலர் இறந்ததற்குக் கூடத் தம் பேரில் பழி சுமத்தினாலும் சுமத்துவார்கள்? - தெய்வமே! அத்தகைய பயங்கரமான பழிகளைச் சுமப்பதற்காகவா என்னைக் காவேரியில் முழுகிச் சாகாமல் மந்தாகினி தேவி காப்பாற்றினாள்? இன்று தெய்வமாகியிருக்கும் அந்தப் பெண்ணரசிதான் இந்த இக்கட்டான நிலையிலிருந்து என்னைக் காப்பாற்ற வேண்டும். வாழ்க்கையில் ஒருவன் அடையக் கூடிய அபகீர்த்திகளில் மிகக் கொடிய அபகீர்த்தி என்னைச் சாராமல் தடுத்து அருள் புரிய வேண்டும்.

ஈழ நாட்டு இராஜ வம்சத்தில் நெருங்கிய உறவினர் ஒருவரையொருவர் கொன்றுவிட்டுச் சிங்காதனம் ஏறிய வரலாறுகள் அருள்மொழிவர்மரின் உள்ளத்தில் பதிந்திருந்தன. ஆகையால் அம்மாதிரியான இழிவைத் தரும் அபகீர்த்தி தம்மையும் அடையலாம் என்ற எண்ணமே அவருக்குச் சகிக்க முடியாத வேதனையை உண்டாக்கிற்று.

யாரிடமாவது தம் அந்தரங்கத்தைச் சொல்லி யோசனை கேட்கலாம் என்றால், அதற்கும் தகுதியுள்ளவராக யாரும் தென்படவில்லை. அவரைச் சுற்றியுள்ளவர்கள் அனைவருமே அவருக்கு விரோதமாகச் சதி செய்கிறார்கள் என்று தோன்றியது. அவர்களில் சிலர் உண்மையாகவே அவரிடம் விரோத பாவம் கொண்டிருந்தார்கள். மற்றும் சிலர் அவருக்கு நன்மை செய்வதாக எண்ணிக் கொண்டு பயங்கரமான பழியை அவர் தலையில் சுமத்தி விடுவதற்குப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தார்கள்.

இந்த நிலைமையில் யாரை நம்புவது, தம் அந்தரங்கத்தை யாரிடம் வெளியிட்டு ஆலோசனை கேட்பது என்று அவரால் நிர்ணயம் செய்யமுடியவில்லை.

ஏன்? அவரிடம் இணையில்லா அன்பு கொண்டவரும் அவருடைய பக்திக்கு உரியவருமான தமக்கை குந்தவைப் பிராட்டியிடங்கூட அவருக்கு நம்பிக்கை குன்றிவிட்டது. அவரும் தமக்குத் தெரியாமல் ஏதோ காரியம் செய்து கொண்டிருப்பதாகத் தோன்றியது. ஏன்! அவருடைய உயிருக்கு உயிரான வானதிகூட அல்லவா அவருக்குத் தெரியாமல் எதையோ மறைத்து வைக்கப் பார்க்கிறாள்? திருட்டுத்தனமாக எங்கேயோ போய்விட்டு மர்மமான முகபாவத்துடன் திரும்பி வருகிறாள்...?

வேறு எதைப் பொறுத்தாலும் பொறுக்கலாம், வானதியின் மர்மமான நடத்தையை இனிப் பொறுக்க முடியாது; - என்று அருள்மொழிவர்மர் தீர்மானித்தார். வானதி சுற்று முற்றும் பார்த்துக்கொண்டு எங்கேயோ தனியாகப் புறப்பட்டுப் போவதை அவர் கவனித்தார். உடனே அவளை அறியாமல் பின் தொடர்ந்து செல்லலானார்.

அரண்மனையின் மேல் மாடங்களின் தாழ்வாரங்களின் வழியாகச் சென்று, பின்னர் கீழ் மாடங்களில் இறங்கிச் சென்று, இருபுறமும் நெடிய சுவர்கள் அமைந்த இரகசியப் பாதை வழியாக வானதி மேலும் மேலும் சென்றாள். மதுராந்தகரை இரகசியமாகச் சிறைப்படுத்தி வைத்திருக்கும் இடத்துக்குத்தான் அவள் போகிறாள் என்று கருதி அருள்மொழிவர்மர் மிக்க ஆர்வத்துடனும் ஆத்திரத்துடனும் அவளைப் பின் தொடர்ந்து சென்றார்.

கடைசியாக, வானதி மற்றொரு பெரிய அரண்மனைப் பகுதியை அடைந்து அங்கு ஓர் அறைக்குள்

பிரவேசித்துக் கதவைச் சாத்த முயன்றாள். அப்போது அருள்மொழி வர்மர் பாய்ந்து சென்று வானதியால் கதவைச் சாத்த முடியாமல் ஒரு காலை அறைக்குள்ளே வைத்தார்.

கதவைச் சாத்த முயன்ற அவளுடைய கரத்தை இறுக்கிப் பிடித்துக்கொண்டு, "வானதி! உன் திருட்டுத்தனம் என்னிடம் பலிக்காது! இந்த அறையில் நீங்கள் ஒளித்து வைத்திருப்பது யார்?" என்று கோபமாக வினவினார்.

வானதியோ புன்னகை மலர்ந்த முகத்துடன் "ஐயா! உண்மையில் என் திருட்டுத்தனம் பலித்துவிட்டது! நான் அழைத்திருந்தால் தாங்கள் வந்திருக்க மாட்டீர்கள். உள்ளே வந்து இங்கு இருப்பது யார் என்று நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்!" என்றாள்.

மதுராந்தகத் தேவரை எதிர்பார்த்துச் சென்ற அருள்மொழிவர்மர், அங்கே வல்லவரையன் வந்தியத்தேவன் கட்டிலில் படுத்திருப்பது கண்டு வியப்பும் உவப்பும் அடைந்தார்.

அவரைப் பார்த்த வந்தியத்தேவன் படுக்கையில் நிமிர்ந்து உட்கார்ந்து, "ஐயா! வாருங்கள்! இரண்டு நாளாகத் தங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இந்தப் பெண்களின் சிறையிலிருந்து என்னை எப்படியாவது விடுதலை செய்யுங்கள்!" என்றான்.

பொன்னியின் செல்வர் விரைந்து சென்று வந்தியத்தேவன் அருகில் அமர்ந்து, "நண்பா! இது என்ன? இங்கு எப்படி வந்தாய்? பாதாளச் சிறையிலிருந்து தப்பியவன் இந்தப் பெண்களின் சிறையில் எப்படி அகப்பட்டுக் கொண்டாய்? இத்தனை நேரம் நீ ஈழத்தில் இருப்பாய் என்று அல்லவோ நினைத்தேன்? இன்னும் சில நாளைக்கெல்லாம் நானும் அங்கு வந்து உன்னுடனே சேர்ந்து கொள்ளலாம் என்று எண்ணியிருந்தேனே?" என்றார்.

"ஆம், இளவரசே! இவ்வளவு நேரம் நான் ஈழ நாட்டில் இருக்க வேண்டியவன்தான்! அங்கே பாண்டிய வம்சத்தாரின் மணிமுடியையும் அவர்களுக்கு இந்திரன் தந்த இரத்தின ஹாரத்தையும் தேடிக் கொண்டிருக்க வேண்டியவன். சைவப் பைத்தியமான சேந்தன் அமுதனை வைத்தியர் மகன் கொல்லாமல் தடுக்க முயன்று இந்தத் துர்கதிக்கு உள்ளானேன். பினாகபாணியின் ஈட்டி என் மேல் பாய்ந்ததும் நினைவிழந்து விழுந்தேன். கண் விழித்துப் பார்த்ததும் இங்கே இருக்கக் கண்டேன். இந்தப் பெண்மணிகளின் சிறைக்கு எப்படி வந்து சேர்ந்தேன் என்பது தெரியாது. கருணை கூர்ந்து நான் இங்கிருந்து தப்பிச் செல்வதற்கு உதவ வேண்டும். இல்லாவிட்டால், தங்கள் அருமைச் சகோதரரும் என் அருமைத் தலைவருமான ஆதித்த கரிகாலரைக் கொன்றதாக என் பேரில் வீண் பழியைச் சுமத்தி விடுவார்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

வானதி குறுக்கிட்டு, "ஐயா! இவர் கூறுவது தவறு. இவர் தப்பி ஓடிப் போனால்தான் அத்தகைய பழி இவர் மீது ஏற்படும். உண்மை வெளியாகும் வரையில் இவர் இங்கேயே இரகசியமாக இருக்க வேண்டும் என்பது தங்கள் திருத்தமக்கையின் விருப்பம்!" என்றாள்.

"இவள் கூறுவதிலும் உண்மை இருக்கிறது. நீ தப்பி ஓட முயன்றால்தான் அந்தப் பழி உனக்கு ஏற்படும். என்னையும் அது பிடிக்கலாம். அதைக் காட்டிலும் உண்மையில் நடந்ததை உலகம் அறிய நிரூபிப்பதுதான் நல்லது. முதலில், என்னிடம் சொல்லு! கடம்பூரில் நடந்ததையெல்லாம் விவரமாகச் சொல்லு!" என்றார் பொன்னியின் செல்வன்.

வந்தியத்தேவனும் தான் அறிந்தபடி நடந்ததையெல்லாம் கூறினான்.

எல்லாவற்றையும் கேட்ட பின்னரும், ஆதித்த கரிகாலரின் மரணம் நேர்ந்தது எப்படி என்பதை இளவரசரால் நிர்ணயிக்க முடியவில்லை.

(தொடரும்)

**பெரியவர்களின் கனவுகள்**



**குழந்தைகளின் திறன்கள்**

# யூடிஐயின் திட்டம்

## சில்ட்ரன்ஸ் கேரியர் பிளான்

- குழந்தைகள் 18 வயதை அடையும்போது அவர்களுக்கு கல்விக்கான உதவித் தொகைகள் அல்லது அவர்கள் தொழில் துவங்க, தொழில் நடத்த, வணிகம் செய்ய அல்லது இல்லம் அமைத்துக்கொள்ள நிதி உதவி அளிப்பதை நோக்கமாகக் கொண்டு எப்போது வேண்டுமானாலும் முதலீடு செய்ய ஏற்ற ஒரு கால வரம்பற்ற திட்டம்.
- 15 வயதுக்கு மேற்படாத உள்நாட்டில் வசிக்கும் குழந்தைகள் மற்றும் வெளிநாட்டில் வசிக்கும் இந்தியக் குழந்தைகள் ஆகியோரின் நலனுக்காக இங்குள்ளவர்கள், வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்கள், உள்நாட்டு அமைப்புக்கள் மற்றும் OCBகள் இதில் முதலீடு செய்யலாம்.
- **கல்வி உதவித் தொகை தேர்வு** – இந்த திட்டத்தில் ஆதாயம் பெற குறிப்பிடப்பட்டுள்ள நபருக்கு அவர் 18 வயதை அடைந்ததும் குறிப்பிட்ட கால இடைவெளிகளில் கல்வி உதவித்தொகை வழங்கப்படும். கல்வி உதவித் தொகைக்கு தற்போதைய வரிச்சட்டங்கள்படி வரிவிலக்கு உள்ளது.
- **வளர்ச்சி தேர்வு** – இத்திட்டத்தால் நன்மை பெறுபவர் 18 வயதை அடைந்ததும் பகுதியாகவோ அல்லது முழுமை ஆகவோ மறு கொள்முதல் செய்து கொள்ளும் வசதி.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 2000/– அதைத் தொடர்ந்து குறைந்தபட்ச முதலீடு ரூ. 1000/–.
- ஒரு யூனிட்டின் முகமதிப்பு ரூ. 10/–.
- யூனிட்களின் விற்பனை என்ஏவியில் 103%. மறு கொள்முதல் 18 வயதை அடைந்தவுடன் என்ஏவி மதிப்புப்படி.

கூடுதல் விபரங்களுக்கு தயவு செய்து உங்களுக்கு அருகிலுள்ள யூடிஐ கிளை அலுவலகம்/சென்டர், தலைமை பிரதிநிதி அல்லது முகவரை தொடர்பு கொள்ளவும்.



## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

இந்தியாவின் மிகப் பெரிய மியூச்சுவல் ஃபண்ட்

13, சர் விட்டல்தாஸ் தாக்கர்சி மார்க், நியூ மெரைன் லைன்ஸ், மும்பை 400 020.
தொலைபேசி : 203 1818, 209 2998 . இணையதளம்: www.unittrustofindia.com

**அமைப்பு:** யூடிஐ சட்டம் 1963ன் ஷரத்துக்களின் கீழ் யூடிஐ நிறுவனம் இயங்குகிறது. **பாதிப்பு நிலைமைகள்**: அனைத்து மியூச்சுவல் ஃபண்ட் மற்றும் செக்யூரிட்டி முதலீடுகள் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்டுகளை பாதிக்கும் காரணங்களால் என்ஏவி திட்டங்களின் மதிப்பு வளர்ச்சி அடையலாம் அல்லது குறையலாம். கடந்தகால செயலாற்றல் எதிர்கால விளைவுகளைக் குறிப்பிடுபவை அல்ல. சில்ட்ரன்ஸ் கேரியர் பிளான் என்பது திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரம், அதன் எதிர்கால ஆதாயம் அல்லது வருமானங்களைக் குறிப்பிடுபவை அல்ல. திட்டத்தின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று யாதொரு உத்தரவாதமும் அளிக்கப்படமாட்டாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவுசெய்து படிக்கவும்.

**தென் மண்டல அலுவலகம்** : சென்னை தொ.பேசி: (044) 5210347. **கிளை அலுவலகங்கள்**: சென்னை தொ.பேசி: 5210356, 5230985. • கோயம்புத்தூர் தொ.பேசி: 214973. • மதுரை தொ.பேசி: 738186. • திருச்சி தொ.பேசி: 760060. **ஃபிரான்சைஸ் அலுவலகம்**: சேலம் தொ.பேசி: 416414. **சிஆர் கலெக்ஷன் மையங்கள்**: குன்னூர் தொ.பேசி: 31037. • கடலூர் தொ.பேசி: 21712. • தர்மபுரி தொ.பேசி: 61012. • திண்டுக்கல் தொ.பேசி: 432244. • ஈரோடு தொ.பேசி: 252494. • காஞ்சிபுரம் தொ.பேசி: 20076. • காரைக்குடி தொ.பேசி: 22277. • மயிலாடுதுறை தொ.பேசி: 26739. • நாகர்கோவில் தொ.பேசி: 40274. • பாண்டிச்சேரி தொ.பேசி: 339080. • ராஜபாளையம் தொ.பேசி: 21360. • தஞ்சாவூர் தொ.பேசி: 31374. • திருநெல்வேலி தொ.பேசி: 339567. • தூத்துக்குடி தொ.பேசி: 325621 **யூடிஐ பேங்க்**: அடையார் தொ.பேசி: 4464442/43/44. • அண்ணாநகர் தொ.பேசி: 6289045. • டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை தொ.பேசி: 8231085. • ராயபுரம் தொ.பேசி: 2492184/85/86• தி.நகர் தொ.பேசி: 8239134–35.

**எட்டுவை தடுப்பீர் - எல்லோரையும் நேசிப்பீர்.**

057/3-2001 C TAM B

# தேர்தல்!!

தாயக்கட்டை, புளியங்கொட்டை இருந்தால் இந்த விளையாட்டுத் தேர்தலில் வோட்டுப் போடலாம்!






ஒரு வோட்டுக்கு 100 ...ாயின்னா இதுவர ...0 ஆச்சு... சாயங் ...ாலத்துக்குள்ளாற இன்னும்....!!!

ஹூம்...ம்... அந்த நாளுல மகாத்துமா காந்தி இருந்தாரு...

13 12 11 10 9 8 7 6 5 4 3 2

தாயம் போட்டு நகருங்க. 1

5) முதல் ஆளா கியூவுக்கு வந்திருக்கீங்க நாலு கட்டம் முன்னேறுங்க.

6) வழியில நிறுத்தி லட்டு தராங்க ஒரு முறை ஆட்டம் இழக்கணும்.

7) பக்கத்து வீட்டுக்காரரையும் இழுத்துட்டு வந்ததுக்காக ஒரு போனஸ் வாய்ப்பு. திரும்பவும் குலுக்கி ஆடுங்க.

9) வாக்குச்சாவடியில் கலாட்டா! திரும்பவும் முதல் கட்டத்துக்குப் போங்க!

12) எந்த வேட்பாளருக்கு வோட்டுப் போடறதுன்னு திடீர்க் குழப்பம்! இரண்டு முறை ஆட்டம் இழக்கணும்.

15) தண்ணி குடிக்கப் போனதால இடத்தைத் தவற விட்டாச் – நாலு கட்டம் பின்னால போங்க

19) அச்சச்சோ, உங்க பெயர் பட்டியலில் காணுமே... நீங்க ஆட்டத்தை விட்டு அவுட்!

24) அப்பாடி! ஒரு வழியா வோட்டுப் போட்டாச்சு. நீங்க கடைசிக் கட்டத்துக்குப் போயிடலாம்.

28) எல்க்ட்ரானிக் வோட்டிங் மெஷினுக்குப் பதிலா பழைய பெட்டி...! ஒருமுறை ஆட்டம் இழக்கணும் நீங்க.

29) வோட்டுப் போட்டுட்டு வெளியே வருகையில் நல்ல சகுனம் – தண்ணி லாரி;

திரும்பவும் ஆடுங்க..!

**(லேடீஸ்.... இதே ரூல்தான் உங்களுக்கும்... ப்ளீஸ்! ப்ளீஸ்!!)**









**வெ**யில் மண்டையைப் பிளக்க ஆரம்பித்தக் காலையில் ஏ.சி. பகவான் உபயத்தில் ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்த நேரம் டிரிங்கியது அலுவலகத் தொலைபேசி.

"மாயாஜாலில் நிம்மதியாக இன்று ஒரு நாள் பொழுது போக்குகிறார் 'கிருஷ்ணதாசி' சுஜா!" என்றது நமது தகவல் பட்சி.

போதாதா? ஏசியை உதறிவிட்டு அடித்து பிடித்து மாயாஜால் விரைந்தோம். தன் தங்கை காயத்ரியுடன் அப்போதுதான் வாயிலில் நுழைந்த அவரை 'ஹாய்' சொல்லி அழைத்தால் 'நீங்க எங்க இங்க?' என்று புருவம் உயர்த்தினார். 'அது வந்து...' என்று ஆரம்பித்து "உங்கள் விடுமுறையில் என்ன ஸ்பெஷல்ன்னு எங்க கல்கி விடுமுறை ஸ்பெஷலுக்காகப் பார்க்க வந்தோம்..."

நேராக நுழைந்தவர் 'பைக் ரைடிங்'கில் அமர்ந்து உடலை வளைத்து வளைத்து விரட்டினார் பைக்கை. சுமார் பதினைந்து நிமிட விரட்டலுக்குப் பின் 'போதும்பா' என்று முகம் சுளித்துவிட்டு 'ஏர்ஹாக்கி'க்கு வந்தார். இருவர் ஆடும் இந்த ஆட்டத்திற்கு அவருக்குத் துணையாக தங்கை காயத்ரி. அக்காவைத் திணற திணற அடித்து ஏழு / ஒன்று என்ற கணக்கில் வென்ற தங்கையை வீனஸ்- செரினா வில்லியம்ஸ் ஸ்டைலில் கட்டிப்பிடித்து வாழ்த்திவிட்டு ஸ்னூக்கருக்குத் தாவினார்.

'நான் சின்னவளா இருக்கும்போது (இப்ப மட்டும் பெரியவளா?) இதுதான் ஆடுவேன்' என்றவர், ஸ்னூக்கர் குச்சியை வைத்து பந்தைக் குறிபார்த்து இன்னொரு பந்தால் 'டொக்'க குழிக்குள் விழுந்தது பந்து. 'அட அற்புதமா ஆடறீங்களே' என்று அருகில் இருந்த மீசை மழித்த இந்தி ஆசாமி ஒருவர், ஸ்னூக்கர் பற்றி ஏதேதோ கேட்க, மூச்சு







# சுஜாவின் (மாயா) ஜால டிரிப்!



விடாமல் பேசிக் கொண்டிருந்தார் சுஜா! விட்டால் வகுப்பு நடத்தும் அளவுக்கு ஸ்னூக்கர் ஞானம்!

அடுத்து அவர் நுழைந்தது ஸ்னோ போலிங்கிற்குள். மெகா கோலிகுண்டு சைஸிலான உருண்டையைத் தூக்கித் தூரத்தில் வைக்கப்பட்டிருந்த பாட்டிலை (இதுக்குப் பேரு 'பின்'னுங்கறாங்கப்பா!) நோக்கி வேகமாக உருட்டிவிட, சம்மந்தமே இல்லாமல் சைடில் இருந்த பள்ளத்தில் விழுந்து ஒன்றுமறியாமல் கிடந்தது குண்டு. இந்தக் குண்டு திரும்பி வரும்வரை காத்திருந்து எடுத்து மீண்டும் முயற்சி! இப்போது ஐந்தாறு பாட்டில்கள் தடாலடியாக விழுந்து சிரிக்க, 'ய்யா...' என்று தனது பௌலிங்கில் விக்கெட் விழுந்ததும் அகர்கர் கையை ஒரு மாதிரி இழுப்பாரே




அதேபோல் இரண்டு கைகளையும் இழுத்துக் குதித்தார். 'அது ஏங்க ஒரே குண்டுக்காக வெயிட் பண்ணி அதை எடுத்து வீசறீங்க?' என்று நம்மைக் குழப்பியக் கேள்வியைக் கேட்டோம். ''அதுல மட்டும்தான் 'கிரிப்' இருக்கு'' என்றார். என்ன கிரிப்போ?

இந்த ஆட்டத்தில் இவர் எடுத்த பாயிண்டுகள் எழுபத்திஏழு.

திடீரென்று ஏதோ நினைத்தவராக, 'எக்ஸ்க்யூஸ் மீ. ஒரு மெயில் பண்ணிட்டு வந்திடறேன்' என்று அவசரமாக உள்ளேயே இருந்த 'நெட் கேஃப்'க்குள் நுழைந்தார்.

ஐந்தாவது நிமிடம் ஒரு மெயில் யாரையோ சந்தோஷப்படுத்தப் புறப்பட்டது!

''யாருக்கு மேடம்...?''

''மனோஜ்...''

''மனோஜ்...?''

''என் ஃப்ரெண்ட்...''

செருப்பை மாட்டிக் கொண்டு, காதில் கடுக்கன் மாட்டியிருந்தக் கம்ப்யூட்டர் பார்ட்டி முன் ஆஜரானார்.

'உங்களை அப்படியே ஃபோட்டோ எடுத்து டி-ஷர்ட்ல பிரிண்ட் பண்ணி தர்றோம்' என்ற அந்தப் பார்ட்டியின் டிஜிடல் கேமராவுக்குத் தங்கையைக் கட்டிக் கொண்டு போஸ் கொடுத்தார். அடுத்த அரைமணி நேரத்தில் பிரிண்ட் போட்ட டி-ஷர்டில் இருவரின் முகமும்! 'ஏர் ஹாக்கி'யில் என்னை ஜெயித்ததற்கு இது உனக்குப் பரிசு!' என்று தங்கையிடம் கொடுத்தார் அதை.

இதற்குள், 'யாரந்த மனோஜ்' என்ற 'வாழ்வா சாவா' பிரச்னை நம்மை வதைக்க... மீண்டும் சுஜாவிடம் கேட்டோம்!... புஸு, புஸு பொம்மைகள் நிரம்பிய அறைக்குள் 'சோ ஸ்வீட்' என்று முனகிக் கொண்டே நுழைந்து விட்டார்! ''எனக்குப் பொம்மைனா உயிரு'' என்று பொம்மைப் புராணம் பாடியவர் கரடி பொம்மை ஒன்றைத் தூக்கிக் கழுத்தோடு அணைத்து முத்தமிட்டார்.

சிறிது நேரத்தில் அந்த மனோஜ் விவகாரத்தை நாம் மீண்டும் ஆரம்பிக்க, கண்டு கொள்ளாமல் 'ஷாப்பிங்' சென்டருக்குள் புகுந்தார்.

அங்கிருந்த ஓர் அம்மணி, ''ஹாய், சுஜா, கிருஷ்ணதாசியில் கலக்குறீங்க...'' என்று ஏகத்துக்குப் பாராட்ட, நிஜமாகவே வெட்கப்பட்ட சுஜா ஒரு நகையை எடுத்து, 'இது எனக்கு நல்லாயிருக்குமா?' என்றார். ''நீங்க எதுபோட்டாலும் அழகா இருப்பீங்க'' என்று அம்மணி சொன்னதும் ஸ்டைலாக நீட்டினார் கிரெடிட் கார்டை!

இனியும் பொறுக்க முடியாத நமது குறுகுறுமண்டை ''ப்ளீஸ், நீங்க அந்த மனோஜ் பற்றி சொல்லலைன்னா மண்டை வெடிச்சாலும் வெடிச்சிடும்ங்க'' என்று அழாத குறையாகக் கேட்டோம்.

''மனோஜ் என் காதலர். யு.எஸ்.ல இருக்கார். ரெண்டு பேர் வீட்லயும் ஓ.கே., கல்யாணம் இப்ப இல்லை. போதுமா?''

ஒரு மண்டை வெடிக்காமல் காப்பாற்றிய சுஜாவுக்கு நன்றி சொல்லிவிட்டு எஸ்கேப் ஆனோம்.

— ஏக்ஜி

அட்டை, வண்ணப்படங்கள்: ஜரிஸ்

நியான் விளக்குகளின் வெளிச்சத்தில் சென்னை மிதந்துக் கொண்டிருக்க, அண்ணாசாலையில் அந்த மாருதி ஜென் ஊர்ந்தது. ஸ்டீயரிங்கைப் பிடித்திருந்த பார்வதா, பக்கத்தில் உட்கார்ந்திருந்த வருணிடம் மெல்லிய குரலில் கேட்டாள்.

"வருண்...! இப்போ மணி ஒன்பது. ஏதாவது ஒரு ஹோட்டலுக்குப் போய் டின்னர் சாப்டுட்டுப் போலாமா...?"

"வேண்டாம்..."

"ஏன்...?"

"எனக்குப் பசியில்லை..."

"எனக்குப் பசிக்குது. கம்பெனி கொடுக்க மாட்டீங்களா...?"

"ஸாரி... பார்வதா... நான் இப்போ சாப்பிடக்கூடிய மனநிலையில் இல்லை. நான் உடனடியா என்னோட ரூமுக்குப் போக வேண்டியிருக்கு. எனக்குக் கொஞ்சம் தனிமை வேணும்..."

"இதோ பாருங்க வருண்...! என்னோட பாஸ் தயானந்த் உங்களை நம்பி ஒரு பெரிய பொறுப்பை ஒப்படைச்சிருக்கார். தன் மனைவியோட மரணத்துக்குக் கீர்த்திவாசன்தான் காரணமான்னு கன்ஃபார்ம் பண்ணிக்க விரும்பறார். இதைப் போலீஸ் மூலமாகவோ தனியார் டிடெக்டிவ் ஏஜென்ஸி மூலமாகவோ கண்டு பிடிக்கச் சொன்னா விஷயம் எப்படியும் வெளியாகி கீர்த்திவாசன் காதுக்குப் போயிடும். அதனால்தான் பாஸ் உங்களை செலக்ட் பண்ணினார். இது சட்டத்துக்கு விரோதமான வேலை கிடையாது. வைசாலியின் மரணத்துக்குப் பின்னாடி இருக்கிற உண்மையான குற்றவாளியை பாஸுக்கு அடையாளம் காட்டப் போறீங்க அவ்வளவுதான்..."

"இருந்தாலும்... மனசுக்குள்ளே ஒரு இனம் புரியாத பயம்."

"என்ன பயம்...?"

"ஒரு வேண்டாத பிரச்னையை நோக்கி அடியெடுத்து வெச்சிட்டோமோ என்கிற பயம்தான்."

"தேவையில்லாத பயம். எனக்கு இந்தப் பொறுப்பைக் கொடுத்திருந்தா பாஸுக்கு ரெண்டு 'ஜே!' போட்டுட்டு வேலையை



# 14 மூடுபனி நிலவு

ஆரம்பிச்சிருப்பேன்."

"பார்வதா...! இந்த விஷயத்துல நீ எனக்கு ஹெல்ப் பண்ணக் கூடாதா...?"

"என்ன ஹெல்ப் வேணும்... சொல்லுங்க."

"கீர்த்திவாசன் உண்மையான கொலையாளியா இல்லையான்னு கண்டுபிடிக்கிற விஷயத்தில் நீ உதவி பண்ணினா என்ன...?"

"பண்றேன். பட் பாலுக்குத் தெரியக்கூடாது. சாயந்திரம் ஆறு மணிக்கு மேல் நான் ஃப்ரீ. எனக்கு ஒரு ஃபோன் பண்ணினா போதும். உங்களோடு வந்து ஜாய்ன் பண்ணிக்குவேன்..."

"தேங்க்யூ..."

"இப்பவாவது டின்னர் சாப்பிடலாமா?"

சரி..."

"அப்பாடா...! காட் ஈஸ் க்ரேட்! உங்களுக்கு எது பிடிக்கும் வருண்... வெஜ்... ஆர் நான்-வெஜ்...?"

"வெஜ்..."

"ஒரு கொலையைப் பண்ணிட்டு ஜெயிலுக்குப் போயிருக்கீங்க...! வெஜ் பிடிக்கும்ன்னு சொல்றீங்க...?"

வருண் பொய்க் கோபத்தோடு முறைக்க கார் ஸ்டீயரிங்கினின்றும் கைகளை எடுத்து ஒரு ஸாரி சொல்லி கன்னத்தில் போட்டுக் கொண்டான். "சீரியஸா எடுத்துக்காதீங்க சும்மா.... ஒரு ஜோக்குக்கு...! எந்த ஹோட்டலுக்குப் போலாம். சொல்லுங்க. சாய்ஸ் ஈஸ் யுவர்ஸ்."

"அமுதசுரபி..."

"நுங்கம்பாக்கம் ஹைரோட்ல இருக்கே?"

"அதேதான்..."

"பெஸ்ட் சாய்ஸ்! பாலும் நானும் ஒரு தடவை போயிருக்கோம்... ஹோம்லியா இருக்கும்."

காரின் வேகம் அதிகரித்து நுங்கம்பாக்கம் ஹைரோட்டின் மையப்பகுதியில் இருந்த அமுதசுரபியைத் தொட்ட போது மணி ஒன்பதரை.

தமிழ்நாட்டின் ஜாதிக் கட்சிகளைப் போல் விதத்துக்கு ஒன்றாய் நின்றிருந்த கார்களுக்கு மத்தியில் தன் 'ஜென்'னைச் செருகி நிறுத்திவிட்டு அமுதசுரபியின் ரூஃப் கார்டனை நோக்கி லிஃப்டில் பயணம் செய்து ஐந்தாவது மாடிக்கு வந்தார்கள்.



ராஜேஷ் குமார்

கேண்டில் லைட் வெளிச்சத்தில் பெரும்பாலான மேஜைகள் காலியாய்த் தெரிய ஒன்றைத் தேர்ந்தெடுத்துப் போய் உட்கார்ந்தார்கள். பேரர் வந்து மெனு கார்டை நீட்ட, பார்வதா வாங்கிக் கொண்டு வருணை ஏறிட்டாள்.

"நீங்க ஆர்டர் பண்றீங்களா...? நான் பண்ணட்டுமா?"

"நீ எது ஆர்டர் பண்ணினாலும் சரி..."

பார்வதா பேரரிடம் நிமிர்ந்தாள்.

"மொதல்ல... ரெண்டு மஷ்ரூம் சூப்... அப்புறம் ஒரு ப்ளேட் ப்ரைட் ரைஸ்... தென் நூடுல்ஸ்..."

பேரர் நகர்ந்தார். பார்வதா வாட்டர் ஜக்கை எடுத்து கண்ணாடி தம்ளரில் சரித்துக் கொண்டே கேட்டாள்.

"என்ன... வருண்...! நான் சொன்ன ஆர்டர் அயிட்டம்ஸ் சரிதானே...?"

"டபுள்... ஓ.கே..."

பதினைந்து நிமிஷத்தில் மஷ்ரூம் சூப் மணக்க மணக்க வந்தது. வருண் பெப்பரையும் சால்ட்டையும் சூப்பில் தூவி மர ஸ்பூனால் கலக்கிக் கொண்டிருந்த போது –

பேரர் மறுபடியும் பக்கத்தில் வந்து நின்றான்.

"ஸார்..."

வருண் நிமிர்ந்தான். கையில் ஒரு கடிதக் கவரோடு நின்றிருந்த பேரர் குனிந்து மெல்லிய குரலில் கேட்டான்.

"ஸார்... நீங்க மிஸ்டர் வருண்...?"

"ஆமா..."

"உங்களுக்கு ஒரு கவர் ஸார்..." பேரர் நீட்ட வருண் குழப்பமாய் அதைப் பார்த்தான்.

"என்ன கவர்.. இது...?"

"உங்களுக்கு இன்னிக்கு 'பர்த்டே'ன்னு சொல்லி ஒருத்தர் கவரைக் கொடுத்துட்டு போனார் ஸார்."

"எனக்குப் பர்த்டேயா... அப்படி யார் சொன்னது...?"

"ரிசப்ஷன்ல இருந்த ஒருத்தர் கொடுத்தார். உங்களுக்குப் பர்த்டேன்னு அவர்தான் சொன்னார்."

வருண் எழ முயல – பர்வதா கையமர்த்தினாள். "வருண்! மொதல்ல அந்த கவர்ல என்ன இருக்குன்னு பாருங்க..."

கவரின் வாயை உடைத்தான் வருண். உள்ளே இருந்த கம்ப்யூட்டர்தான் தமிழ் பேசியது.

*வருண்!*
*உன் வாழ்க்கைப் பயணத்தில்*
*இனிமேல்தான் அபாயகரமான*
*வளைவுகள் ஆரம்பம். கவனம் தேவை.*
*– அசரீரி.*

**ப**த்து மணிச் சூரியன் பின்னங்கழுத்தில் நெருப்பாய்த் தகிக்க யமுனா தெருவில் இறங்கி பக்கத்து பாலாஜி நகரில் இருக்கும் பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயிலை நோக்கி வேகவேகமாய் நடைபோட்டாள். இதயம் ஒரு குருக்ஷேத்ர போர்க்களமாய் மாறியிருந்தது.

தெருவில் அதிக நடமாட்டம் இல்லை. தெரிந்த முகங்களும் பார்வைக்குக் கிடைக்காமல் போகவே நடையில் வேகத்தைக் கூட்டினாள்.

சரியாய்ப் பன்னிரண்டு நிமிஷ நடை. கோயில் வந்தது. ஒரு டூரிஸ்ட் வேனிலிருந்து ஆட்கள் இறங்கி கோயிலுக்குள் போய்க் கொண்டிருந்தார்கள். கோயில் வாசலில் இருந்த பூக்கடையில் பத்து ரூபாய்க் கொடுத்து துளசி மாலையும் வாழையிலையில் வைத்துக் கட்டிய ஐம்பது கிராம் வெண்ணெயும் வாங்கிக் கொண்ட யமுனா, இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனைப் பார்வையால் தேடிக் கொண்டே கோயிலுக்குள் நுழைந்தாள். அவர் தட்டுப்படவில்லை. உள்ளே காத்துக் கொண்டிருக்கலாம். நடந்தாள்.

விநாயகர் சன்னதியை மூன்று தடவை வலம் வந்துவிட்டு படிகளில் ஏறி உட்பிரகாரத்துக்குள் நுழைந்தாள்.

ஸ்ரீ பஞ்சமுக ஆஞ்சநேயர் விஸ்வரூப தரிசன நிலையில் காட்சி கொடுத்தார். யமுனா உடம்பு சிலிர்க்க அப்படியே நின்றாள். உதடுகள் தன்னிச்சையாய் ஸ்லோகத்தை முணுமுணுத்தன.

ஸ்லோகம் சொல்லும்போது நரம்புகளில் ஐஸ்வாட்டர் பாய்வது போன்ற உணர்வு. ஸ்லோகங்களை முழுமையாய்ச் சொல்லி 'ராமச்சந்திரம் பஜே!' என்று சொல்லி முடித்த போது –

பின்பக்கம் அந்தக் குரல் கேட்டது.

"பரவாயில்லையே... மிஸஸ் யமுனா! சொன்னபடி சரியா பத்து மணிக்கு வந்துட்டீங்க...!"

யமுனா திரும்பினாள்.

இன்ஸ்பெக்டர் பால் பாண்டியன் ஒரு புன்னகையோடு தெரிந்தார். கோயில் என்பதற்காக உடை மாறி வெள்ளை வேஷ்டியிலும் சட்டையிலும் வந்திருந்தார்.

யமுனா சுற்றும் முற்றும் ஒரு அவசரப் பார்வை பார்த்துவிட்டு அவரை ஏறிட்டாள்.

**"போன தடவை உங்களை ஜெயிக்க வைச்சமே... இந்தத் தொகுதிக்கு என்ன செஞ்சீங்க?"**

**"அஞ்சு வருஷமா வராம இருந்து உங்களை நிம்மதியா இருக்க விட்டேனே... அது போதாதா...?"**

**– எஸ். சக்தி குணசீலன்**

"ஸார்...! நான் வீட்டுக்குச் சீக்கிரம் போக னும். வெளியே போயிருக்கிற என்னோட மாமனாரும் மாமியாரும் எந்த நிமிஷமும் வந்துடுவாங்க..."

''உங்க கையெழுத்து 'மாதிரி'யைக் கொண்டு வந்திருக்கீங்களா...?''

"இதோ...!" தன் கையோடு கொண்டு போயிருந்த தோல் பையைப் பிரித்து உள்ளே யிருந்து நான்கைந்து டைரித் தாள்களை எடுத்துக் கொடுத்தாள்.

பால்பாண்டியன் வாங்கிப் பார்த்தார். டைரித் தாள்களில் சமையல் குறிப்புகளும், அழகுக் குறிப்புகளும் எழுதப்பட்டிருந்தன. கேட்டார்.

''இது உங்க கையெழுத்துதானா யமுனா...?''

"ஆமா... ஸார்..."

''லீலா கிருஷ்ணனுக்கு எழுதப்பட்ட கடித வரிகளும் கவிதை வரிகளும் இதே மாதிரியான கையெழுத்தில்தானே இருக்கு.



பாருங்க... கொஞ்சம் கூட வித்தியாசம் தெரியலை."

வாழ்த்து அட்டையில் எழுதப்பட்டிருந்த கவிதை வரிகளைக் காட்டினார்.

யமுனா மறுபடியும் சுற்றும்முற்றும் பார்த்துவிட்டு பால்பாண்டியனைப் பார்த்துக் கும்பிட்டாள்.

"ஸார்...! இரண்டு கையெழுத்தும் பார்க் கிறதுக்கு ஒரே மாதிரியா இருந்தாலும் அந்த வாழ்த்து அட்டையில் இருக்கிற கையெழுத்து என்னோடது கிடையாது ஸார்..."

''இது உங்க கையெழுத்தா இல்லை யாங்கிறதை ஃபாரன்ஸிக் க்ராஃபால ஜிஸ்ட்கிட்டே கொடுத்து இன்னிக்குச் சாயந் தரத்துக்குள்ளே ரிப்போர்ட் வாங்கிடுவோம். ரெண்டும் ஒரே கையெழுத்துதான்னு ரிப்போர்ட் சொல்லிட்டா நீங்க போலீஸ் ஸ்டேஷனுக்கு வரவேண்டியிருக்கும்."

''ஸார்...! இந்த ஆஞ்சநேயர் மேல சத்தியமா அந்த வாழ்த்து அட்டையில் இருக் கிறது என்னோட கையெழுத்து கிடை யாது..."

"அதை ரிப்போர்ட் சொல்லட்டும்..."

"ஸார்.. அது என்னோட கையெழுத்து இல்லைன்னு ரிப்போர்ட் சொல்லிட்டா அதுக்கப்புறம் நீங்க என்னைத் தேடிக்கிட்டு வரமாட்டீங்க இல்லையா...?''

''பிரச்னை அவ்வளவு சுலபத்துல தீர்ந்துடாதே! லீலாகிருஷ்ணன் தற்கொலை பண்ணிக்கிட்டாரா? இல்லை கொலை செய்யப்பட்டாரான்னு தெரியலை. அதுல ஒரு குழப்பம் இருக்கு. எல்லாத்துக்கும் மேலா இது உங்க கையெழுத்தே இல் லைன்னு வெச்சுக்கிட்டாலும் உங்க மேல யாருக்கு என்ன கோபம்? லீலாகிருஷ் ணனையும் உங்களையும் எதுக்காக லிங்க் பண்ணணும்... அதனால யாருக்கு என்ன நன்மைன்னு இன்வெஸ்டிகேட் பண்ண வேண்டாமா...?"

"அதெல்லாம் வேண்டாம் ஸார்..."

"அப்படி எதையும் ஒதுக்கித் தள்ள முடியாது மிஸஸ் யமுனா... உண்மையை வெளியே கொண்டு வரணும்னா எல்லாப் பக்கமும் வெளிச்சம் அடிச்சேயாகணும்...."

''ஸார்...! இந்த விஷயம் வீட்டுக்குத் தெரியக்கூடாது. தெரிஞ்சா பெரிய பிரச் னையாயிடும்."

பால்பாண்டியன் புன்னகை செய்தார். "விஷயம் வீட்டுக்குத் தெரியறதும் தெரி யாததும் உங்க கையில்தான் இருக்கு. நான் எப்ப கூப்பிட்டாலும் நீங்க வீட்டை விட்டு வெளியே வந்து என்கூட பேசணும். முடியுமா உங்களால...?''

"ஸார்...! அது கொஞ்சம் கஷ்டம். நீங்க தான் கொஞ்சம் பெரிய மனசு பண்ணி..."

''ஸாரி மிஸஸ் யமுனா...! போலீஸ் விசாரணைங்கிறது ஒரு திறந்த புத்தகம் மாதிரி. வெளிப்படையா பண்ணினாதான் ரிசல்ட் கிடைக்கும். நான் கூப்பிடும்போது நீங்க வீட்டை விட்டு வெளியே வரணும். இல்லேன்னா நான் உங்க வீட்டுக்கு வந்து விசாரணை பண்றது தவிர வேறு வழி கிடையாது..."

யமுனாவின் கையில் இருந்த துளசி மாலை மெலிதாய் ஒரு நடுக்கத்துக்கு உட் பட்டது.

(தொடரும்)





• கிருஷ்ணமூர்த்தி



• மரகதம்



• கிருஷ்ணன்

# முதல்வர் மனம் வைப்பாரா...?

**நா**னும் வேலைக்கு வரேம்மா...' என்று மரகதம் அம்மாள் கெஞ்சியபோது தெருப் பெண்கள் அவரை ஆச்சர்யமாய்ப் பார்த்தார்கள். அறுபத்தைந்து வயது முதுமையோடு, பருத்திக்காட்டில் அவரால் என்ன செய்ய முடியும்!

"வீட்டுக்காரர் பென்ஷன் பணம் வருதில்லே... அப்புறம் இந்த வயசுல சம்பாரிச்சு யாருக்குச் சேர்க்கப்போறே" வாய்விட்டே கேட்டுவிட்டாள் ஓர் இளம் பெண். ஆனால் வெளியே சொல்ல முடியாத வேதனையோடு மௌனமாய் வேலைக்கு வந்தார் அந்த அம்மையார்.

கொளுத்தும் வெயிலில் பருத்திப் பூக்களைச் சேகரித்துக் கொண்டிருந்த போது திடீரென மயங்கி விழுந்தார். பதறிப் போன பெண்கள், மூச்சு பேச்சற்று கிடந்த அவரை அருகிலிருந்த செந்துறை அரசு மருத்துவமனைக்குத் தூக்கிப் போனார்கள். அவரைச் சோதித்த மருத்துவர், "இந்த அம்மாள் சாப்பிட்டு இரண்டு மூன்று நாட்கள் இருக்கலாம்" என்றார்!

அரியலூர் மாவட்டம், பொன்பரப்பியைச் சேர்ந்தவர் மரகதம்மாள். இவரது கணவர் கதர்-கிராமத் தொழில்வாரிய ஊழியராயிருந்து ஓய்வுபெற்றவர். கணவர் காலத்துக்குப் பின் வரவேண்டிய ஓய்வூதியம் மரகதம்மாளுக்கு வழங்கப்படவேயில்லை.

**கா**ங்கேயத்தைச் சேர்ந்த கிருஷ்ணனின் வாழ்க்கை, கருணை இல்லம் வரைப் போய் விட்டது.

"1993ல் நான் ஓய்வு பெற்ற போது கவலைப் படுவதற்குப் பதிலாக சந்தோஷப்பட்டேன். கிராஜுவிட்டி, கம்யூட்டேஷன் ஆகியவை, ஒன்றரை லட்சம் ரூபாயும், மாத ஓய்வூதியமாக ரூபாய் மூவாயிரமும் எனக்குக் கிடைக்குமே என்ற மகிழ்ச்சி. ஆனால் தரவேண்டிய தொகையில் ரூபாய் எழுபத்தைந்தாயிரம் பிடித்துக் கொண்ட கதர்வாரியம், எஞ்சிய தொகையைக் கொடுக்காமல், கடந்த எட்டாண்டுகளாக இழுத்தடிக்கிறது. இதைச் சகித்துக் கொள்ள முடியாமல் நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்தேன். வாரியமும் எதிர் வழக்காடியது. வழக்கில் எனக்குச் சாதகமாக தீர்ப்பு வந்தும் இதுவரை எனது பணம் கிடைக்கவில்லை. வேறு வழியில்லாமல், நானும் எனது மனைவியும் கருணை இல்லத்தில் சேர்ந்து விட்டோம்" என்று அழத் திராணியற்று தழுதழுக்கிறார் கிருஷ்ணன்.

**இ**வர்களைப் போல, தமிழகம் முழுவதும் ஐயாயிரம் கதர் கிராமத் தொழில் வாரிய ஓய்வூதியர்கள், வாழ்வா சாவா போராட்டம் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அத்தனைக்கும் இதோ ஆதாரம் என்று கட்டுக்கட்டாக



''அந்த ஜோக் எழுத்தாளர்கிட்ட ஏன்யா என்னோட ஜோக்கைக் காப்பி யடிச்சேன்னு கேட்டது தப்பாப் போச்சு!''

''என்ன சொன்னார்?''

''எது இன்று உன்னுடையதோ அது நாளை மற்றொருவனுடையதாகிறது... இது உலக நியதின்னு தத்துவம் பேச றாரு!''

— புளியரை கணேசன்

கடிதங்களைக் காட்டினார் கோ. கிருஷ்ண மூர்த்தி. ஓய்வுபெற்ற கதர்வாரிய ஊழியர் கள் சங்கத்தின் மாநிலப் பொதுச் செய லாளராகப் பொறுப்பு வகிக்கும் இவரும் கூட விதிவிலக்கல்ல. என்னதான் நடந்தது? அவரே சொல்கிறார்:

"தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம் 1960ல் தொடங்கப்பட்டது. அதற்கு முன்பு 'காதி இலாகா' கிராமத் தொழில் பிரிவு என்று இயங்கி வந்த இந்தத் துறைக்கு, காந்தியத் திட்டத்தில் பணியாற்ற யாரும் முன்வராத காலத்தில், வேலைக்குச் சேர்ந்து, கதர்மூட்டை யைத் தெருத் தெருவாகச் சுமந்து, குக்கிராமங் களுக்குக்கூட கதரை எடுத்துச் சென்றோம். இப்படி முப்பது, நாற்பது ஆண்டுகள் பணியாற்றினோம்.

"கதர் உற்பத்தி, விற்பனையில் இந்தியா விலேயே முதலிடம் பிடித்தது எங்கள் கதர் கிராமத் தொழில் வாரியம்.

"இந்தத் துறை வாரியமாக மாற்றப்பட்ட போது, அரசு உறுதியளித்த ஊதிய விகிதம், ஓய்வூதிய விகிதம், அகவிலைப்படி உயர்வு, நலத்திட்டங்கள் போன்ற யாவும் அரசுப் பணியாளர்களுக்கு இணையாக வழங்கியது. அதில்தான் இப்போது கிணற்றில் விழுந்த கல் மாதிரி தேக்கநிலை! கடந்த 1997ஆம் ஆண்டு கலைஞர் அரசு அமல்படுத்திய ஓய்வூதியர் காலமானால் வாரிசுக்கு ரூபாய் இருபத்தை யாயிரம் வழங்கும் குடும்பக் காப்புநிதி நான் காண்டுகளாகியும் கதர்வாரிய ஓய்வூதியர் களுக்கு அமல்படுத்தப்படவில்லை. திருத்திய ஓய்வூதிய நிலுவை, வழங்கப்படாத அக விலைப்படி உயர்வு, கிராஜுவிட்டி, கம்யூட் டேஷன் போன்ற தொகைகளை வழங்குவதில் ஆண்டுக்கணக்கில் தாமதம்! இந்த கொடூரப் பட்டியலை நீட்டிக் கொண்டே போகலாம். எண்ணற்ற ஓய்வூதியர்களுக்கு 'இடைக்கால ஓய்வூதியம்' என்ற பெயரில் ரூபாய் ஐந்நூறு முதல் ஆயிரம் வரை சிறு தொகையை அனுப்பி முழு ஓய்வூதியத்தையும் தராமல் கொடுமை செய்து வருகிறது கதர்கிராமத் தொழில் வாரியம்.

"இந்த நிர்வாகச் சீர்கேட்டிற்கு என்ன காரணம் என்று கேட்டால் வாரியத்தில் நிதி இல்லை என்று அதிகாரிகள் சப்பைக் கட்டு கட்டுகிறார்கள். ஓய்வூதியம் வழங்க அரசு தரும் மானியத்தை, வாரியத்தின் நடைமுறை மூலதனமாகப் பயன்படுத்திவிட்டு, ஓய்வூதியர் களின் வயிற்றில் அடிக்கிறார்கள்! இந்த அவல நிலை அகல ஒரே வழி, அரசு ஓய்வூதியர் களைப் போல, எங்களுக்கும் 'கருவூலம்' மூலம் ஓய்வூதியம் வழங்குவதுதான்" என்று அடித்துச் சொல்கிறார் கிருஷ்ணமூர்த்தி.

இதற்காகப் பலமுறை அதிகாரிகளைப் பார்த்து எடுத்துச் சொல்லியும் நிதிச் செயலகம் இந்தக் கோரிக்கையை நிராகரித்து விட்டிருக்கிறது. முதல்வரை நேரில் பார்க்க பலமுறை முயன்றும், முடியவில்லை. முதல்வரின் கவனத்திலிருந்து, திட்டமிட்டே இந்தச் சீர்கேடுகள் மறைக்கப்படுகின்றன என்று குற்றம் சாட்டுகிறார்கள் இந்த முதியோர்கள்.

தற்போது கதர்வாரியத்தின் இயக்குனராகப் பொறுப்பேற்றுள்ள சத்தியராஜகோபாலிடம் இந்தக் குறைகளை எடுத்துச் சென்றோம்.

''பல குறைகளை விரைவில் தீர்க்க நடவடிக்கை எடுத்து வருகிறோம். ஓய் வூதியத்தைக் கருவூலம் மூலமாக வழங்குவது தொடர்பாக அரசுதான் முடிவெடுக்க வேண்டும்'' என்றார். இதையடுத்து, தமிழக அரசின் நிதிச் செயலாளர் சந்தானகிருஷ் ணனைச் சந்தித்தோம்.

"இந்தப் பிரச்னையே இப்போதுதான் என் கவனத்திற்கு வந்திருக்கிறது. பரிசீலித்துதான் ஒரு முடிவுக்கு வர முடியும்" என்று சொல்லி விட்டார்.

"ஓய்வூதியம் என்பது அரசு ஊழியர்களின் அடிப்படை உரிமை. அதைத் தாமதப்படுத் துவது மன்னிக்க முடியாத குற்றம்" என்று உச்சநீதி மன்றம் ஏற்கெனவே தீர்ப்பு வழங்கி யிருக்கிறது.

உச்சநீதி மன்றத் தீர்ப்பை அவமதிக்கும் குற்றத்துக்கு என்ன தண்டனை?...

— சக்கரத்தாழ்வார்

படங்கள்: ராஜன்

PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA

*Aum Sairam*

# *Marriage*

## *In Your Family!*

We know it is a Himalayan task to perform it these days. But you can now be relieved of all tension and forget the ordeal, when you come to us. From A to Z we make all arrangements for you.

## Prabhala Marriage Caterers

**Estd : 1988**

**9, K.V. Colony, 1st Street, (Near Ayodya Mandapam)**
**West Mambalam, Chennai - 600 033. Ph: 4890044**

*We arrange for you*

*Nadaswaram - Flowers/Garlands-Catering Seer Items (Sweets & Savouries) - Muhurtha Thambulam -Silk Mat - Kasi Yatra Items - Angamani Seer- Vaidheega Samangal - "Morning Mariyadhai " items*

**N.B:** We are the one and the only Caterer in whole of Chennai who use only Pure Ghee in all our preparations, avoiding Dalda totally.

**We provide the seer items from the famous Grand Sweets & Snacks. Adyar**

E-mail:prabhala@eth.net

PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA

---

KS&Co

**தமிழ் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்!**

KS&Co

**ஆந்திரா பொன்னி பச்சை அரிசி**
**தமிழ்நாடு பொன்னி புழுங்கல் அரிசி**

மற்றும் அனைத்து தரமான அரிசி ரகங்களும் மிகக் குறைந்த விலையில் என்றும் கிடைக்குமிடம்

# K. சுப்ரமணியம் & கோ

✠ ரூ. 500/- மேல் பொருட்கள் வாங்குபவர்களுக்கு சிறப்பு பரிசும் உண்டு.

| | | |
|---|---|---|
| 47, சௌத் வெஸ்ட் போக் ரோடு, தி. நகர், சென்னை - 17. ✆ 4360580, 4360590 | 21, நடேசன் தெரு, தி. நகர், சென்னை - 17. ✆ 4345522, 4345590 | 1, சிங்கார தோட்டம் 2வது சந்து, சென்னை - 600 021. ✆ 5953822, 5953894 |

**VISA & MASTER CREDIT CARDS ACCEPTED**

VISIT US @www.tnagar.com/ksandco. E-Mail - ks and co @ tnagar. com

குறைந்த கட்டணத்தில் டோர் டெலிவரியும் உண்டு!

# “நாங்க

## ஹாட்டான ‘தாதா’க்கள் கூலான கதை!

வியாசர்பாடி. வட சென்னையின் மையப்பகுதி. பேருந்து நம்மை இறக்கிவிட்டுப் போனதும், இதயம் கூடுதல் ‘திக்’குடன் துடிக்கத் தொடங்கியது. ‘எதற்கு வீண் வம்பு, அடுத்த பேருந்தில் மரியாதையாய் அலுவலகம் போய்ச் சேர்’ என்று உள்ளே மணியடித்தது.

‘இவ்வளவு தூரம் வந்துவிட்டுத் திரும்பிப் போனால் நீயெல்லாம் ஒரு நிருபனா?’ என்று புகைப்படக்காரர் ‘புகழ்ந்து’ தள்ளி விடுவாரோ என்ற பயம் இன்னொரு பக்கம். வேறு வழியே இல்லாமல் ஆண்டவன்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு நடந்தோம். யாரிந்த ‘பிளாக் ஷீப்’ என்ற சந்தேகப் பார்வையோடு எதிர்ப்பட்ட இருபது வயது பெண்ணிடம், வெள்ளை ரவி வீட்டிற்கு எப்படிப்போகணும் என்று திக்கித் திணறி கேட்டு வைத்தோம்.

“அதோ அந்த பெட்டிக் கடைக்குப் பக்கத்துல ஒரு சந்து போகும்... அங்கே போயி கேளுங்க” - என்று அலட்டிக் கொள்ளாமல் வழிகாட்டினார் அந்தப் பெண். அந்தப் பெயரை உச்சரிக்கவே பயந்த இந்தப் பகுதி மக்களுக்கு எப்படி தைரியம் வந்தது?

கடந்த பதினான்கு ஆண்டுகளாக சோடா பாட்டிலும், பெட்ரோல் குண்டுகளும் பறந்து கொண்டிருந்த ரவுடிகளின் ராஜ்யம் இன்று போதி மரக் காடாகிவிட்டதா? வெள்ளை ரவி வீட்டை நெருங்கினோம். பத்து பன்னிரண்டு இளைஞர்கள் தெருவோரத்தில் கேரம்போர்டு விளையாடியபடி இருந்தனர். அவர்களை நெருங்கி... “வெள்ளை ரவியைப் பார்க்கணுமே” என்றோம். “நான்தான் வாங்க” என்றபடி எழுந்தார் அந்தக் குழுவில் விளையாடிக் கொண்டிருந்த ஓர் இளைஞர். ஒருகணம் தூக்கி வாரிப்போட்டது. ‘இது தாண்டா போலீஸ்’ படத்தில் “ஸ்பாட் வெச்சுடுவேன்” என்று டயலாக் பேசி எல்லோரையும் பயமுறுத்திய சினிமா வில்லன் மாதிரியான தோற்றம். பத்திரிகை என்றதுமே நமக்கு வேலை வைக்காமல் வெள்ளை ரவியே தனது பிளேஷ்பேக்கைச் சொல்ல ஆரம்பித்தார்.

“சின்ன வயதில் பள்ளிப் படிப்பைத் தொடர முடியாதபடி வீட்டில் வறுமை. அதனால் சில்வர்பட்டறையில் வேலைக்குச்



• வெள்ளை ரவி

• சேரா

• மைக்கேல்

# திருந்திட்டோம்!”

சேர்ந்து பாலிஷ் வேலையைக் கற்றுக் கொண்டேன். கைநிறைய சம்பளம். ஆனால் கஷ்டம் என்று சொல்கிறவர்களுக்கு வழியிலேயே பணத்தைக் கொடுத்துவிட்டு வீட்டிற்கு வந்துவிடுவேன். கோவில் திருவிழா மாதிரி பொதுக் காரியங்களில் அதிக ஈடுபாடு காட்டுவேன். இந்திய ஜனநாயக வாலிபர் சங்கத்தில் என்னைச் சேர்த்துக் கொண்டார்கள். வேலைக்குப் போகாமல் பொதுச் சேவை என்று கிளம்பி விட்டேன். இதில் கட்டை பஞ்சாயத்துகளும் அடக்கம். ஒரு பஞ்சாயத்தில் சமரசம் செய்து வைத்தபோது ஏற்பட்ட கைகலப்பு போலீஸ் கேசாக மாறிவிட்டது. இப்படித் தொடங்கிய வாழ்க்கை பல குற்றச் செயல்களில் எங்களைச் சிக்கவைத்துவிட்டது.

தலைமறைவு, ஜெயில் என்று மாறி மாறி நிம்மதி இல்லாத வாழ்க்கை தொடங்கியது இப்படித்தான்.

“இன்னொரு பக்கம் எங்களுக்கு எதிரணியாகச் செயல்பட்ட சேரா கோஷ்டியும் நாங்களும் அடிக்கடி மோதிக் கொண்டோம். இதில் இரு தரப்பிலுமே நிறைய சேதம். வட சென்னையா, அய்யய்யோ.. என்று பொது மக்கள் அலற ஆரம்பித்தார்கள். இதனால் குண்டர் தடுப்புச் சட்டத்தில் போலீஸ் எங்களைச் சிறையில் அடைத்தது. 1993ல் இனி திருந்தி வாழ்வது என்ற முடிவுடன் வெளியே வந்தோம். ஆனால் போலீஸ் விடவில்லை. எங்கள் பெயரைப் பயன்படுத்தி யார் யாரோ செய்த குற்றங்களுக்காக எங்களைத் துரத்

தினார்கள். எங்காவது சென்று பிச்சை எடுத்தாவது பிழைத்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்து தலைமறைவாகிவிட்டேன்.

"ஒரு கிராமத்தில் விவசாயக் கூலி வேலை செய்து சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் நான் எங்கே ஒளிந்திருக்கிறேன் என்று கேட்டு எனது தந்தையைப் பிடித்துச் சென்று அவர்மீது கஞ்சா கேஸ் போட்டு மூன்று மாதம் உள்ளே தள்ளிவிட்டார்கள். எனது அம்மாவையும் பிடித்துச் சென்று அடித்துச் சித்திரவதை செய்ததில், அவரது கர்ப்பப்பையையே எடுக்கும்படி ஆகிவிட்டது. தண்டனை முடிந்து வெளியே வந்த அப்பா, அவமானத்தால் அன்றே தூக்குப் போட்டு தற்கொலை செய்து கொண்டார். இதைப் பேப்பரில் படித்துத் தெரிந்து கொண்டு அழு தேன். அவர் உடலைக் கூட பார்க்க முடியா மல், வாழும் வாழ்க்கையை நினைத்து புழுங் கினேன். என்னைக் காரணம் காட்டி, எனது அண்ணனைக் காது செவிடாகும்படி அடித்துத் துன்புறுத்தியதோடு, எனது சகோதரிகளை யும் சித்தரவதை செய்தார்கள்.

"பொறுக்க முடியாமல் வீட்டிற்கு வந் தேன். 'என் கணவன் சாவுக்கு நீதான் கார ணம்' என்று அம்மா என்னை வெறுத்தார் கள். அன்றுதான் அம்மா என்னிடம் கடைசியாக பேசிய நாள். மனரீதியாக பாதிக்கப்பட்டு திருந்தி வாழ்வதே ஒரே வழி

---

**"கேள்வித்தான் ஒரே குழறுபடியா இருக்கு சார்?"**

**"எதை வெச்சு சொல்றே?"**

**"மூன்று கேள்விகளுக்குச் சரியான பதில் எழுதினா ரூ.6000ம்னு, அச்சாகி இருக்கு சார்!"**

**- உ. ராமநாதன்**



---

என்று முடிவு செய்தபோது எதிரணியில் இருந்த சேரா கோஷ்டியினர் எங்களுக்குப் பெரிய சவாலாக இருந்தனர். அவர்களோடு மோதிச் சாவதோடு, சமாதனமாகப் போய் விட்டால், என்னை நம்பி வந்த இளைஞர் களின் வாழ்க்கையில் மறுமலர்ச்சி கிடைக் கும் என்று நினைத்தேன்.

"அக்னி நட்சத்திரமாக இருந்த நாங்கள் இருவரும் விசாரணைக்காக நீதிமன்றம் வரும் போதும் சந்தித்துப் பேச மைக்கேல் அண் ணன் ஏற்பாடு செய்தார். எங்கள் இருவருக் கும் அவர்தான் வக்கீல். எக்ஸ்னோரா அமைப்பைச் சேர்ந்த ரவி, நடராஜன் ஆகி யோரின் உதவியும் காவல்துறையின் கருணை யும், எங்களை இன்று நண்பர்களாக்கிவிட் டது. பழைய வாழ்க்கையைத் தலைமுழுகி விட்டு திருந்திப் புதிய வாழ்க்கையைத் தொடங்கியிருக்கிறோம். சுற்றுச் சூழல் கெட்டுக் குப்பை மேடாக காட்சி தரும் வட சென்னையைச் சொர்க்க பூமியாக மாற்ற எங்கள் வாழ்நாளைச் செலவிடுவது என்று முடிவு செய்து விட்டோம். இதற்காக எக்ஸ் னோரா உதவியுடன் தெருக்களைச் சுத்தம் செய்யும் பணியைத் தொடங்கி மரக்கன்று களை நட்டு வருகிறோம்." என்றவர், "வாருங் கள் சேரா அண்ணனிடம் அழைத்துப் போகிறேன்" என்று புறப்பட்டார்.

எதிரும் புதிருமாய் கீரியும் பாம்புமாய் வட சென்னையையே ஒரு வழி பண்ணிக் கொண்டிருந்த இருவரும் நம் கண் முன்னால் கட்டிப் பிடித்துக் கொண்டார்கள். எரிமலை கள் இரண்டும் கூலாக இளநீர் குடிப்பதை நம்ப முடியாமல் திணறினோம். சேரா பேசினார்.

"சின்ன வயதில் யோசிக்காமல் ரவுடி யிசத்தில் வீழ்ந்துவிட்டோம். இரு தரப் பிலுமே இனி இழப்பதற்கு எதுவுமில்லை. எங்கள் மனமாற்றத்திற்கு நாங்கள் இருவரும் சிறையில் ஒரே அறையில் தங்கி இருந்ததும் ஒரு காரணம். அங்கே மனம் விட்டுப் பேசி னோம். அதற்காக காவல் துறைக்கு நன்றி சொல்லியே ஆக வேண்டும். அதே நேரம் மறுபடியும் எங்களைத் துன்புறுத்த நினைத்தால் எங்களால் தாங்க முடியாது. அதற்குக் காவல் துறையின் ஒத்துழைப்பு தேவை, அதற்கு எந்த விலை கொடுக்கவும் நாங்கள் தயார்" என்றவர், அங்கே வந்த

வழக்கறிஞர் மைக்கேலை அறிமுகப் படுத்தினார்.

"வெள்ளை ரவி, சேரா இருவரையும் சிறுவர்களாக இருந்த போதிலிருந்தே எனக்குத் தெரியும். இருவரும் எந்த சூழ்நிலையில் ரவுடிகளாக ஆனார்கள் என்பது வட சென்னை மக்களுக்கே தெரியும். கணக்குக் காட்டுவதற்காக காவல்துறை இவர்கள்மீது போட்ட, அடுக்கடுக்கான பொய் வழக்குகளில் மனநலம் மழுங்கிப் போய்த்தான், ரவுடியிசத்தை முழு நேரத் தொழிலாக எடுத்துக் கொண்டார்கள். இருவருக்காவும் எல்லா வழக்குகளையும் நானே சந்தித்திருக்கிறேன். 'மைக்கேல் அண்ணன்' என்று என்னை மரியாதையாகக் கூப்பிடும் அவர்கள் எனது வார்த்தைக்கு மதிப்பு கொடுத்தார்கள். இந்த நேரத்தில் மாநகர போலீஸ் கமிஷனரும், எக்ஸ்னோரா நிர்மலும் பாலமாக நின்று இவர்களை இணைத்து விட்டார்கள். இன்று வெள்ளை ரவியும், சேராவும், தங்களது இளைஞர் பட்டாளத்தோடு வடசென்னை தெருக்களில் குப்பை பொறுக்கிக் கொண்டிருக்கும் காட்சியைப் பொது மக்கள் ஆச்சர்யமாகப் பார்க்கிறார்கள். சமூகமும் சட்டமும் மன்னிக்கத் தயாராக இருந்தால் இன்னும் பல வெள்ளை ரவிகள் அமைதியான வாழ்க்கைக்குத் திரும்புவார்கள். அது காவல் துறையின் கையில்தான் இருக்கிறது.

"ஆனால் ஒவ்வொரு மாதமும் போலீஸ் அதிகாரிகள் போடும் கூட்டத்தில், உனது ஏரியாவில் ஒரு புட்-அப் கேசு கூடவா இல்லை? மகாகவி பாரதியார் நகர் மோசமான ஏரியாவாயிற்றே, துணிஞ்சு நாலு கேசு போடுய்யா என்ற ரீதியில் செயல்பட்டால், மீண்டும் இவர்கள் ரவுடி யிசத்தைத் தானே கையிலெடுக்க வேண்டி வரும்"

மைக்கேலின் கேள்வியில் அர்த்தம் இருக்கிறது. வடசென்னைக்குப் புறப்படும் முன்பு இருந்த பயம், இவர்களைச் சந்தித்த பிறகு போய்விட்டாலும், மறுபடி ஒரு பயம் நெஞ்சுக்குள் கூடு கட்டியது. இந்தத் தேன் கூட்டைக் காவல்துறை கலைத்துவிடக் கூடாதே என்கிற பயம்.

சந்திப்பு : ஜெயந்தன்
படங்கள் : ஜரிஸ்

சன் டீ.வி.யின் 'நீங்கள் கேட்ட பாடல்' நிகழ்ச்சிக்காக கொழும்பு, சிங்கப்பூர் உட்பட பல்வேறு நாடுகளுக்கும் ஊர்களுக்கும் சென்று, தம்பதிகளைச் சந்திக்கும் விஜயசாரதி, தமது பயண அனுபவங்கள் சிலவற்றை விடுமுறை ஸ்பெஷலுக்காக கூறுகிறார் :

**ஊ**ட்டிக்குச் சென்றிருந்த சமயம், அங்குள்ள பிரபலமான ஏரி மட்டுமின்றி, பைகாரா ஏரிக்கும் சென்றிருந்தோம். நிகழ்ச்சியின் இடையிடையே காட்டுவதற்கான இயற்கைக் காட்சிகளைப் படம்பிடிக்க குழுவினருடன் துடுப்புப் போடும் படகில் சென்றோம். புறப்படும் போது, நன்றாக இருந்த வானம், ஏரியின் உட்பகுதிக்குள் சென்றவுடன், கருமேகம் சூழ்ந்து, இருட்டிக் கொண்டு விட்டது. சடசடவென்று மழையும் பிடித்துக் கொண்டது.

எங்களை, விரைவாகக் கரைக்கு அழைத்து வர படகுத் துறை அதிகாரி, ஒரு மோட்டார் படகை அனுப்பி வைக்க, அது வந்ததும் எங்களுக்கு ஒரே மகிழ்ச்சி. எங்கள் சட்டைகளைக் கழற்றி, வீடியோ கேமராவை மூடி படகின் மூலையில் பத்திரப்படுத்திவிட்டு, புறப்படத் தயாரானோம்.

விதி சதி செய்தது. மோட்டார் படகில் ஏதோ கோளாறு. அடுத்து என்ன செய்வது என்று புரியவில்லை. மழை எப்போது ஓயும் என்று தெரியவில்லை; படகை எப்படி ரிப்பேர் செய்வது என்றும் புரியவில்லை. நேரம் ஓடிக் கொண்டிருந்தது. இருட்டு வேறு.

எங்களை அழைத்து வர அனுப்பிய மோட்டார் படகும் திரும்பி வராததால், படகுத்துறை அதிகாரி, இன்னொரு மோட்டார் படகை அனுப்பி வைக்க, அந்தப் படகில் ஏறி அனைவரும் பத்திரமாய்க் கரை வந்து சேர்ந்தோம்.

சாதாரண ஊட்டி மழையே எங்களை இந்தப் பாடுபடுத்திவிட்டது என்றால், டைட்டானிக் கப்பல் மூழ்கியபோது, அதன் பயணிகள் எத்தனை கஷ்டப்பட்டிருப்பார்கள் என்று யோசித்துப் பார்த்தேன். 'ஜில்'விட்டது உடம்பு.



**அ**ந்தமானுக்கு, விமானத்தில் போய் இறங்கினாலும், ஒரு கப்பலின் உள்ளே சென்று சில காட்சிகளைப் படம்பிடிக்க விரும்பினோம். நாங்கள் அனுமதி பெற்று, கப்பலின் உள்ளே நுழைந்தபோது, பயணிகள் அனைவரும் இறங்கியபின், ஒவ்வொரு பகுதியாக செக் பண்ணி, மூடிக் கொண்டிருந்தார்கள். எங்களுக்குக் கிடைத்த ஒருசில நிமிடங்களில்; சட்டென்று நான் சேகரித்து வைத்திருந்த அந்தமான் பற்றிய தகவல்களை ஒத்திகை பார்த்துக் கொண்டு, அவற்றைச்

# ரூபாய் நோட்டுக்குள் மாமல்லபுர மான்!

சிங்கப்பூருக்குச் சென்றிருந்தபோது, அங்குள்ள சன் சிடி என்ற இடத்தில், ஒரு தமிழ் நாட்டுக்காரர் என்னை அடையாளம் கண்டு கொண்டு, விசாரித்தார். அவர், ஏவி.எம். குமரனின் மகன் சண்முகம்.

அப்போது ஏற்பட்ட நட்பு, இன்று, அவர்களது 'பணம்- பெண்-பாசம்' டெலி சீரியலில் நடிக்கிற வாய்ப்பைப் பெற்றுத் தந்தது.

சிங்கப்பூரில் நீங்கள் கேட்ட பாடல் நிகழ்ச்சிக்காக நான் சந்தித்த ஒரு தம்பதியை, அண்மையில் கொழும்பு சென்றிருந்தபோது, அங்கே ஏர்போர்ட்டில் சந்தித்தது, மறக்க முடியாத ஒன்று!

சொன்னபடியே நடந்து வந்து, கப்பலை விட்டு இறங்கினேன். மொத்தமும் ஒரே ஷாட். ஆனந்தம் தாங்கவில்லை.

அந்தமானில், உள்ள செல்லுலர் ஜெயில், ஒவ்வொரு இந்தியனும் கண்டிப்பாகப் பார்க்க வேண்டிய இடம். அங்கே, அந்த ஜெயிலின் வரலாற்று முக்கியத்துவத்தை விளக்கும் படியாக, ஒரு மணி நேர ஒலி-ஒளி காட்சி ஒன்றை நடத்துகிறார்கள். அதைப் பார்க்கிறபோது, நாம், சுதந்தரப் போராட்ட காலத்துக்கே சென்று விட்டது போன்ற உணர்வு ஏற்பட்டு விடுகிறது. இன்று நினைத்தாலும் எனக்கு மெய்சிலிர்க்கும் விஷயம் இது.







கொழும்பு நகரில் நான் யதேச்சையாக சந்தித்த வி.ஐ.பி. பிரபல கிரிக்கெட் வீரரான முத்தையா முரளீதரன். அவருக்கு நன்றாகத் தமிழ் பேச வருகிறது. கொழும்பு நகரில் எங்கு பார்த்தாலும் ராணுவ செக் போஸ்ட்தான். செக்போஸ்ட்டில், யார் சென்றாலும், நின்றே ஆக வேண்டும். நிற்காமல், காரில் வேகமாய் சென்று விட்டால், அடுத்த பத்தடியில், காரை நிறுத்தும்படி, அறிவிப்பு தருவார்கள். அதை

## இதுதாங்க லேடீஸ்!

மூன்று நாட்களில், பதினெட்டாயிரம் பெண்களை, ஒரே இடத்துக்கு வரவழைக்க முடியுமா? (அதுவும், பெண்களுடன் வரா விட்டால், ஆண்களுக்கு அனுமதி கிடையாது என்ற விசித்திர கண்டிஷன் வேறு!) பெண்களுக்கான பிரத்யேக கண்காட்சி ஒன்றை நடத்தி



• கண்காட்சியில் சிறப்பு விருந்தினராக ஜெயசுதா

யதன் மூல மாக வரவழைத்திருக்கிறார் ஜாகீர்! ஏகப்பட்ட கண்காட்சிகளை, இந்திய நகரங்களில் மட்டுமின்றி, அயல்நாடுகளிலும் நடத்திய அனுபவசாலி.

இந்தக் கண்காட்சியில், பெண்கள் நாற்பது பேர் பங்கேற்ற ஒரு சமையல் போட்டி நடந்தது. கண்டிஷன் : அடுப்பைப் பயன் படுத்தாமல், ஏதாவது சமைக்க வேண்டும்– அரைமணி நேரத்தில்.

பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்த சில அம்மணிகளைப் பார்த்தபோது, அவர்கள் போட்டி விதியைச் சரியாகப் புரிந்து கொள்ள வில்லை என்று புரிந்துவிட்டது. ஆம்! போட்டிக்கான அரை மணி நேரத்தில் அடுப்பைப் பயன்படுத்தக் கூடாது என்பதால், வீட்டிலேயே சமைத்து எடுத்துக் கொண்டு வந்து, இங்கே பச்சைக் காய்கறிகள் கொண்டு அலங்கரித்துக் கொண்டிருந்தனர்! (இத்தகைய ஐட்டங்கள், நடுவர்களால் நிராகரிக்கப்பட்டுவிட்டன!)

நடுவர்கள் ஒவ்வொரு ஐட்டத்தையும் அலங்காரம் ருசி, சத்து அடிப்படையில் ஆராய்ந்து, பரிசுகளை அறிவித்தபின், பார்வையாளர்களும் மேடையேறி, அங்கே பார்வைக்கு வைக்கப்பட்டிருந்த அத்தனை ஐட்டங்களையும் பார்க்கவும், ருசிக்கவும் அனுமதிக்கப்பட்டனர். முதல் பரிசு பெற்ற ஐட்டத்தை ருசித்த ஓர் இளம் பெண், 'ஓ! வாவ்!' என்று ரசிக்க, ஒரு பெண்மணி, வாயில் போட்டுக் கொண்ட மாத்திரத்தில் அடித்த கமெண்ட் 'நாட் தட் குட்!'' இதுதாங்க லேடீஸ்!

- சி.எம்.

சட்டை செய்யாமல் போனால், அடுத்த பத்தடியில் நிற்கும் ராணுவ வீரர்கள் துப்பாக்கியால் சுட்டுத் தள்ளி விடுவார்களாம்! இலங்கையின் ஒரு பிரபல நடிகர், தாம் பிரபலமான ஹீரோவாயிற்றே என்கிற தோரணையில், காரை நிறுத்தாமல் சென்றுவிட, அவர் ஸ்பாட்டிலேயே குண்டடிபட்டு மரணமடைய நேரிட்டதாம்!

எனக்குள்ளே இனம்புரியாத ஓர் உணர்வு ஏற்பட்ட இடம் தாஜ்மஹால். அதையே சிறிது நேரம் கண்கொட்டாமல், ஆழமாய்ப் பார்த்து ரசித்தேன். 'இங்கேதான், டயனா அமர்ந்து, போட்டோ எடுத்துக் கொண்டார்' என்று சொன்னார் ஒரு கைடு.

தாஜ்மகாலைப் பார்க்கப் போகிறவர்கள் தவறாமல் அந்த வளாகத்தின் உள்ளே இருக்கும் மியூசியத்தையும் பாருங்கள். மொகலாய மன்னர்கள் பயன்படுத்திய பல அரிய பொருட்களை அங்கே காணலாம். அவற்றுள் என்னை வியப்பில் ஆழ்த்திய ஐட்டம்: அரசர்கள் சாப்பிடுவதற்கு முன், உணவை ஒரு பிரத்யேக பீங்கான் பாத்திரத்தில் சிறிது நேரம் வைத்திருந்து, அதன் பின், சாப்பிடுவார்களாம். காரணம், உணவில் விஷம் கலக்கப்பட்டிருந்தால், அந்தப் பாத்திரம் நிறம் மாறி, உண்மையை வெளிப்படுத்தி விடுமாம்! யப்பாடி!

மகாபலிபுரத்தில் அர்ச்சுனன் தவம் சிற்பத்தைப் படம்பிடித்துக் கொண்டிருந்தோம். அங்கே நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பலூன் வியாபாரி ஒருவர், சிற்பத்தில் இடம்பெற்றிருந்த ஒரு மானைச் சுட்டிக்காட்டி, 'இந்த மான் சிற்பத்தை முன்னாள் பிரதமர் இந்திரா காந்தி பார்த்து, ரொம்ப ரசித்தார். அது அவரை வெகுவாகக் கவர்ந்ததன் விளைவுதான் அந்த மான் சிற்பத்தை ரூபாய் நோட்டில் இடம்பெறச் செய்தது' என்றார்.

அனுபவங்களை அள்ளிக் கொட்டிய விஜய சாரதியைக் கொஞ்சம் தட்டி உசுப்பி, "நீங்கள் சந்திக்கிற ஒவ்வொரு தம்பதியிடமும் ஒரேவிதமான கேள்விகளையே கேட்டு போரடிக்கிறீர்களே?'' என்றோம்.

"வெறுமனே, உங்களுக்குப் பிடித்த பாடல் ஒன்றைச் சொல்லுங்கள் என்று கேட்டு, பாடலை ஒளிபரப்பாமல், நேயர்களை சிறிதளவாவது பேசி பங்கேற்கச் செய்வதே எனது நோக்கம். சாதாரணமாக, புதிதாய் சந்திக்கிற தம்பதிகளிடம் என்ன சார் கேட்டு விட முடியும்? அரசியலைத் தவிர்த்தால், அடுத்த வெகுஜன சப்ஜெக்ட் சினிமாதானே! அதுவும் போகட்டும், நான் ஒரே விதமான கேள்வியைக் கேட்டாலும், ஒவ்வொருவரும் வெவ்வேறு விதமான பதில்களைத்தானே சொல்லுகிறார்கள்! அது போதாதா?''

சந்திப்பு : **பாரதி**



# நிசப்த ஸ்வரங்கள்

எஸ். சங்கரநாராயணன்

அது அவனது தொழில் நியதி.

பாத்திரம் விற்பவன்போல பகலில் ஊரைச் சுற்றி வருவான். 'அலுமினியம், பித்தாளை, எவர்சில்வர் பாத்ரேம்...' என்கிற விநோத சப்தத்தை, அவனது தெரு வழைப்பை நீங்கள் கேட்டிருந்தால் தயவு செய்து கதவைத் திறக்க வேண்டாம். அவனை அழைத்துப் பேச வேண்டாம். அவனிடம் வியாபாரம் வைத்துக் கொள்ள வேண்டாம்...

அவன் ஒரு திருடன். அது அவளுக்குத் தெரியாது.

அவன் கவனித்தான். அவள் விதவை.

மேலும் கவனித்தான். கூட உதவிக்கு என இருந்த அவள் தாயோ, மாமியாரோ... ஊருக்குப் போயிருக்கிறாள். இப்போது அவளும் சிறு கைக்குழந்தையும்—அந்தச் சிறுகுழந்தை எத்தனை அழகாய் இருக்கிறது. அதைப் பாராட்டிப் பேசினாலே பெற்றவளுக்குத் தலை கிறு கிறுக்கிறது. நடக்கத் தெரிந்த, சுமார் இரண்டரை வயது மதிக்கத் தகுந்த சிறுகுழந்தை. அதை யாருக்குத்தான் பிடிக்காது?... பேரத்தைப் பற்றி அவள் பெரிதும் கவலைப்படவில்லை. இத்தனை பெரிய பாத்திரம்... மலிவாய் வாங்கி விட்டேன், என அவள் சந்தோஷப்பட்டாள்.

அவன் சிரித்துக் கொண்டான். அவர்கள்-தாயும் குழந்தையும் மாடியறையில் படுத்துக் கொள்கிறார்கள். நல்ல விஷயம்.

பகலுக்குத் தாடி முளைத்தால் இரவு. முற்பகலுக்குப் பின் பிற்பகல் விளையும் அது. அவன் காத்திருந்தான்.

இரவு.

நீண்ட பரபரப்பான தெரு காலியாய்க் கிடக்கிறது. தனிமையில் இதமான சிறு குளிரில் அவன் மாத்திரம் நடந்து போகிறான். அமாவாசைக்கு அருகிலே ஒரு தினம். நல்ல விஷயம். இப்படி நாட்கள் அபூர்வமாகவே அமைகின்றன.

ஒரு சைக்கிள், டைனமோ எரிய அவனை சமீபித்து சட்டென்று வேறொரு தெருவில் திரும்பக் கூடும். ஒரு விசில் சப்தத்துடன் யாராவது நடந்து போகக் கூடும். ஒரு கூர்க்கா, உறக்கத்தைப் புதையல் எனத் தேடி கம்பால் தரையைத் தட்டிச் சோதித்துக் கொண்டே செல்வான்.

ஏதாவது ஒரு மாடியறையில் விளக்கு எரியும். விளக்கு தேவையென உணர்கிற தம்பதியராய் அவர்கள் இருக்கலாம். அல்லது யாரோ மாணவன் வாழ்க்கையை நொந்தபடி மறுநாள் தேர்வுக்கு எனப் படித்துக் கொண்டிருக்கவும் கூடும். அப்படியே முன் கவிழ்ந்து அவன் தூங்கியிருக்க, விளக்கு மாத்திரம், இவனைக் கலவரப்படுத்தியபடி எரிந்து கொண்டிருக்கலாம்...

தீயசகுனங்கள்.

அன்றைக்கு இவை இல்லை. இயற்கையின் மணம் மிக்க கூந்தலைத் துழாவியபடி அவன் நடந்து போகிறான். பூமி என்கிற காகிதத்தில் காலம் கருப்பு மையால் கவிதை எழுதிக் கொண்டிருக்கிறது.



திரும்பி, நாலாவது வீடு.

விதவை. பாவம்.

கைக்குழந்தை... அந்தக் குழந்தை தனது தந்தையை இழந்ததை அறியுமோ? அட, இதை விட்டுவிட்டுச் செத்துப் போக அப்பாவுக்கு எப்படி மனம் வந்ததோ?...

தனக்குள் இரவைக் காயப்படுத்தி விடாத கவனத்துடன் அவன் நகைத்துக் கொண்டான். இரக்கம். எனது தொழிலுக்குச் சம்பந்தம் இல்லாதது. வேண்டாத நினைவுகளை மனத்திலிருந்து மழித்து விழித்து ஒழித்து அழித்துவிடு.

சுற்று முற்றும் பார்த்துக் கொண்டான். யாருமில்லை. வெளிச்சத்தின் அருவி வற்றிப் போய் எங்கும் இருளின் பாறை. மற்றும் அமைதி. மேலும் தனிமை... நற்சகுனங்கள்.

தொழிற் தேர்ச்சி மிக்கவன் அவன்.

ஒரு சிறு க்ளிக். தேர்ந்த நர்ஸ் போடும் வலிக்காத ஊசிபோல... இரவைச் சிரமப்படுத்தாதச் சிற்றொலி. பூட்டு துதிக்கையை உயர்த்தி அவனை வாழ்த்தி வாய் திறந்தது. உள்ளே நுழைகையில் வயோதிகனின் சிறு குறட்டை ஒலியாய் குளிர்பதனப் பெட்டியின் கிழ்ஸ்தாயி தனியாவர்த்தனம். இதமான வாசனை வியூகம் அவனை வரவேற்கிறது. நிமிர்ந்து பார்க்கையில் அது அவளது கணவன் படத்தின் மாலை என மனம் தெளிந்தது. ஒளி குதிக்கிறதோர் விடிவிளக்கு. அதை அணைத்துவிட எண்ணியவன் கையை இழுத்துக் கொண்டான். அணைந்து போனவனுக்கு அணையாவிளக்கு. இருந்து விட்டுப் போகட்டும்.

பணக்கார வீடு. வரவேற்பறையில்தான் எத்தனை விதவிதமான சாமான்கள். பொம்மைகள். நாகரிகமிக்க நவீன சிற்றுண்டி-விடுதி எனக் கிடந்தது வீடு. கனவுச்சாயை.

பீரோவுக்கு மேலோ தலையணைக்கடியிலோ சுவர் ஆணியொன்றிலோ இரும்பு அலமாரியின் சாவி கிடைக்கலாம். அவள் பத்திரப்படுத்தியிருக்கலாம். அதைப்பற்றி என்ன? சாவி அவனுக்குத் தேவையில்லை.

அந்த அறையின் இதயமாக கடிகாரத் துடிப்பு. மனைவி உறங்குவதைப் பார்த்தபடி உறக்கம் வராத கணவன் என கடிகாரம். ஒலிச் சிணுங்கல்கள்.

பீரோவைத் திறக்க, அடுக்கி வைக்கப்பட்டிருக்கிற குழந்தையுடைகள் அவன் மடிமீது சரசரவென்று சரிகின்றன. மணமிக்க சோப்பின் இறங்கடிக்கிற வாசனை அவற்றிலிருந்து வருகிறது. பாச்சா உருண்டை மணம் வேறு.

''எங்க வீட்டுக்காரர் ஜாதகம் எப்படியிருக்கு ஜோசியரே?''
''ராஜயோகம்தான்! ஜெயிச்சா மந்திரி, தோத்தா கவர்னர்!''
– வத்திராயிருப்பு
தெ. சுந்தரமகாலிங்கம்

கண்ணால் சிரிக்கிற வயசு. அந்தக் குழந்தையின் முகம் அவனுக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. காதுகளில் சிறு டோலாக்கு ஆடுகிற நளினம். சற்றுமுன் முளைத்தாற் போன்ற வெண் பற்களின் அணில் சிரிப்பு...

அந்தக் குழந்தை மாத்திரம் பிறக்காவிட்டால், தாய் முகத்தில் இந்தச் சிரிப்பு மிச்சம் இருந்திருக்குமா? கை பீரோவைத் துழாவுகிறது. மனம் மிதந்து வளைய வருகிறது. உள்ளேயிருந்து அந்தக் குழந்தையின் புகைப்படம் ஒன்று அவன் மடிமீது விழுகிறது...

என் செல்வமே... என்று புன்னகையுடன் அதை எடுத்து டார்ச் வெளிச்சத்தில் பார்த்தான். இது என்னிடம் இருக்கட்டும், என்று சட்டைப் பையில் வைத்துக் கொள்கிறான். பரபரப்பாகிறான்... நேரமாகி விட்டது. காலம் பொன்போன்றது!

பட்டுப் புடைவைகள், நகைகள், ஆ. இவ்வளவு பணத்தை அவன் எதிர்பார்க்கவில்லை. அவன் வைத்த குறி தப்பியதில்லை. என்றாலும் இது அதிகம். அதிதம்.

கீழே சிதறிக் கிடந்த குழந்தை உடைகளில்தான் எத்தனை வகை. இத்தனை சிறிய பெண்ணுக்குப் பட்டுப் பாவாடை... தங்கக் கொலுசு.

அவன் கொலுசை தன் பொட்டலப் பொதியிலிருந்து எடுத்து பீரோவில் திரும்ப வைக்கிறான். இந்தக் கொலுசுடன், இந்தப் பாவாடையுடன் சிறுநடை நடந்து தடுமாறி சப்பென உட்காரும் எனக் கற்பனைப் பூ விரிகிறது.

மூட்டையைச் சுருட்டிக் கட்டினான். கிளம்பும் நேரம் மனம் தயங்குகிறது. நேர் எதிரே இறந்தவனின் படம். அவனது மாறாத புன்னகை. விளக்கின் கும்மாளம். குளிக்கிற குழந்தையின் குதிக் கொண்டாட்டம்.

அவன் அந்தக் குழந்தையை இன்னொரு தரம் பார்க்க விரும்பினான். அதன் சிரிப்பை மௌன மொழியை, சிறுநடையை... எனக்கு

அந்தப் பாக்கியம் கிட்டுமா?

இனி இங்கு நான் வரப் போவதில்லை. குழந்தையை ஒருதரம் ஒரேயொரு தரம், ஒரேயொரு பார்வை... பார்த்துவிட்டுத்தான்...

வேண்டாம்; கவனம். தேவையற்ற சலனங்களில் மாட்டிக் கொள்ளாதே.

அழகான நாள். அருமையான சகுனங்கள். அப்படி எதுவும் நிகழாது.

காலம் கனவுகளுக்கு மையிட்ட வேளை. நேரமாகிறது.

நான் இனி இங்கு வரப் போவதில்லை. அந்தக் குழந்தையை – அதன் பேரென்ன?... நான் இனி பார்க்கவே முடியாதா...?

ரகசியமாய்ச் சில ஒலிகள் கேட்டன அவனுக்கு. ஆகாவென ரோமாஞ்சலியுடன் திரும்பினான். அவனால் நம்பவே- முடியவே-இல்லவே இல்லை. ஆனால் அது நடந்தது. நிஜம்.

அந்தக் குழந்தை 'இறங்கிவந்து வாசல் வழிமறைத்து நிற்கிறது. எப்போது வந்தது. எப்படி வந்தது. அதற்கு இந்த இரவு பயமாய் இல்லையா? விடிவிளக்கில் அப்பாவின் சிரிப்பு அதற்கு இதமாய் இருந்ததோ என்னமோ? பயமற்று நின்று அந்தச் சிறு வெளிச்சத்திலும் அவனைப் பார்த்தது...

ஆ. அடையாளம் கண்டு கொண்டு...

புன்னகைக்கிறது.

கையை விரித்துச் சுருக்கி வாவென அருகழைக்கிறது.

தேவதை. என்னைப் பார்க்கவென்றே எழுந்து கொண்டாயோடி என் கண்மணி... அவன் மனம் நிறைந்து கண்கள் தளும்பி



நாளமெங்கும் ஒரு பரவசம்.

சிரிப்பு. என்னைப் பார்த்து. அழைப்பு. என்னைப் பார்த்து.

ஓடித் தாவியணைத்துக் கொண்டான் குழந்தையை. தாடி அதற்குக் குத்துமோ? தாளுமா இது?

நிஜங்களே எட்டி நில்லுங்கள். இது எங்கள் உலகம். நானும் இவளுமானது. உங்களுக்கு இதில் இடமில்லை. உங்களைப் பற்றி எங்களுக்கு அக்கறையுமில்லை.

சமையல் அறையைக் கைகாட்டுகிறது குழந்தை. உனக்கு எதற்கடி மொழி.

குளிர்பதனப் பெட்டி புகையிலை ஒதுக்கிய பெரியவர் போல ஒலியை அதக்கி அவர்களைப் புன்னகையுடன் வேடிக்கை பார்க்கிறது.

அவன் பெட்டியைத் திறந்தான். சாப்பிட இதற்கு என்று பெற்றவள் என்ன வைத்திருக்கிறாள்? ஆகா, இதற்கு எவ்வளவு தெரிகிறது. அதுவே முன்னால் எட்டி, சுட்டிக் காட்டுகிறது.

பசிக்கிறதாடி குட்டி ஆகா, அப்போது தான் அந்த அதிசயம் நிகழ்ந்தது.

மெல்ல அவன் அதன் வாயில் பிஸ்கெட்டை ஊட்டினான். ரசித்து ருசித்து சப்புக் கொட்டி உண்டபடி அது...

சிறிது பிஸ்கெட்டை விண்டு அவனிடம் நீட்டியது.

அவன் உடம்பு நடுங்கியது. அவனுக்கு அழுகை வந்தது ஏனோ. வேண்டாம், என மறுக்கிறான். அது விடாப்பிடியாக ஒரு சிரிப்புடன்...

அவன் வாயில் போடுகிறது.

குழந்தையை நிறுத்தி அவன் நமஸ்கரிக்கிறான்.

மாடியில் சலனம். பெற்றவள் விழித்துக் கொள்கிறாளா? ஒலிப்புரளல். "மௌனிகா?" என்கிற அழைப்பு. குழந்தையை முத்தமிட்டு விட்டு வாசலுக்கு விறுவிறுவென்று நடக்கிறான். மனம் நிறைந்து வழிகிறது.

திருட வந்தவன் அவன். உள்ளத்தைத் திருட்டுக் கொடுத்து விட்டுப் போனான். வேடிக்கையாய் இருந்தது அவனுக்கு. சிரிப்பாய் இருந்தது.

மேலே பார்த்தான். மேகத் தலையணையில் முகம் புதைத்து சொகுசு கொண்டாடிக் கொண்டிருந்தது நிலவு. எப்போது அது என்னைப் பார்க்க வெளிவந்தது...

அலுமினியம் பித்தாளை எவர்சில்வர் பாத்ரேம்... என்று குரல் கேட்டால், பயப்பட வேண்டியதில்லை நீங்கள் இனி. ●

## ரிமோட்

எல்லா மதங்களிலும் பண்டிகைகளும் உற்சவங்களும் உண்டு. இந்து மதத்தில் மட்டும் எதுவும் கிடையாது என்பது சில அரசியல்வாதிகளின் சித்தாந்தம். கொண்டாடவும் மாட்டார்கள். வாழ்த்துச் சொல்லவும் மாட்டார்கள்.

ஆந்திர முதல்வர் அப்படியில்லை. கோவில்களுக்குப் போகவும் கன்னத்தில் போட்டுக் கொள்ளவும் வெட்கப்படுவது கிடையாது. Secular என்று ஒரு போலிப் போர்வையில் முகத்தை மூடிக் கொள்வதில்லை.

ராமநவமியன்று, பத்ராசலம் ராமர் கோவிலில் நடைபெற்ற சீதா கல்யாணத்தை மனைவி சகிதமாகத் தரிசித்துப் புண்ணியம் தேடிக் கொண்டார் அவர். தெய்வத்துக்குச் சாத்த வேண்டிய பட்டு வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் தட்டில் வைத்துத் தரையில் அமர்ந்துகொண்டு அவர் வலம் வந்த காட்சி' பரவசம் ஏற்படுத்தியது. (நேஷனல் – ஹைதராபாத்) God is conscience என்று மகாத்மா சொன்னதை நிரூபித்து வருகிறார் நாயுடுகாரு. வாழ்க நீடுழி.



# நீடூழி வாழ்க நாயுடு

வீரபாண்டியன் அளவுக்குக் கடுமையாய்க் குத்திக் கிழிக்கிறவரல்ல ரபி பெர்னாட். இருந்தாலும் எதிராளி வசமாக அகப்பட்டால் ரத்தம் வராமலே ரண சிகிச்சை செய்வதில் வல்லவர்.

ஏனோ தெரியவில்லை, கட்சி விட்டுக் கட்சித் தாவியத் தமிழ்க்குடிமகனைப் பேட்டி கண்டபோது மட்டும் ரபி தயங்கித் தயங்கி மென்மையாகவே தம் சந்தேகங்களை வெளிப்படுத்தினார். பட்டும் படாமலும் கேள்விகளை எழுப்பினார். Flogged him with a feather வினாக்கள் சௌகரியமாக வரவே தமிழ்க்குடிமகனாரும் பதில்களை ஊதித் தள்ளிவிட்டார்.

பேட்டி நடந்தது ஜெயா டீவியாகையால், பெர்னாட்டின் பார்வை கனிந்து போனதில் வியப்பில்லை. There are some who speak one moment before they think என்ற கோஷ்டியில் அவரும் சேர்ந்துவிட்டார், பாவம்.

வாசகர்களுக்கும் கல்கி ஏஜென்டுகளுக்கும் இனிய தமிழ்ப் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்!

— ஆர்

கவிழ்ப்பது, காலை வாருவது, குப்புறத் தள்ளுவது, முதுகுக்கு மண் காட்டுவது, நீட்டிய கையை இழுத்து விடுவது - யாவற்றையும் டீவியில் காண முடிந்தது. தேர்தல் strategy அப்படித்தான் இருக்கும் என்று எண்ண வேண்டாம். இவை அரசியலுமல்ல, கலந்து கொண்டவர்கள் கட்சித் தலைவர்களும் அல்ல.

லக்னோவில் நடைபெற்ற தேசிய ஜூடோ சாம்பியன்ஷிப் போட்டியல்தான் (டிடி - ஸ்போர்ட்ஸ்) மேற்படி காட்சிகள். இந்த judokas ஒருவரையொருவர் வீழ்த்தித் தள்ளியதும் இடியாப்பச் சிக்கலாக முறுக்கிக் கொண்டதும் காணக் கண் கோடி வேண்டும். எனினும், அடர்த்தியான கூந்தல் படைத்த மாணவிகள் கட்டிப் புரண்டதைப் பார்க்கையில் மகா திக்திக். போட்டி முடிவில், இருவரில் ஒருவரின் முடியில் கணிசமான ஒரு பிடி மற்றவரின் கையில் இருக்கப் போகிறது என்றே தோன்றியது. It made your hair stand on its end.

நல்ல காலம் அப்படி எதுவும் நேரவில்லை.

'ஜலதரங்கம் என்பது அ. ஆந்திராவில் ஒரு மாவட்டம்; ஆ: இந்தி புதுமுகம், இ: ஓர் இசைக்கருவி. எது சரி?' என்று இந்தத் தலைமுறையினரிடம் கேட்டால், சரியாகச் சொல்லக் கூடியவர்கள் சில பேர்தான் இருப்பார்கள். ஒரு மூதாட்டி தரையில் பல பீங்கான் கிண்ணங்களைப் பரப்பி வைத்துக் கொண்டு இரண்டு குச்சியால் தட்டி இனிய நாதம் எழுப்புவது அவர்களுக்கு வேடிக்கையான காரியமாக இருந்திருக்கும்.

சீதா துரைசாமிக்கு 75 வயதாகிறது. குரலில்தான் சிறிது நடுக்கம் தெரிகிறதே தவிர, கைகளின் விறுவிறுப்பில் இளமை நிறைந்திருக்கிறது. வெளித் தோற்றத்தில் வசதி இல்லாதவர் போல் இருந்தாலும் உள்ளுக்குள் ஒரு காந்தம் நிலவுகிறது. Creativity cures the chaos in the heart என்பதற்கு உதாரணம். கற்பகவல்லி, காற்றினிலே வரும் கீதம் முதலியவற்றை அவற்றின் முழு அழகும் வெளிப்படுகிற மாதிரி இசைத்தார். (சபாக்களில் முழு நேரக் கச்சேரிகள் ஏன் தருவதில்லை)

கிண்ணத்தில் தண்ணீர் குறைவாக இருந்தால் ஊற்றுவதும், அதிகமாக இருந்தால் எடுப்பதும் கிண்ணங்களை அருகில் இழுத்துக் கொள்வதும் தள்ளி நகர்த்துவதுமாக, ஜலதரங்கத்தில் சுருதி சேர்த்துக் கொள்வது வித்தியாசமான காட்சியாக இருந்தது, எஸ்வியில்.

'கூடி டீவி' is slowly sliding down in its popularity graph என்று சிலர் சொல்கிறார்கள். ஆனாலும் கூடச் சில கேள்வி - பதில்கள் சிரிப்பு வரவழைப்பதாகவே இருக்கின்றன. உதாரணத்துக்கு –

- சின்னக் கவுண்டர் படத்தில் தீர்ப்புச் சொன்னவுடன் விஜயகாந்த் என்ன செய்தார்.

வாயை மூடிக் கொண்டார்.

- ப்ளஸ் டூ மாணவி காதல் கடிதம் எப்படி எழுதுவாள்?

இடமிருந்து வலமாக.

# காரு

**வினோத்**

# குறையொன்று

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

பகவான் நம்மை சிக்ஷிப்பதற்காக ரோகத்தைக் கொடுக்கிறான் என்றேன். அப்படி சிக்ஷிக்கப்படுகிற காலத்திலே அவனை நினைத்து ஆராய்கிறோம். யாராவது சொல்லுவார்கள் நம்மிடம் கஷ்டம் வந்த காலத்தில்– "ஒரு நாற்பத்தெட்டு நாள் சஹஸ்ரநாமம் பாராயணம் பண்ணுங்கள்! உங்களுக்கு ஏற்பட்டிருக்கிற கஷ்டம் போய் விடும்..."

அப்போதுதான் நமக்கும் அவ்வாறு பாராயணம் பண்ணத் தோன்றுகிறது.

ஒருத்தர் இவ்வாறு நாற்பத்தெட்டு நாட்கள் பாராயணம் பண்ணிவிட்டார் என்று வைத்துக் கொள்ளுங்கள்... கஷ்டம் தீர்ந்த பிறகும் தொடர்ந்து விடாமல் பண்ண வேண்டும் என்று தோன்றும் அவருக்கு.

நாற்பத்தெட்டு நாள் பாராயணம் பண்ணி ஒன்று நடந்தால், உடனே, நினைத்தது நடந்துவிட்டது என்று பூரணமாக பகவானிடத்திலே பற்று ஏற்படுகிறது. நம்பிக்கை ஏற்பட்டுவிடுகிறது. 'நாற்பத்தெட்டு நாள் என்ன... ஜீவிக்கிற வரையில் பண்ணலாமே' என்று தோன்றுகிறது.

பகவான்தான் நம்மைத் திருத்த வேண்டும். நம்முடைய புத்தியிலே பிரவேசித்து, அவன்ன நினைக்கும்படி செய்ய வேண்டும்.

மனுஸ்ம்ருதியிலே அழகான சுலோகம் ஒன்று உண்டு. அது சொல்கிறது:

எவனை பகவான் ரக்ஷிக்க வேண்டும் என்று நினைக்கிறானோ அவனுடைய புத்தியிலே அவன் பிரவேசிப்பான்.

பசுக்களை ஓட்டி, நீராட்டி, ஆகாரம் போட்டு ரக்ஷிக்கக் கூடியவரைப் போல பகவான் செயல்படுவதில்லை. பசு மந்தையிலிருந்து வெளியிலே போனால் கையிலே ஒரு கொம்பை வைத்துக் கொண்டு 'ஹாய்! ஹாய்!' என்று ஓட்டித் திருப்பி அழைப்பார் பசுக்களை மேய்ப்பவர்.

ஆனால் பகவான், ஆடு மாடுகளை மேய்ப்பது போல் நம்மை மேய்ப்பதில்லை. பகவான் நம்முடைய புத்தியிலே பிரவேசிக்கிறான். பிரவேசித்து, 'இதைப் பண்ணு, இப்படிச் செயல்படு' என்று கற்றுத் தருகிறான். அவன் மட்டும் அதைச் செய்யவில்லையானால் நம்மால் சரியாகச் செயல்பட முடியுமா...? ஆதலால்தான் 'அவனை நினைப்பதற்கும் அவன் அருள் வேண்டும்' என்றது.

கர்ம மீமாம்ஸை, பிரும்ம மீமாம்ஸை என இரண்டு சாஸ்திரங்கள்.

கர்ம காண்டம்-பிரும்ம காண்டம் என வேதத்தில் இரு பிரிவுகள் சொல்வார்கள்.

கர்ம காண்டம் என்பது கர்மாவைச் சொல்லக் கூடியது. அந்த கர்மாவினால் ஆராதிக்கப்படக்கூடியவன் பரமாத்மா-சர்வ தர்ம சமாராஜ்யன்.

கர்மாவைத் தெரிந்து கொள்ள உதவுவது கர்ம காண்டம்-எந்தெந்த் யக்ஞங்கள் எப்படியெப்படிப் பண்ண வேண்டும்; எந்த ருதுவில் எந்த யக்ஞம் பண்ண வேண்டும் என்கிற சாஸ்திரம்; -இதெல்லாம் விளக்கப்படுகிறது.

ஒவ்வொரு ருதுவில் ஒவ்வொரு யக்ஞம் பண்ணவேண்டும். அகாலத்தில் பண்ணினால் பயனில்லை. அதனால்தான் 'மார்கழி திங்கள் மதிநிறைந்த நன்னாளால்' என்று ஆண்டாள் ஆரம்பிக்கிறபோதே காலத்தைக் கொண்டாடுகிறாள்.

'காலம் செய்வதை நல்லவர்கள்கூட செய்யமாட்டார்கள்' என்பது லௌகீக வசனம். நல்ல காலத்தில் ஆரம்பிக்கப்படுகிற காரியங்கள் நல்ல பலனைத் தரும். ஆகையினால்தான் அந்தந்த காலத்தில் அதையதைச் செய்து பூரண பலனை அனுபவிக்கும்படி சொல்கிறது கர்ம காண்டம்.

கர்ம காண்டம் சொல்கிறது– ஒருத்தர் நூறு அசுவமேத யாகங்கள் பண்ணினால் இந்திர பதவி கிடைக்கும் என்று.

இங்கே இருக்கிறவருக்கு அங்கே பதவி கிடைக்கிறது. அதற்காக சிரமப்பட்டு, சிரமப்பட்டு, சிரமப்பட்டு ஒருத்தர் அந்த யக்ஞத்தைப் பண்ணினார். பண்ணி, இந்திர பதவியிலே போய் உட்கார்ந்து விட்டார்.

உட்கார்ந்தால், அவருக்கு நன்றாகவே

தெரிகிறது- நூறு அசுவமேத யக்ஞங்கள் பண்ணிய பலன் எத்தனை நாள் இருக்கும் என்பது நன்றாகவே தெரிகிறது! அதனால், அந்த சிம்ஹாஸனத்திலே உட்கார்ந்திருக்கிறாரேயொழிய திருப்தி இல்லை. இதோ இந்தக் காலம் முடியப்போகிறதே என்கிற பயம் அவருக்கு வருகிறது!

கீதையில் பகவான் ரொம்ப அழகாகச் சொல்கிறான்- ப்ரும் மாவிலிருந்து சின்ன கிருமிகள் வரை- அனைத்துமே 'புனரபி ஜனனம் புனரபி மரணம்; புனரபி ஜனனீ! ஜடரே சயனம்' என்கிற ரீதியிலே சம்ஸார ஜலதியிலே பிறந்து மாயையில் உழன்று அவஸ்தைப்பட்டாக வேண்டும்.

சுவாமி தேசிகன் இதையே ஒரு தமிழ்ப் பாசுரத்திலே சொல்கிறார்:

*நீள வந்து இன்று விதிவகையால் நினைவு ஒன்றிய நான்...*

நீ.....ள என்று இழுத்துச் சொல்கிற போதே நீர்க்கம் தெரிகிறது பாருங்கள். அவ்வளவு 'நீ..........ள' என்றால் எத்தனையோ ஜன்மாக்கள் என்று அர்த்தம்!

ஒரு ஜன்மாவா? இரண்டு ஜன்மாவா? கணக்கற்ற ஜன்மாக்களின் கெட்ட வாசனை நம்மிடத்திலே இருக்கிறது.

சுவர்க்க பதவியிலிருப்பவர் மறுபடியும் இந்த ஜன்மாக்களையெல்லாம் அடைந்து, மறுபடியும் சுவர்க்க பதவி அடைந்து, மறுபடியும் பூலோகம் அடைந்து, மறுபடியும் சுவர்க்கம் அடைந்து, மறுபடியும் இந்திர பதவி அடைந்து, மறுபடியும் வருண பதவி அடைந்து, மறுபடியும் குபேர பதவி அடைந்து.... இப்படியெல்லாம் அடைந்து அடைந்து மீண்டும் பூமியிலே வந்து பிறக்கிறார்.

நாம் கிணற்றை வெட்டி, அதற்கு ராட்டிணம் போட்டு, தாம்புக் கயிறு போட்டு, குடத்தைக் கட்டி ஜலத்தை மொண்டுகொள்கிறோம். குடம் கீழே போய்விட்டு மேலே வருகிறது.

அதே மாதிரி, இந்தக் குடம் கதையாக நாமும் கீழே வருவதும் மறுபடியும் மேலே போவதும் நடந்து கொண்டேயிருக்கிறது.

நாரத பக்தி சூத்திரத்தில் 'பந்து அடிப்பது போல்' என்று பிறவிகளுக்கு உவமை சொல்கிறார். குழந்தைகள் பந்து அடித்தால் அது கீழும் மேலும் போகிற மாதிரி, நாம் எத்தனை தடவை போய் போய் வருகிறோம்!

யக்ஞத்தைப் பண்ணி பண்ணி, இந்த மாதிரி பதவிகளையெல்லாம் அடைந்து அடைந்து திரும்பவும் பூலோகத்திலே பிறந்து பிறந்து வெறுப்பு ஏற்பட்டுப் போகிறது. அந்த வெறுப்பு, 'இனிமேல் அதன் கிட்டே போகக் கூடாது' என்று கர்மகாண்டத்தின் பேரில் ஏற்பட்டுவிடுகிறது. அதைக் காட்டிலும் மேம்பட்டது சாசுவதமானது, நித்யமானது எதுவோ அதிலே புத்தி போகிறது. அதை ஆராய வேண்டும் என்கிற புத்தி நமக்கு ஏற்படுகிறது.

## அருள்வாக்கு

ஒரு பணக்காரனுக்குத் தன்னைவிடப் பணம் படைத்த ஒருத்தனைப் போல் தானும் இருக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது; ஆடம்பரத்துக்கும், டாம்பீகத்துக்கும் ஜாஸ்தியாகச் செலவழித்துக் கடன்படுகிறான். உலகத்தில் பணக்காரனுக்குத்தான் ஜாஸ்திக் கடன் இருக்கிறது. இது விசித்திரமாக, வேடிக்கையாகத் தோன்றினாலும் வாஸ்தவ நிலை இதுதான். - ஏழைகள் எத்தனையோ பேர் கடன் இல்லாமல் இருக்கிறார்கள்; பணக்காரர்களில் கடன் இல்லாமலிருப்பவர்கள் துர்லபமாகத் தான் இருப்பார்கள். போலி அந்தஸ்தை விட்டால் அவனுக்கு இந்தனை செலவு கடன் இருக்கவே இருக்காது. லோகத்தில் எத்தனையோ பேர் கஷ்டப்படுகிறபோது நாம் இத்தனை டாம்பீகங்கள் செய்வது நியாயமா என்று அவரவரும் கேட்டுக் கொண்டு, செலவை தர்ம நியாயமாகக் கட்டுப்படுத்திக் கொண்டால் எத்தனையோ தான தர்மம், பரோபகாரம் செய்யலாம். லோகத்தில் ஒருத்தருக்கும் சாப்பாடு இல்லை, துணி இல்லை என்கிற குறையில்லாமல்

அந்த கட்டத்திலேதான் கர்ம காண்டமெல்லாம் பிரயோஜனமில்லை என்பதைத் தெரிந்து கொண்டு, பிரும்மத்தைக் குறித்து விசாரம் பண்ண எழுகிறான் ஒருவன்.

காரணமாகிற பிரும்மத்தைக் குறித்துத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற உயர்ந்த நிலையை அடைகிறேன்.

அப்புறம்தான், இந்தப் பிரபஞ்சத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயம்-இதெல்லாம் எதனிடத்திலிருந்து வருகிறதோ... அதைக் குறித்து விசாரம் ஆரம்பிக்கிறது.

தைத்ரீய உபநிஷத்தில் வருணனானவர் ப்ருகு மஹரிஷிக்கு உபதேசம் பண்ணுகிறார்.

''எதனிடத்திலிருந்து இதெல்லாம் உண்டாயிற்றோ, எதனிடத்தில் லயப்படுகிறதோ எதனால் ரக்ஷிக்கப்படுகிறதோ, அது தான் இதற்குக் காரணம். அதை நீ தெரிந்து கொள். அதைத் தெரிந்து கொள்வது அவ்வளவு சுலபமா...? தபஸ் பண்ணித் தெரிந்து கொள்...'' என்று கற்றுத் தருகிறார்.

அதன் பிற்பாடு தபஸ் பண்ணித் தெரிந்து கொண்டது என்ன...?

விஷ்ணுவாகிற எம்பெருமானே காரண

செய்து விடலாம். இப்போது செய்கிற டாம்பீகத்தால் ஒரு நாளும் பெற முடியாத ஈசுவரானுக்கிரகத்தையும் இந்தப் பரோபகாரத்தினால் பெற்றுவிட முடியும். ஏழை தான் என்றில்லை. பணக்காரனும்கூட 'இந்த வஸ்து நமக்குத் தேவை தானா? இது இல்லாவிட்டால் பிராணன் போய் விடுமா? இது இல்லாமல் ஜீவிக்க முடியாதா? நம் அப்பாவும் தாத்தாவும் இது இல்லாமலே சௌக்கியமாக இல்லையா?' என்று அவ்வப்போது கேட்டுக் கொண்டு, செலவழிப்பதில் கணக்காயிருக்கணும். இப்படிச் செய்தால் கொடுப்பதில் கணக்கில்லாமலிருக்க முடியும். எடுக்க எடுக்க ஊற்றில் ஜலம் வருகிறமாதிரி, கொடுக்கக் கொடுக்க மகாலக்ஷ்மியின் அநுக்கிரகம் மேலும் வளரும்.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

மாகிற பரபிரும்மம்.

**விச்வம்** என்பதால் காரியத்தைக் காட்டி, **விஷ்ணு** என்பதால் காரணத்தைக் காட்டி விட்டது சஹஸ்ரநாமம். உபநிஷத் அர்த்தம் முழுவதும் இப்படி சஹஸ்ரநாம ஆரம்பத்திலேயே வந்துவிடுகிறது.

ஞானிகளுக்குள்ளே சர்வசிரேஷ்டர் பீஷ்மாச்சார்யார். அவரைப் போன்ற ஞானம் யாருக்கு வரும்...? அப்படிப்பட்ட பீஷ்மர், பகவான் வாசுதேவனுக்கு எதிரிலேயே காரியமாகிற உலகை உணர்; அதற்குக் காரணமாகிற பிரும்மம் விஷ்ணு என்று எடுத்துச் சொல்லுகிறார்.

**அவன்**தான் பெரியவன் என்பதை எதைக் கொண்டு தெரிந்து கொள்வதாம்...? நான் சொல்கிற வாக்கை வைத்தே நிர்ணயம் பண்ண வேண்டாம். நீயே தெரிந்து கொள்— ஆராய்ந்து தெளி—என்கிறது வேதம்!

**சீ**ர்காழியில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுக்குத் தாடாளன் என்று பெயர். உலகளந்த திருவடியான்—

'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்றாள் ஆண்டாள்.

அப்படி உலகளந்த சேவடியுடன் வளர்ந்து நிற்கிறான் எம்பெருமான் திரிவிக்கிரமனாக.

விஷ்ணு என்றால் வாமனன் என்றும் பொருள்— வாமன் என்றால் அழகானவன் என்று அர்த்தம். அந்த யக்ஞோபவீதமும், அந்த கமண்டலமும், தண்டமும் அந்த சின்ன குறள் உருவாய், பிரும்மசாரியாய் அவன் வருகிறான். அவன் அழகைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம்.

'நாம் காண ஒரு நாள் வரமாட்டானோ!' என்று ஏங்க வைக்கும் அழகு.

அப்படி பிரும்ம தேஜஸ் சொட்ட அவன் பலி சக்கரவர்த்தியின் அசுவமேத யக்ஞம் நடக்கிற நர்மதா நதி தீரத்திலே போய் நிற்கிறான்.

தானே நடந்து சென்று, அங்கே பலி சக்ரவர்த்தியிடம் மூன்றடி மண் யாசித்து, உலகத்தையெல்லாம் அடைந்தான். பூலோகம், மேலோகம் எல்லாவற்றையும் அளந்துவிட்டு, 'இன்னொரு அடியை எங்கே வைக்க...?' என்று அவன் கேட்க, பலி சக்கரவர்த்தி சிரஸைக் காட்டினான்! அந்த சிரஸிலே தன் திருவடியை வைத்து, அவனைக் கீழ் லோகத்துக்கு அனுப்பினான் பகவான்.

இந்த அவதாரத்தை 'உத்தமன்' என்று கொண்டாடுகிறாளே ஆண்டாள். ஏன்...?'

மீதி அவதாரங்களிலெல்லாம் சித்திரவதை! ஹிம்ஸை, கொல்வது எல்லாம் உண்டு.

வாமனாவதாரத்தில் யாரையும் கொல்லவில்லை. எல்லோரையும் உய்வித் தான்.

அந்த வித்தையைக் கண்டு ஜாம்பவான் பிரதக்ஷிணம் பண்ணி வந்து பறை அடிக்கிறார். உலகத்தை அளந்த எம்பெருமானைக் கொண்டாடுகிறார்.

ராமாவதார காலத்திலே இருந்தவர் ஜாம்பவான்— கரடி அவர்! அதே மாதிரி கிருஷ்ணாவதார காலத்திலே ஸ்யமந்தக மணிக்காக பகவானுடன் சண்டை போட்டவர்! அப்புறம் ஜாம்பவதி என்கிற அவர் பெண்ணை கிருஷ்ணனுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தார்.

வாமனாவதாரத்திலேயும் பூரணமாய் இருந்திருக்கிறார் ஜாம்பவான். வாமனாவதாரம், ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் எல்லாவற்றிலும் இருந்திருக்கிறார்.

யாரேனும் கிருஹத்தில் வயதானவர்கள் இருந்தால் ஜாம்பவானாக இருந்து கொண்டிருக்கிறார் என்று சொல்லுவதுண்டு. எத்தனையோ காலமாய் இருப்பவர்; அவருக்குத் தெரியாத விஷயமே கிடையாது என்று அர்த்தம். அப்படிப்பட்ட ஜாம்பவான் பறையடித்து வலம் வந்து கொண்டிருக்கிற அவதாரம் வாமனாவதாரம்!

(வளரும்)



# திக்...திக்... பிக்னிக்!

**கா**ங்ரீட் காடுகளில் தொலைந்து போன சென்னைவாசிகளுக்கும் காடுகளுக்குமான தொடர்பு 0.1 சதவீதத்தை விடக் குறைவு! ஆளுநர் பாத்திமா பீவியின் வசிப்பிடமான ராஜ்பவன் கானகத்தைப் பட்டேல் சாலை வழியே பயணிக்கும்போது பார்த்திருக்கலாம். தப்பித்தவறி வண்டலூரர் போனவர்கள் வனவாசனையை நுகர்ந்திருக்கலாம். இதையெல்லாம் காடு என்று யார் சொன்னது?' என்று கேட்பவர்கள், சிங்கம், புலி, கரடி, யானை என்று விலங்குகள் சுதந்திரமாய்ச் சுற்றித் திரியும் நிஜக் காடுகளுக்கு நடுவே ஒரு டெண்ட் போட்டு, அங்கேயே சமைத்து, சாப்பிட்டு, சலசலக்கும் நீரோடையில் குளித்துக் குதியாட்டம் போடும்போது, மூக்கை நீட்டியபடி முதலையொன்று உங்களை நோக்கி வர, அலறியடித்துக் கரையேறி, ''நான் தப்பிச்சுட்டேன்ன்ன்..'' என்று சந்தோஷமாய்க் கத்த.. திக் திக் திருவிழாவில் கலந்து கொள்ளலாம். இப்படியொரு வித்தியாசமான சுற்றுலாவை, கோடை என்று இல்லாமல் ஒவ்வொரு மாதமும் நடத்துகிறது வைல்டர் டிரெய்ல்ஸ்' எனும் அமைப்பு.

இக் கிளப்பை சென்னையில் நடத்தி வரும் முன்னாள் ராணுவ அதிகாரி அசோக்கும் அவரது மனைவி கல்யாணியும்தான் இந்த ஏடாகூட இயற்கை காதலர்கள்!

''ராணுவத்தில் பணியாற்றிய போது நிறைய அட்வெஞ்சர்களை அனுபவிக்கும் வாய்ப்பு கிடைத்தது. குறிப்பா காட்டில் முகாமிட்டுத் தங்குவோம். ராணுவ சர்வீஸ் முடிந்து, சென்னை கீழ்பாக்கத்திற்குக் குடியேறிட்டோம். ஒருமுறை, நண்பர்கள் எல்லோரும் சேர்ந்து பிக்னிக் போனோம். பிக்னிக்கா அது; சரியான டைட்டானிக். பெரிய பெட்ஷீட் எடுத்துட்டுப் போயி, அதுல சாப்பாடும், ப்ரூட் அயிட்டமும் பரப்பி, மூக்குப் பிடிக்கச் சாப்பிட்டு, அரட்டை அடிச்சு, திரும்பி வந்தது எனக்கு ரொம்பவும் வேதனையாக இருந்தது. இதையே கொஞ்சம் மாற்றி நடுக்காட்டிலோ, ஒரு பனிமலையிலோ, முகாம் போட்டு வாழ்ந்துவிட்டு வந்தால் எப்படி இருக்கும் என்று யோசித்துப் பார்த்ததன் விளைவுதான் வைல்டர் டிரையல்ஸ். இருவருமே களத்தில் (காட்டில்) இறங்கினோம். நாங்க எதிர்பார்க்காத அளவு ஆதரவு கிடைத்தது'' என்கிறார் அசோக்.



இப்போது காடு என்றில்லாமல் மலையேற்றம், புகழ்பெற்ற அருவிகள், ஆறுகளில் போட்டிங், பதினைந்தாயிரம் அடி உயர பனிமலை. இப்படி இடத்திற்குத் தகுந்த மாதிரி அனுபவமும்




மாறிவிட்டதாம்.

இந்த மாறுபட்ட பிக்னிக் செல்ல விரும்புபவர்களை மூன்று பிரிவுகளாகப் பிரித்து விடுகிறார்கள். "அட்வென்சர் கிளப் பிரிவில் குடும்பங்களையும், அவுட்பவுண்ட் பிரிவில் கார்ப்பரேட் நிறுவனங்களின் ஊழியர்களையும், எக்கோ டீமில் மாணவர்களையும் அழைத்துப் போகிறோம்" என்கிறார்கள்.

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் லோயர் மிடில் கிளாஸ் இந்த திக் திக் பிக்னிக்கை நினைத்தே பார்க்க முடியாது போல் இருக்கிறதே'' என்றால், "ரூபாய் நாலாயிரம் தொடங்கி குறைந்த கட்டணத்தில் பல டூர் கிட்டுகள் இருக்கின்றன. லாபம் முக்கியமல்ல. இயற்கைக்கும் மனிதனுக்குமான இடைவெளி குறைய வேண்டும் என்ற நோக்கம்தான் முக்கியம்'' என்கிறார்கள், இந்தத் தம்பதியர். இதுவரை போய் வந்த அனுபவங்களில் ஏதாவது இரண்டு என்றதும்... சாம்பிஜுக்கு அவர்கள் சொன்ன இரண்டு சம்பவங்கள் சூப்பர் த்ரில்லாக இருந்தன.

''அமராவதிக் காடு. அம்புலி வெளிச்சம். எங்கள் குழுவைத் தவிர அங்கே மனித வாசனை நஹீ. திடீரென்று உறுமல் சத்தம்.... திரும்பினால் ஒரு ஜோடி சிறுத்தைகள். எல்லோரும் ஒரே அலறல். உடனே சிவப்புக் கலர் டார்ச் அடிச்சோம். சிறுத்தைகள் ஒரே ஓட்டம். ஓடி ஒளிஞ்சுடுச்சு.

"இமயமலை... நாங்கள் போக வேண்டிய இடத்தைக் கொஞ்ச கொஞ்சமாகப் போய் அடைஞ்சுட்டோம். எங்க டெண்ட், சாப்பாடு குடிதண்ணீர் இதையெல்லாம் சுமந்து வந்த கோவேறு கழுதைகளை வேறு வழியாக ஓட்டிக் கொண்டு வந்தார்கள் அங்குள்ள ஆட்கள். ஆனால் நாங்க போய்ச் சேர்ந்தும் கழுதைகள் வரவில்லை. இருட்டிவிட்டது. குளிர், பசி... திடீரென்று ஒரு டஜன் பனிக் கரடிகள்... எங்களைப் பார்த்து வித்தியாசமாகக் கத்தித் தீர்த்தன. அவ்வளவு குளிர்லேயும் எல்லோருக்கும் வேர்த்துடுச்சு. நல்ல வேளையாக கோவேறு கழுதைகள் வந்து சேர்ந்து விட்டன'' என்று சிலிர்க்கிறார் கல்யாணி.

இவர்களது கிளப்பில் 150க்கும் அதிகமான உறுப்பினர்கள் இருக்கிறார்களாம்... ஆரம்பத்தில் 'காடா... அய்யய்யோ" என்று அலறியவர்கள், இப்போது வேதாரண்யம், ஏற்காடு, சத்தியமங்கலம் என்று பட்டியல் தருகிறார்களாம். மாதாமாதம் ஒரு விடுமுறைநாளில் நடக்கும் கிளப் கூட்டத்தில் போகும் இடத்தைத் தேர்வு செய்து விடுகிறார்கள். ஒரு டிரிப்பில் அதிக பட்சம் பதினைந்து பேர்தான் அனுமதி என்கிறார்கள். பல ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் ஆதிமனிதன் வாழ்ந்த குகைகள், அமராவதி, சின்னார், மூணாறு, கர்நாடகா காட்டுப்பகுதிகள் என்று போய் வந்திருக்கும் இவர்கள்... வரும் மே மாதம் இமயமலைக்கு இரண்டாவது டிரிப் அடிக்கப் போகிறார்களாம்!

**— சக்கரத்தாழ்வார்**

படம்: **ஜரிஸ்**

# மின்னும் மில்லேனிய பரிசுகள்

தமிழ்ப் புத்தாண்டு ஒரு புதிய புத்தாயிரம் ஆண்டின் துவக்கமாக மலர உள்ளது. புதிய சபதங்கள், புதிய சந்தோஷங்கள் இவற்றுடன் புதிய பரிசுகளையும் நம் இல்லத்தில் சேர்ப்போம். ஆம், காலத்தை வென்று நிற்கும் சீட்டுத்திட்டங்களுடன் காலத்திற்கேற்ற பரிசுகளையும் வழங்கி நம் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்க உள்ளது ஸ்ரீராம் சிட்ஸ்.

| திட்டம் | | | சீட்டு மதிப்பு | சந்தாதாரர் பரிசுகள் |
|---|---|---|---|---|
| ரூ. 250 | X | 40 மாதங்கள் | ரூ.10,000 | ஸ்ரீபெட் 5 கிலோ ஜார் |
| ரூ. 500 | X | 30 மாதங்கள் | ரூ.15,000 | ஃபினிக்ஸ் கடாய் |
| ரூ. 625 | X | 40 மாதங்கள் | ரூ.25,000 | செல்லோ சூப்பர் ஃப்ரெஷ் 3 செட் |
| ரூ. 500 | X | 60 மாதங்கள் | ரூ.30,000 | எஸ். எஸ். சி.பி. டீப் ஃப்ரை பேன் |
| ரூ. 1,000 | X | 50 மாதங்கள் | ரூ.50,000 | எஸ். எஸ். சி.பி. குக்கிங் பாட் மூடியுடன் |
| ரூ. 2,500 | X | 30 மாதங்கள் | ரூ.75,000 | காளி சாஸ் பேன் |
| ரூ. 2,500 | X | 40 மாதங்கள் | ரூ.1,00,000 | எஸ். எஸ். சி.பி. நான்ஸ்டிக் கேஸரோல் |
| ரூ. 5,000 | X | 30 மாதங்கள் | ரூ.1,50,000 | ஃபினிக்ஸ் டின்னர் செட் (20 நெ.) |
| ரூ. 5,000 | X | 40 மாதங்கள் | ரூ.2,00,000 | செல்லோ ஒட்டோ 9.5லிட்டர் |
| ரூ. 10,000 | X | 30 மாதங்கள் | ரூ.3,00,000 | திர்லெப் கிஃப்ட் செட் (தவா , கடாய்) |
| ரூ. 12,500 | X | 40 மாதங்கள் | ரூ.5,00,000 | வெள்ளி காஃபி செட் |

✱ நுழைவுக் கட்டணம் தனி. ✱ முன் அனுமதி பெறப்பட்டது.
நேரடியாக சீட்டில் சேருவோருக்கும் சந்தாதாரர் பரிசு உண்டு.

















சித்திரை
சீட்டுத்
திருவிழா
2 - 14 ஏப்ரல்
2001

ஸ்ரீராம் சிட்ஸ்: கடந்த 27 வருடங்களாக 30 லட்சம் குடும்பங்களுக்கு வளமை சேர்த்துள்ளது. 16 லட்சத்திற்கும் அதிகமானோர் நேரடியாகவும் மறைமுகமாகவும் வேலை வாய்ப்பு பெற்றுள்ளனர். சீட்டுப் பணமாக இது வரை ரூ.7,250 கோடி பட்டுவாடா செய்யப்பட்டுள்ளது.











| சீட்டு மதிப்பு | அறிமுகப்படுத்துவோர் பரிசுகள் |
|---|---|
| ரூ.10,000 | எஸ். எஸ். டம்ளர் |
| ரூ. 15,000 | ஏர்-டைட் கன்டெய்னர் |
| ரூ. 25,000 | எஸ். எஸ். டிசைன் பிளேட் |
| ரூ. 30,000 | எஸ். எஸ். டிசைன் பிளேட் |
| ரூ. 50,000 | கிச்சன் கன்டெய்னர் |
| ரூ. 75,000 | சென்னை டிஷ் மூடியுடன் |
| ரூ. 1,00,000 | பிரைம் கன்டெய்னர் 5 செட் |
| ரூ. 1,50,000 | ஸ்வாகத் 2000மி.லி. கேஸரோல் |
| ரூ. 2,00,000 | எஸ். எஸ். ரைஸ் பாட் மூடியுடன் |
| ரூ. 3,00,000 | மில்டன் ஸ்பிரிட் பிளாஸ்க் 1000மி.லி. |
| ரூ. 5,00,000 | வெள்ளி டிரே |

அறிமுகப்படுத்துவோர் பரிசுகள் தற்போதைய சந்தாதாரர்களுக்கு மட்டுமே.






இன்றைய தேவைக்கும் நாளைய வளமைக்கும்.



**ஸ்ரீராம் சிட்ஸ்**
தமிழ்நாடு லிமிடெட்

சுப்ரமணியன் பில்டிங், 1 கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002. போன்: 8461833 - 39.

**அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, எம்.ஜி.ஆர்., ஜெயலலிதா என நான்கு முதல்வர்களைத் தமிழ்த் திரை உலகம் அளித்திருக்கிறது. இந்த நான்கு பேருடனும் நடித்திருக்கிற பெருமை ஆச்சி மனோரமாவுக்கு உண்டு. இந்த நான்கு முதலமைச்சர்களுடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறார் மனோரமா.**

தேர்த்திருவிழா படத்தின் ஷூட்டிங்கிற்காக கும்பகோணத்திற்குப் போயிருந்தோம். எம்.ஜி.ஆர்.தான் கதாநாயகன். ஜெயலலிதா கதாநாயகி. படத்தில் எனக்கு ஜோடியாக நடித்தவர் நாகேஷ். கும்பகோணத்திலிருந்து, சுமார் இருபத்தைந்து கிலோ மீட்டர் தூரத்தில் காவிரி ஆற்றை ஒட்டிய ஒரு பகுதியில் ஷூட்டிங். ஆற்றைக் கடந்து போய் படப்பிடிப்பை நடத்துவதாக ஏற்பாடு. தினமும் காலை, படப்பிடிப்புக் குழுவினர் அனைவரும் கும்பகோணத்திலிருந்து புறப்பட்டுச் சென்று விடுவோம். குறிப்பிட்ட இடத்தை அடைகிறபோது, அங்கே நூற்றுக் கணக்கான கிராமத்தினர் எம்.ஜி.ஆரைப் பார்ப்பதற்காகத் திரண்டு இருப்பார்கள். ஆண்கள், பெண்கள், குழந்தைகள், இளைஞர்கள், முதியவர்கள் என்று சகல தரப்பினரும் அதில் அடக்கம்.

# நான்கு முதல்வர்களும் நானும்!

எம்.ஜி.ஆர். கார் வந்து நின்று, அவர் இறங்கியதும், கூடியிருக்கும் மக்கள் மத்தியில் பெரிய பரபரப்பு ஏற்பட்டு விடும்.

அனைவரையும் பார்த்துக் கையசைத்து விட்டு, விடை பெறுவதற்கு முன்னால், மக்களைப் பார்த்து, "ஆற்றின் அந்தக் கரையில் ஷூட்டிங். நீங்கள் எல்லாம் அங்கே வந்தால், ஷூட்டிங்கிற்கு ரொம்ப இடைஞ்சலாகிவிடும். அதனால், யாரும் அந்தப் பக்கம் வரக்கூடாது" என்று எம்.ஜி.ஆர். சொல்லுவார்.

எம்.ஜி.ஆரின் மந்திரச் சொல்லுக்கு அத்தனை ஜனங்களும் கட்டுப்பட்டு, இக்கரையிலேயே நின்று கொண்டிருப்பார்கள். வெயில் கொளுத்தும். ஒண்டுவதற்கு மரம் இருக்காது. உச்சி வெயில் நேரத்தில், ஆற்று மணல் எப்படி இருக்கும்? அத்தனையையும் பொறுத்துக் கொண்டு, மாலையில், ஷூட்டிங் முடிந்து, எம்.ஜி.ஆர். திரும்பி வருகிறபோது, அவரைப் பார்ப்பதற்காக மக்கள் காத்துக் கொண்டிருப்பார்கள்.

அங்கே மொத்தம் பத்து நாள் ஷூட்டிங் நடந்திருக்கும். ஒவ்வொரு நாளும் மக்கள், கூடிநின்று எம்.ஜி.ஆரின் வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டுக் காத்திருக்கிற அதிசயத்தை நான் கண்டேன்.

ஷூட்டிங் ஷெட்யூலின் கடைசி நாளன்று, எம்.ஜி.ஆர். திட்டமிட்டுச் செய்த ஏற்பாடு என்னை ரொம்பவே ஆச்சரியத்தில் மூழ்கடித்தது.

கும்பகோணத்திற்கும், ஷூட்டிங் நடந்த இடத்துக்கும் இடையில் உள்ள பகுதி மக்கள், 'எம்.ஜி.ஆர். ஷூட்டிங் இன்றோடு முடிவடைகிறது. அவர் ஊருக்குப் புறப்பட்டுப் போய்விட்டால், அவரைப் பார்ப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்காது' என்ற எண்ணத்தில், ஏகமாகக் கூடி விடுவார்கள். ஷூட்டிங் முடிந்து திரும்புகிறபோது, ஒவ்வொரு ஊரிலும் காரை மறித்து, அவரைப் பார்க்காமல் விடமாட்டார்கள். இதை எம்.ஜி.ஆர். நன்றாகவே புரிந்து கொண்டிருந்தார்.

அதற்காகவே ஒரு ஸ்பெஷல் ஏற்பாடு செய்து விட்டார். அன்றைய தினம்,



ஷூட்டிங் முடிந்தவுடன், ஆற்றங்கரையில் கூடியிருந்த மக்களுடன் பேசினார். ஒரு வேனின் மேற் பகுதியில் சௌகரியமாக அமர்ந்து கொள்ளுவதற்கு ஏற்பாடு செய்து விட்டார். எம்.ஜி.ஆர். வேன்மீது ஏறி அமர்ந்து கொண்டார்.



அங்கேதான் அவரது பெருந்தன்மை வெளிப்பட்டது. தன்னுடன் கூடவே, ஜெயலலிதா, நாகேஷ் மற்றும் என்னையும் வேன் மீது தன்னுடன் உட்கார வைத்துக் கொண்டார்.

சாலையின் இருபுறங்களிலும் மக்கள் திரண்டிருந்தனர். அவர்களுக்கெல்லாம், வேன்மீது அமர்ந்திருக்கும் எம்.ஜி.ஆரைப் பார்த்தவுடன் சந்தோஷம் தாங்கவில்லை. மக்களைப் பார்த்து, கைகூப்பி வணக்கம் சொல்லிக் கொண்டும், கையசைத்துக் கொண்டும் வந்து, மக்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினார். கும்பகோணம் நகரத்துக்குள் நுழைவதற்கு முன், வேன்மீது அமர்ந்தபடியே, கூடியிருந்த பெருந்திரளான மக்களிடையே பேசினார்.

கும்பகோணத்தில் நாங்கள் தங்குவதற்கு வசதியாக பெரிய ஓட்டல்கள் அப்போது இல்லை. எனவே, பிரபல தொழிலதிபர் குடும்பமான டி.எஸ்.ஆர். நிறுவனத்தினருக்குச் சொந்தமான பிரம்மாண்டமான பங்களாவில் தான் நாங்கள் எல்லாம் தங்கினோம். அனைவருக்கும் வசதியாக, தனித்தனி அறைகள். உணவு மற்ற வசதிகள் அனைத்தையும் அந்தக் குடும்பத்தினர்தான் கவனித்துக் கொண்டார்கள்.

ஷூட்டிங்கின் கடைசி தினத்தன்று, அனைவரும் அந்த பங்களாவுக்குத் திரும்பிவிட்டோம். நான் எனக்குத் தரப்பட்டிருந்த ரூமுக்குப் போனேன். அப்போது, ஷூட்டிங்கிற்கு என்கூட என் அம்மா வருவார் என்பதால், அவரும் என்னுடன் இருந்தார்.

வழி நெடுக, மக்கள் திரண்டிருந்தனர். அவர்கள் மத்தியில் எம்.ஜி.ஆருக்கு இருந்த அமோக பாபுலாரிடி, தாம் பெரிய நட்சத்திரம் என்ற எண்ணத்தில், பந்தா பண்ணாமல், மிக எளிமையாய் மக்களுடன் தொடர்பைத் தொடர்ந்து கொண்டிருக்கும் எம்.ஜி.ஆரின் மனப்பான்மை என்று தொடங்கி, அவரது முக வசீகரம் வரை பல விஷயங்கள் பற்றியும் நானும் என் அம்மாவும் ரொம்ப சிலாகித்துப் பேசிக் கொண்டிருந்தோம். கும்பகோணம் வந்தது முதல் எம்.ஜி.ஆருடன்தான் இருக்கிறோம். அன்றைய தினம் கூட, அரைமணி நேரம் முன்புவரை அவருடன் ஒரே வேனில் வந்திருக்கிறேன் என்றாலும், அவரை ஒரு தடவை பார்க்க வேண்டும் என்ற எண்ணம் என் அம்மாவின் மனத்தில் ஏற்பட்டது. 'எனக்கும் அதேபோன்ற எண்ணம்தான் இருக்கிறது' என்றேன் நான் "வா! போய்ப் பார்த்து விட்டு வரலாம்" என்றார்.

போனோம். 'மேக் அப்பைக் கலைத்துக் கொண்டிருக்கிறார். சிறிது நேரம் காத்திருங்கள்' என்றார் அவரது உதவியாளர். சிறிது நேரத்தில் எம்.ஜி.ஆரைப் பார்த்தோம். 'என்ன விஷயம்?' என்று கேட்டார். "ஒன்றுமில்லை! உங்களை இன்னும் ஒரு தடவை

மினி தொடர்!

பார்க்க வேண்டும் போல இருந்தது. அதுதான்!" என்றோம். புன்னகை புரிந்தார் எம்.ஜி.ஆர்.

நான் சற்று எட்ட நின்று எம்.ஜி.ஆரையே பார்த்துக் கொண்டு நின்றேன். என் அம்மா, அவர் அருகில் சென்று அவருடைய முகத்தை தன் இரு கைகளிலும் ஏந்திக் கொண்டு, "நீங்க ரொம்ப நல்லவரு! நீண்ட ஆயுசோட, ரொம்ப காலம் இருக்கணும்!" என்று உணர்ச்சிப் பெருக்குடன் சொன்னார்.

அந்த சமயத்தில் நான் அவரிடம் ஒன்றும் பேசவில்லை. ஆனால் அவரைச் சில நிமிடங்கள் பார்த்துக் கொண்டு நின்றிருந்ததே, என் மனத்தில் பெரும் திருப்தியை ஏற்படுத்திவிட்டது.

இப்போது நினைத்தாலும், எம்.ஜி.ஆர். தனது ரசிகர்களை கையாண்ட விதம் என்னை பிரமிக்க வைக்கும். ஷூட்டிங்கிலும் சரி, வீட்டிலும் சரி, மற்ற பொது இடங்களிலும் சரி, ரசிகர்களிடம் அன்னியோன்யமாக இருப்பார். அன்போடு பேசுவார்; அதே சமயம், ரசிகர்களை, மிகவும் நெருங்கிவிட்டால், அவர்கள் அன்புத் தொல்லை கொடுப்பார்கள். தொடுவார்கள், கிள்ளிக்கூட விடுவார்கள், கட்டிப் பிடிக்க முயற்சி செய்வார்கள், காலில் விழுந்து விடுவார்கள் என்பதால், ஒரு டிஸ்டன்ஸ் மெயின்டெயின் பண்ணவும் தவறமாட்டார். இந்த இடைவெளியை, ரசிகர்கள் ஒரு தடையாய் நினைக்காதவண்ணம் கைதேர்ந்த நயத்துடன் செய்வார்.

மறைந்த நடிகை பி. கண்ணாம்பா தயாரித்த திரைப்படம் 'தாலி பாக்கியம்.' அதன் படப்பிடிப்பு மைசூரில் நடைபெற்றது. எம்.ஜி.ஆர். உட்பட அனைவரும் தங்கியிருந்தது அங்கே இருந்த ஒரு பயணிகள் விடுதியில்தான். ஒரு நாள் மாலை படப்பிடிப்பு முடிந்து விட்டது. எல்லோரும் அவரவர் அறைக்குப் போய் விட்டார்கள். நானும் அறைக்குப் போய், மேக் அப்பைக் கலைத்துவிட்டு, உடைமாற்றிக் கொண்டு, கொஞ்சநேரம் வெளியில் காலார நடந்து கொண்டிருக்கலாம் என வெளியில் வந்தேன்.

அந்தப் பங்களாவை ஒட்டி, காவிரி ஆறு ஓடிக் கொண்டிருந்தது. அங்கே ஒரு படித்துறை இருந்தது. நான் அந்தப் பக்கமாகச் சென்ற போது, கால்களைத் தண்ணீரில் வைத்துக் கொண்டு படித்துறையில் யாரோ உட்கார்ந்து கொண்டிருப்பது தெரிந்தது. அவர் யார் என்று நான் கவனித்தபோது, 'மனோரமா! இங்க வா!' என்று அவர் குரல் கொடுக்க, அப்போதுதான் எனக்குப் புரிந்தது, அவர் எம்.ஜி.ஆர். தான் என்று!

நான் அவர் அருகில் போனேன். உட்காரும்படிச் சொல்ல நானும் படித்துறையில் உட்கார்ந்தேன். என் வாழ்க்கையில் மிக முக்கியத்துவம் வாய்ந்த இடம் இந்தப்படித்துறை என்றார். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அவரே விளக்கினார்.

(தொடரும்)

## இன்று பயணம்; நாளை பணம்!

தவணை முறையில் மிக்ஸி, கிரைண்டர், கார், வீடு வாங்கிய காலம் போய், இப்போது வெளிநாட்டுச் சுற்றுலா பயணத்தையே வாங்கும் காலம் வந்துவிட்டது. 'டிராவல் டுடே, பே டுமாரோ' திட்டத்தைப் பல சுற்றுலா கம்பெனிகள் அறிமுகப்படுத்தியிருக்கின்றன.



உதாரணத்துக்கு, 'தாமஸ் குக்'கும் சிட்டி பாங்க்கும் இணைந்து வழங்கும் சுற்றுலா திட்டத்தில் மாதம் 1480 ரூபாய் கட்டணம் செலுத்தி தாய்லாந்து, சிங்கப்பூருக்கு 9 நாள் சுற்றுலா பயணம் போய் வரலாம். மாதம் 2850 ரூபாய் கட்டி 10 நாள் ஐரோப்பா டூர் போகலாம்.

'தாமஸ் குக்'கின் சுற்றுலா பாக்கேஜ்களை ஆராய்ந்து, ஒன்றைத் தேர்ந்தெடுத்து, வருமானச் சான்று மற்றும் பாஸ்போர்ட்டைக் காண்பித்தால், ஆறே நாட்களில்' தகவல்களை வரிஜிதப்படுத்திக் கொண்டு தருகிறது சிட்டி பாங்க்.

"கணக்கு போட்டுப் பார்த்தால் 18 - 19% (டமினிஷிங் வால்யூ) வருகிறதே..." என்று கேட்டால், "எந்தச் செக்யூரிட்டியும் வாங்கிக் கொள்ளாமல், எந்த காரண்ட்டியும் கேட்காமல் தரப்படும் கடன் அல்லவா?" என்று சிரிக்கிறார் சிட்டிபாங்க்கின் வாடிக்கையாளர் பிரிவில் இருக்கும் ஜாகீர் உசேன்.

"சுற்றுலா கலாசாரம் மாறிவிட்டது.. லீவு என்றால் பாட்டி வீடுதான் என்றிருந்த காலம் போய் வெளிநாட்டு டூர்களின் மோகம் வந்து விட்டது. பெண்கள் சம்பாதிக்க ஆரம்பித்து விட்டதுதான் இதற்கு முக்கிய காரணம். அன்னிய செலாவணி விஷயத்தில் அரசாங்கம் காட்டும் தாராள மனப்பான்மையை இரண்டாவது காரணமாகச் சொல்லலாம்!" என்கிறார் தாமஸ் குக் மானேஜர் செல்வி ராவ்.



ஒரு தினப்
போட்டியில்
பத்தாயிரம் ரன்களுக்கு
மேல் குவித்து மெகா
சாதனைப்
படைத்திருக்கிறார்
சச்சின்
டென்(தவுசண்ட்)
டுல்கர்!
இந்தப் பக்கம்
அவருக்குச்
சமர்ப்பணம்.
அவர் ரன்
குவித்ததற்கு ஏற்ற
மாதிரியான அசத்தல்
ஸ்லோகனை எழுதி,
வரும்
22.4.2001க்குள்
கல்கிக்கு அனுப்புங்கள்
வாசகர்களே!
"அட இங்க பார்யா"
என்று ஆசிரியர்
குழுவினர் மூக்கில்
விரல் வைக்கச்
செய்யும் அட்டகாச
ஸ்லோகனுக்குப் பரிசு
காத்திருக்கிறது.
ஆசிரியர் தீர்ப்பே
இறுதி.
ரெடி ஸ்டார்ட்!

# “டீவி கூட கிடையாது!”

தெஹல்கா விவகாரத்துக்கு விளக்கமா? அல்லது தேர்தல் பிரசாரக் கூட்டமா? என்ற குழப்பத்துக்கிடையே பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்த திருச்சி பிஜேபியினருக்கு மத்தியில் மூன்றாம் தேதியன்று ரகசியமாய் வந்து சேர்ந்தார் அத்வானி.

● பொதுக்கூட்டம் மாலை ஐந்து மணிக்குத் துவங்குமென அறிவிப்பு. மைதானத்தில் பெருமளவில் மனிதத் தலைகள் காணாததாலோ என்னவோ 6.45க்குத்தான் துவங்கியது.

● தேசிய ஜனநாயகக் கூட்டணியின் தமிழகத் தலைமை பீடமான திமுக சார்பாக அமைச்சர்கள் ஆலடி அருணாவும், கே.என். நேருவும் ஆஜர்.

● மிகப் பெரிய திறந்தவெளி மைதானம். ஹவுஸ்ஃபுல் ஆகாத பரிதாபம். தேசிய ஜனநாயகக் கூட்டணியின் பொதுக்கூட்டம் நடைபெற்ற மைதானத்தில் பிஜேபி கொடிகள் மற்றும் மதிமுக கொடிகளைத் தவிர வேறு கட்சிகளின் கொடிகள் மருந்துக்கும்கூட தென்படவில்லை. மைதானத்தின் நடுவே பெருமளவு மதிமுக தொண்டர்கள் தங்கள் கட்சிக் கொடிகளுடன் வந்தமர்ந்திருந்தனர்.

● “தேர்தல் வந்து விட்டது. சின்னங்களைக்கூட வரிசைப் படுத்திச் சொல்லி வாக்குகள் கேட்க முடியாத எண்ணிக்கையில் நமது கூட்டணியில் கட்சிகள் இடம் பெற்றுள்ளன. அதனால் சொல்கிறேன். வருகின்ற தேர்தலில் நமது தேசிய ஜனநாயகக் கூட்டணிக் கட்சிகளின் சின்னங்களுக்கு வாக்களித்து வெற்றி பெறச் செய்யுங்கள்!” என்றார் எம்.ஜி.ஆர். அ.தி.மு.க. பொதுச் செயலாளர் திருநாவுக்கரசு. நல்ல பஞ்ச். (‘மதிமுகவுக்கும் சேத்துங்களா?’ என்று கூட்டத்திலிருந்து ஒரு குரல்.)

● ‘பகை என்றால்கூட ஏற்றுக் கொள்வோம். பழி என்று வந்துவிட்டால் இந்த உலகையே தந்தால்கூட ஏற்றுக் கொள்ள மாட்டோம்!’ என தற்போதைய ‘தனிக்குடித்தனத்’திற்கு விளக்கம் கூறிய வைகோ, “பி.ஜே.பி. போட்டியிடும் தொகுதிகளில் மட்டும் மதிமுக தொண்டர்கள் எந்தவொரு பிரதிபலனும் எதிர்பாராமல் அவர்களது வெற்றிக்குப் பாடுபடுவார்கள்” என்றார்.

● தி.மு.க சார்பாக பேசிய சட்ட அமைச்சர் ஆலடி அருணா தங்கள் பெயரை உச்சரிக்கக்கூட விரும்பாத வைகோவை “மறுமலர்ச்சித் திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுச்செயலாளர் வைகோ அவர்களே... என் இனிய நண்பர் எல். கணேசன் அவர்களே...” எனக் குறிப்பிட்டுப் பேசினார்.

● தாம் இங்கு தேர்தல் பிரசாரத்திற்காக வரவில்லை என்றும் தெஹல்கா பிரச்னையால் வெளிப்பட்டிருக்கும் போலியான ஆயுத பேர ஊழல் குறித்து நாட்டு மக்களுக்கு விளக்கிக் கூறவே இந்தப் பொதுக் கூட்டம் எனவும் தமது பேச்சில் குறிப்பிட்ட அத்வானி, “தி.மு.க கூட்டணிக்கே வாக்களியுங்கள்!” என்று பேச்சை முடித்துக்கொண்டார்.

● பெர்னாண்டஸ் பேசும்போது பெருமளவில் கூட்டம் வெளியேறி இருந்தது. தாம் குற்றமற்றவர் என்றும், இன்று வரை எளிய வாழ்க்கையே வாழ்ந்து வருவதாகவும் குறிப்பிட்ட அவர், “என் வீட்டில் டீவி. பெட்டி கூடக் கிடையாது!” என்றார்.

— திருநாவு



# அனுராதா ரமணன்

பொழுது ஒரு பக்கம் விடியும்போதே கேசவ்ராமை அவினாசிலிங்கம் வீட்டுக்கு வரச் சொல்லி ஃபோன் செய்ய, மனிதருக்குத் தலைகால் புரியவில்லை. நிச்சயதார்த்தம் பற்றிப் பேசத்தான் அழைக்கிறார் என்கிற குஷியில் அவரது குரல் வழக்கமான சுருதியைக் காட்டிலும் ஒரு கட்டை அதிகமாகவே பேசியது.

"ஆஹா பேஷா... காத்திண்டிருக்கேனே... இதை விட வேற என்ன வேலை எனக்கு? எதற்கும் என் வொய்ஃப்பையும் அழைச்சிண்டு வரட்டுமா?"

– இப்படி அவர் கேட்க, எதிர்முனையில் நறுக்குத் தெறித்தாற்போன்ற பதில்.

"அதெல்லாம் வேண்டாம். நீங்க மட்டும் வந்தால் போதும்."

கேசவ்ராம் இந்தப் பதிலில் கொஞ்சம் ஆடிப் போனார்.

இத்தனை வருடங்களில் எத்தனை மனிதர்களிடம் பழகியிருப்பார் இவர். கொஞ்சம் விட்டேற்றியாகப் பேசினாலே உள்ளே என்னவோ விஷயம் இருக்கு என்று புரிந்து கொள்ளக்கூடிய கற்பூர புத்தி ஆயிற்றே அவருக்கு. ஆதலால் அவர் காலையில் தமது வழக்கமான இரண்டாவது டோஸ் காப்பியையும், செய்தித்தாளையும் கூட மறந்து விட்டு, கைக்குக் கிடைத்த சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு காரில் ஏறிப் பறக்கிறார்.

இத்தனையையும் கேதாரி கவனிக்காமல் இல்லை. ஆனாலும் ஒன்றும் தெரியாதவர் போல அப்பாவியாய் முகத்தை வைத்துக் கொண்டு கல்பகத்திடம் விசாரிக்கிறார்.

"என்ன காலங்கார்த்தாலேயே சம்பந்தி மனுஷர் கூப்பிட்டுட்டார் போல இருக்கே... என்னதான் சொல்லுங்கோ பெரிய மனுஷா பெரிய மனுஷாதான். சுஜாவோட கல்யாணத்துக்கு உங்க பக்கத்திலே இருந்து எத்தனை லட்சம் செலவழிக்கறதா இருக்கேள்... தப்பா நினைச்சுக்காதீங்கோ... பெரிய இடமாச்சேன்னு கேட்டேன்."

கல்பகம் இதற்கு உடனடியாகப் பதில் சொல்லாமல் நீளமாய்ப் பெருமூச்சு விட்டு விட்டு பின் கூறினாள்.

"இவர்தானே. சொன்னா யாரும் நம்ப மாட்டாங்க. வாயாலேயே பந்தல் போட்டு மேளமும் கொட்டிடுவார். ஒசியிலே ஹோமம் வளர்க்கறது எப்படின்னு இவர்கிட்டே தெரிஞ்சுக்கலாம் நீங்க."

இதற்குக் கேதாரி சிரித்தார்.

"அதுவும் ஒருவிதமான கலைதானேம்மா. என்னை எடுத்துக்கோங்கோ. எவனும் கேட்கலேனாலும், நானே போய்க் கொடுத்துட்டு வருவேன். ஒரு தடவை சிங்கப்பூருக்குப் போயிட்டுத் திரும்பினப்போ – கஸ்டம்ஸ்லே என்னமோ தெரியலே என் மூஞ்சியைப் பார்த்துட்டு இதுகிட்டே என்ன இருக்கப் போகுதுன்னு என் பெட்டியைத் திறந்து பார்க்காமலேயே விட்டுட்டா. எனக்குத்தான் பயங்கரமான ரோஷம் வந்துடுச்சு. அவ்வளவு பிச்சைக்காரத்தனமாவா நான் இருக்கேன். நானே நேரே போய் கஸ்டம்ஸ் ஆபீசரு முன்னே நின்னு நெஞ்சை நிமிர்த்திட்டுக் கேட்டேன். என்னவோய், என்னைப் பார்த்தா வித் அவுட்லே வந்த மாதிரி இருக்கா... என் சூட்கேஸ்லேயும் அஞ்சு ரிஸ்ட் வாட்ச்சும், ஒரு புளூ ரிப்பன் ஸ்காட்ச் பாட்டிலும் இருக்கு. அங்கே இருந்து என்னை வழியனுப்பின சிநேகிதன் 'டேய் கஸ்டம்ஸ்லே ப்ராப்ளம் வந்தா இந்த ஸ்காட்ச்சை எடுத்துக் கொடுன்னு சொல்லி அனுப்பினான். நானும் தயாரா வந்து நீங்க கேட்டதும் பெட்டியைத் திறந்து காண்பிச்சு பாட்டிலை எடுத்துக் கொடுக்கணும்னு காத்துட்டிருக்கேன். இப்படி என்னைக் கண்டுக்காம அனுப்புறீங்களே'ன்னு கேட்டேன்மா. அவர் ஒருகணம் ஷாக் அடிச்ச மாதிரி

# இனிமேல்

நின்னுட்டார். அப்புறம் 'ஓ'ன்னு சிரிச்சார்."

அவர் சொல்லச் சொல்ல கல்பகமும் கண்ணில் நீர்மல்கச் சிரிக்கிறாள். சற்று முன் நடந்த கசப்பான நிகழ்ச்சிகளை எல்லாம் மறந்து, ஏதோ கதை கேட்கும் சிறுமியைப் போல ஆர்வத்துடன் கேட்கிறாள்.

"அப்புறம் என்னாச்சு? அந்தப் பாட்டிலை அவர் வாங்கிண்டாரா... இல்லையா?"

"அவர் வாங்கிக்கிலேனாலும் நான் விடுவேனா என்ன... அதைத் தூக்கிண்டு போனா



# ஆரம்பம் 25

வீட்டுலே என் பொண்ணுகிட்டே நானில்லே திட்டு வாங்கணும். அதனால, அவர் வேண் டாம் வேண்டாம்னு சொல்லச் சொல்ல அவர் கையிலே திணிச்சுட்டு வந்துட்டேன்."

– இப்படிச் சொன்னவர், உடனே அடுத்த விஷயத்துக்குத் தாவுகிறார்.

"என்ன காய்கறிலாம் நறுக்கி வெச்சிருப் பதைப் பார்த்தா பிஸ் பேளாபாத் பண்ணப் போறேன் போலிருக்கே.. கன்னடக்காரனோட பிஸிபேளாபாத்லே வெங்காயம், பூண்டு இதெல்லாம் இருக்காது. கடைசிலே

மிளகாய், கடலைப் பருப்பு, தனியா எல்லாம் வறுத்துப் பொடி பண்ணிப் போடற சமயத்துலே நிறைய கொப்பரைத் துருவலையும் வறுத்துப் போட்டு, நல்லெண்ணெய் தாராளமா விட்டு எலுமிச்சங்காய் அளவுக்கு வெல்லத்தையும் போடுவா பாருங்கோ... அடடா...''

கேதாரி அரைக்கண்ணைச் செருகியபடி கல்பகத்திடம் கூறிக் கொண்டிருந்த அதே நேரத்தில் –

இன்டர்வ்யூ விஷயமாக விவரம் தெரிந்து வருவதற்காக சுஜாவுடன் வெளியே கிளம்பிப் போன ப்ரீத்தி, நேராக ஒரு எஸ்.டி.டி. பூத்துக்குப் போய் அஜய்க்கு ஃபோன் செய்கிறாள். அவள் எதிரே பயமும் பதற்றமுமாய் விரல் நகத்தைக் கொறித்தபடி சுஜா.

"அஜய், அர்ச்சனாவுக்குச் சொல்லிட்டீங்களா... அங்கே மெயில் ரெடி பண்ணிட்டாங்களா? சரி, நீங்க புறப்பட்டு வாங்க..."

எதிர் முனையில் அஜய் கலவரமாய்க் கேட்டான்.

"நானா... நான் எதுக்கு இப்ப ப்ரீத்தி?"

"மாப்பிள்ளை இல்லாமல் கல்யாணம் நடந்ததா சரித்திரமே இல்லை அஜய்."

"கல்யாணமா? அதுக்குள்ளேயா?"

"எஸ்... குறைந்தபட்சம் நிச்சயதார்த்தமாவது... எதுக்கும் உங்க அப்பா அம்மாவையும் அழைச்சுட்டு வாங்களேன்."

அவள், ரிஸீவரை வைத்துவிட்டு, புன்னகையுடன் சுஜா பக்கம் திரும்ப, சுஜாவோ முகம் வெளிற நின்றிருந்தாள்.

புதிர் போல அவளது அலுவலக மெயில் பாக்ஸில் ப்ரீத்தி தொடர்பு கொண்டதும், இப்பொழுது அவள் பரபரவென இயங்கும் வேகமும், அவளை வியக்க வைக்கிறது.

'இந்த ஐந்தடி ஏழு அங்குல உயரமும், நாற்பத்தியேழு கிலோவும் கொண்ட இந்த சரீரத்துக்குள் இத்தனை மூளையா?'

அவள் வியப்பில் விழிகள் விரிய பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

ப்ரீத்தி இவளுக்கு அனுப்பியிருந்த மெயிலில் கொடுத்த தகவல் நாலே வரிகள்தான்.

'ஹாய் சுஜா... நான் அஜய்யின் பி.ஏ. நாளை அங்கு என் அப்பாவுடன் நேரிடையாக உன் வீட்டுக்கு வருகிறேன். உன் கல்யாணத்தை முடித்து வைக்க. விழிக்காதே... அஜய்க்கும் உனக்கும்தான் கல்யாணம். வீட்டில் உன்னை ஃப்ரண்ட் என்றோ, காலேஜ்மேட் என்றோ வசதிக்குத் தகுந்தாற் போல புளுகிக் கொள்.

– நட்புடன் ப்ரீத்தி'

கடிதத்தைப் பார்த்து முதலில் திகைத்தாலும், சுஜாவுக்குள் அப்பாவால் ஏற்பட்டிருந்த ரணத்திற்குக் கடித வரிகள் மருந்தாக இருந்தது என்றால் – அது நிஜம். சிநேகிதியோ, கூடப் பிறந்தவனோ இல்லாமல் – தனியாக அழுது புலம்பிக் கொண்டிருந்தவளுக்கு, இப்போது சின்னப் பற்றுதல் – பிடிப்பு கிடைத்தாற்போல...

ப்ரீத்தியைப் பார்த்ததும்... அளவிட முடியாத ஆச்சர்யம்.

'ஹப்பா... இவ்வளவு அழகா... இப்பேர்ப்பட்டவளை செக்ரட்டரியா வெச்சிகிட்டா அஜய் எனக்காக ஏங்கறார்?'

அவள் மனத்தில் ஓடுவதைப் புரிந்து கொண்டாற்போல ப்ரீத்தி, முதுகில் தட்டிக் கூறினாள்.

"என்ன பார்க்கறே... எல்லா ப்ளஸ் பாய்ண்ட்ஸும் ஒண்ணா சேர்ந்திருக்கறது கூட ஒருவிதத்தில் மைனஸ் பாய்ண்ட்தான். யு லுக் வெரி ஸ்மார்ட். முகத்துலே இன்னும் அந்தக் குறும்புத்தனம் மிச்சம் இருக்கு. நீ மாத்திரம் கொஞ்சம் என்னோடு ஒத்துழை. என் கூட வர்றாரே என் அப்பா... அவர்கிட்டே கல்யாண சத்திரம் பேசறதுலே இருந்து நாதஸ்வரம் கச்சேரி பேசறது வரை ஒப்படை... உன்னை ஃபர்ஸ்ட் நைட் ரூமுக்குள் தள்ளறது வரைக்கும், கூடவே நான்



"காக்கிச் சட்டைங்கிற மரியாதையே கொஞ்சம்கூட இல்லாமப் போச்சு!"

"ரொம்பத்தான் நொந்துக்கறீங்களே! என்ன விஷயம்?"

"போன மாசத்துக்கான மாமூல் எழவை வந்து வாங்கிட்டுப் போய்த் தொலைன்னு குண்டப்பா ஒயின்ஸ்காரன் ஃபோனில் சொல்றான்!"

– உ. ராஜாஜி

இருப்பேன்."

சுஜா முகம் சிவந்தாள். மேலுதட்டில் அரும்பிய வியர்வைத் துளிகளைக் கைக்குட்டையால் ஒற்றிக் கொண்டாள். அப்பொழுது ப்ரீத்தியின் சமர்த்தும், சாமர்த்தியமும் தெரியவில்லை. இப்பொழுது தெரிந்தபோதே தலை கிர்ர்ரடித்தது.

"என்ன பயமா இருக்கா?" – எஸ்.டி.டி. பூத்தில் இருந்து வெளியே வந்த ப்ரீத்தி, சுஜாவின் வெண்டைப் பிஞ்சு விரல்களைப் பிடித்தபடி கேட்கிறாள். அவளது மௌனமே அவளுடைய பயத்தைச் சொல்லாமல் சொன்னது.

"எனக்குப் பயமே இல்லை. எல்லாமே நான் போட்ட ரூட்டுலே கரெக்டா போயிட்டிருக்கு. அனுமந்து நல்லவர்."

"அனுமந்துவா? அவர் எங்க அப்பாவோட ஜோசியர் இல்லே?"

சுஜா குழம்பிப் போய்க் கேட்க, ப்ரீத்தி கலகலவென சிரித்தபடி சொல்கிறாள்...

"அவர் ஜோசியர்தான். ஆனா இப்போ உன் எதிர்காலத்தை மாத்தி அமைக்கக்கூடிய பிரும்மா. பொறு.. வீடு இத்தனை நேரம் அமர்க்களப்பட்டிட்டிருக்கும்."

அனுமந்துவின் ஜோசியம் எப்படியோ – ப்ரீத்தியின் ஆருடம் பொய்க்கவில்லை.

போன சுருக்கில் திரும்பி வந்த கேசவ், அவினாசிலிங்கத்தை வாய்க்கு வந்தபடி திட்டுகிறார். எண்ணெயில் பொரியும் மிளகாய் பஜ்ஜி போல சுருசுருவென பொரிகிறார்.

"ஒரு ஜோசியர் சொல்றதை வெச்சுட்டு கல்யாணத்தை நிறுத்துங்கறான். அவனோட அரசியல் புத்தியைக் காண்பிச்சிட்டான். இவ மருமகளா வந்தா – வர்ற எலெக்‌ஷன்லே மாமனார் போட்ட டெபாசிட் பணத்தைக் கூட எடுக்க முடியாம, தலையிலே துண்டைப் போட்டிடுவானாம்... எந்தக் காலத்துலே இருக்கான் இவன்."

"அதானே... நாம வேணா வேற ஜோசியரைப் பிடிக்கலாமே. எப்பவுமே செகண்ட் ஒபீனியன் எல்லா விஷயத்துக்கும் தேவை. எனக்குத் தெரிஞ்சு, பனசங்கரியிலே ஓ.சி. ராவ்ன்னு ஒருத்தர் இருக்கார்..."

கேதாரி ஒரு பக்கம் பொரிந்த மிளகாய் பஜ்ஜியைத் திருப்பிப் போடுவதைப் போல சொல்ல – கேசவ் இன்னமும் சிண்டைப் பிய்த்துக் கொண்டு சத்தம் போட, அந்தச் சமயம் பார்த்து ப்ரீத்தி சுஜாவுடன் திரும்புகிறாள்.

(தொடரும்)

## பணப் பேயின் பிடியில்...

"பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரிபூரணானந்தமே" என்று வள்ளலார் பாடினார். நான் சீஃப் விஜிலன்ஸ் கமிஷனராக இருப்பதாலோ என்னவோ, பார்க்கும் இடம் எங்கும் லஞ்சம் நிறைந்திருப்பதாக எனக்குத் தெரிகிறது! தெஹல்கா டேப், தேசப் பாதுகாப்பு விஷயத்தில் கூட ஊழல் எந்த அளவுக்கு ஊடுருவி இருக்கிறது என்று சுட்டிக் காட்டுகிறது. ஊழல், தேச விரோதமானது. ஏழைகளுக்கு எதிரானது. பொருளாதார முன்னேற்றத்துக்குத் தடை போடுவது."



பாரதிய வித்யா பவன் வெளியிட்ட RESCUE DEMOCRACY FROM MONEY POWER என்ற ராஜாஜியின் நூலை அறிமுகப்படுத்தி விட்டல் இப்படிப் பேசி அரங்கத்தைக் கலகலக்க வைத்தார்.

"ராஜாஜி இந்தப் புத்தகத்தில் எழுதியிருப்பது இன்றைக்கும் மிகப் பொருத்தமாக இருக்கிறது. அதிகாரத்தில் இருக்கும் அரசுக்கு, கட்சிப் பணம் திரட்ட சௌகரியமான அதிகார அமைப்பு இருக்கிறது. மற்ற கட்சிகளும் எப்படியோ பணத்தைச் சேர்த்துக் கொண்டு விடுகின்றன. ஆனால் பணவசதி ஏதுமில்லாதவன், தனது திறமையையும் சேவையையும் சமுதாயத்துக்கு அளிக்க முடியாமல் தேர்தலில் ஒதுக்கிவைக்கப்படுகிறான் என்பதுதான் கொடுமை. இந்த அமைப்பை மாற்ற வேண்டும் என்கிறார் ராஜாஜி. தேர்தல் செலவுகள்தான் நியாயமான ஜனநாயகத்துக்குக் குறுக்கே நிற்கின்றன. கட்சிப் பணம் என்ற வலையிலிருந்து விடுபட வேண்டுமானால், நம் தேர்தல் செலவுகளைக் குறைத்தாக வேண்டும். விகிதாசாரப் பிரதிநிதித்துவம் தரும் தேர்தல் முறையையும் ராஜாஜி சிபாரிசு செய்திருக்கிறார்.

"வரண்டு கிடக்கும் அரசியல் மண்ணில், பசுமை தழைத்துச் செழிக்க வேண்டுமானால், தனிமனித நேர்மை என்னும் பருவமழை அவ்வப்போது பொழிய வேண்டும்."

– விட்டல் பேசி முடித்ததும், ஆரம்பத்தில் அவர் பேச எழுந்தபோது கிடைத்த கைதட்டல்களைவிட, மிக அதிகமாகக் கேட்டது!

– சித்தார்த்



**மேஷம்:** எடுத்த எடுப்பிலேயே மங்களமான பலன்களோடதான் ஆரம்பமாகுது புத்தாண்டு. இது வரை உங்க வாழ்க்கையிலே இருந்த மினி குடைச்சல், மெகா குடைச்சல் எல்லாம் பி.சி. சர்க்கார் மாஜிக் பண்றது போல நிமிஷமா மறையப் போகுது. காசு விஷயத்துக்கு என்னங்க. நல்ல கலகலப்பு தான்! மனை, நிலம், வாகனம்னு எல்லாமே ஆதாயம் கொண்டு வரும். பீக் அவரு பஸ்சுலே படிக்கட்டுலே தொங்கற ஆர்ட்ஸ் காலேஜ் பசங்களாட்டம், இதுநாள் வரைக்கும் தொங்கிக்கிட்டிருந்த கோர்ட்டு, கேஸ் எல்லாமே சுலபமா முடியும். நீங்க சினிமா, இசை, சிற்பம்னு கலை ஆர்வக்காரரா...? அப்படின்னா உங்களுக்கு முதல் மூணு மாசம் யோகம்தான். நீண்ட காலமா குழந்தை இல்லாதவங்களுக்கு குவாகுவா ராசி இருக்குதுங்க. ஆண்டு இறுதியில் சிக்கல் இருந்தாலும். புதிய முயற்சிகள்ல காலை வைக்கிறது கூடவே கூடாது. துள்ளிக் குதிச்ச தாமரைக்கனிக்கு, அவரோட மகனை வைச்சே ஜெயலலிதா மேடம் 'செக்' வெச்ச மாதிரி, உங்க பரபரப்பே உங்களுக்கு எதிரி ஆயிடும். ஜாக்கிரதை. உங்களோட நட்பைத் தப்பா பயன்படுத்தி உங்கப் பெயருக்குக் களங்கம் ஏற்படுத்த முயற்சிப்பாங்க. உஷாரா இருந்துக்கங்க. அரசாங்க அதிகாரிகளுக்கு டேஞ்சர் லைட்டு தெரியுது. மேலதிகாரி களால அதிருப்தி, திடீர் சோதனை, வேலை மாற்றம்னு கலாய்க்கப் போகுது. ஆனா ஜனன கால ஜாதகப்பலன் யோகமா இருந்தா கவலைப்படத் தேவையில்ல. தலைக்கு வந்தது ஹெல்மெட்டோட போயிடும். வருஷ பாதியில், திருமணமாகாதவர்களுக்குக் கெட்டிமேளம் கேட்கும் காலம் வரும். குழந்தையில்லாதவர்கள் புது தொட்டில் கட்டுவார்கள். வீடு, வாகனம்னு வசதி கூடும்.

# நடக்குமென்பார்

சிலம்பெடுத்து ஆடப் போகுது. உஷாராய் இருந்துக்குங்க.

பரிகாரம்: விநாயகருக்கு அருகம்புல் மாலை சாத்தி, நெய் தீபம் ஏற்றி தோப்புக் கரணம் போட்டுக்கிட்டே வந்தீங்கன்னா, வெள்ளித்தட்டுல வெச்ச ஆவின் வெண்ணைய்க் கட்டி மாதிரி வாழ்க்கை ஸ்மூத்தா போயிக்கிட்டே இருக்கும்.

ஏப்ரல் – ஜூலை = முயற்சிகள் கூடி வரும்.

ஜூலை – செப்டம்பர் = எச்சரிக்கை தேவை.

செப்டம்பர் - டிசம்பர் = நல்ல தகவல்கள்

டிசம்பர் - ஏப்ரல் = சுபகாரியங்கள்.



**ரிஷபம்:** கண்ணாடிப் பாத்திரத் தைக் கையாளறதுமாதிரி, ரிஷப ராசிக்காரங்க ரொம்ப விழிப்புடன் இருக்க வேண்டும்.

பரிகாரம்: குல தெய்வ வழிபாடு தொடர்ந்து செஞ்சு வந்தாலே, பாதி பாரம் குறைஞ்சு போயிடும். ஏழு குண்டல வாடா, கோவிந்தாவை தரிசனம் பண்ணிக் கிறது அவசியம். அவர் கண் திறந்து பார்த்தாலே போதும். சங்கடங்கள் எல்லாம் தவிடு பொடியாயிடும்.

ஏப்ரல் - ஜூன் – எச்சரிக்கை அவசியம்.

ஜூலை - நவம்பர் - திட்டங்கள் திருப்தி தரும்.

நவம்பர் – ஜனவரி – சுபகாரியங்கள்.

ஜனவரி - மார்ச் – உடல் ஆரோக்கியம்.



**மிதுனம்:** தௌஸன்ட் வாலா சர வெடி கொளுத்தின மாதிரி, வருஷ ஆரம்பம் நல்ல பிரகாசமா இருக்கப் போகுது... குடும்பத்துல குதூகலம், விருந்து, கேளிக்கை, சுப காரியம்னு சந்தோஷம் பொங்கும். கலைத் துறைக்காரங்க வெளுத்துக் கட்டுவாங்க. நேற்று குறை கூறிக் கொண்ட கட்சிகள் எல்லாம் இன்

விஷு ஆண்டு பலன்கள்

அக்னிசர்மா

னிக்கு ஒரே அணியில கரம் சேர்த்துக்கிட்டு, கவர்ச்சி கோஷம் போடறது போல உங்களுக்கு எதிரா இருந்த கிரகங்கள் எல்லாம் இந்த வருஷம் சாதகமா கோஷ்டி கானம் பாடுது. அதனால பெயர், புகழ், பணம்னு ஆதாயம் கூடிக்கிட்டே போகும். இந்த ராசி பெண்களுக்கு ஏற்றம் உண்டாகும். சில அரிசயல்வாதிகள் டெபாஸிட் கிடைச்ச திருப்தியிலே தெம்பா இருப்பாங்க. கல்வி, கணிதம், எழுத்துத் துறையில இருக்கிறவங்களுக்குக், கிரீடம் வெச்ச மாதிரி புதுப் பொலிவு உண்டாகும். 'அம்மா வீடு எங்கே? இன்னும் கொஞ்சம் தூரம்னு' புது முயற்சிகள் தள்ளிப் போகும். நவம்பர் மாசத்துக்குப் பிறகு சீரான பலன்கள் நடக்கும். யார் கிட்டேயும் 'கடுகடு'ன்னு பேசாதீங்க. சர்க்கரையும் தேனுமாய்க் குழைஞ்சு பேசினா காரியம் சக்சஸ்! ஜனவரிக்கு மேலே பொருளாதாரப் பிரச்னை சுலபமா தீர்ந்து

# நடக்கும்!

போகும். கவலையே படாதீங்க.

**பரிகாரம்:** 'சிவ தரிசனம் சர்வ பாப விமோசனம்னு சொல்லுங்க. அது நிஜந்தாங்க... நீங்க இப்பவே புறப்பட்டுப் போயி, பாடல் பெற்ற சிவஸ்தலங்களுக்குப் போய், பிரதோஷ காலத்தில் அபிஷேகம் செஞ்சுக்கிட்டே வாங்க... குடும்பமே நல்ல நிலைமைக்கு வந்துடும்.

ஏப்ரல் - ஜூலை: நல்ல திருப்பங்கள்

ஜூலை – அக்டோபர்: பணவரவு

அக்டோபர் – பிப்ரவரி : முக்கியத்துவம் கிடைக்கும்.

பிப்ரவரி – ஏப்ரல்: உடல் நலக்குறைவு.



**கடகம்:** தண்ணீர் லாரியின் வரவுக்காக காத்திருக்கும் காலிக் குடங்கள் போல, இத்தனை நாளும் நல்லதொரு கிரக சஞ்சாரத்திற்காக நீங்கள் பொறுமையுடன் காத்திருந்தது வீண் போகலை. எதிர்ப்புகளும் எதிரிகளும் மின்விண்நிலையம் போல சுக்குநூறாய்ச் சிதறிப் போயிடுவாங்க.... பொருளாதார நிலை ஆஹா ஓஹோன்னு ஒரு தூக்குத் தூக்கிவிடும். பெண்களைப் பற்றி கேட்கவே

மேஷ ராசிக்காரரான

சுதா ரகுநாதனுக்கு இந்த விஷு

வருஷம் மங்களமான

பலன்களைத்

தரப்போகுதாம்!



வேணாம். ஆடம்பரப் பொருட்கள், ஆடை அணிகலன்னு அமர்க்களம் பண்ணுவாங்க. சொத்து விஷயங்களில் திருப்பம் ஏற்படும். விவசாயிகள் முன்னேற்றம் காண்பார்கள். கணவன் - மனைவி இடையே இலேசான சலசலப்பு உண்டாகும். பெரியோர்களின் ஆலோசனைப்படி நடந்தால், குடும்பத்தில் உற்சாகம் கூடும்.

புதிய தொழில்களில் முதலீடு செய்யக் கூடாது. வயிறு சம்பந்தப்பட்ட உடல் உபாதைகள் ஏற்பட்டு டென்ஷன் உண்டாக்கும். அறுவை சிகிச்சைக்கூட நேரலாம். உஷார்!

**பரிகாரம்:** வியாழன் தோறும் குரு ப்ரீத்தி செய்ய வேண்டும். தட்சிணாமூர்த்திக்கு நெய்விளக்கு ஏற்றி, கொண்டைக் கடலை மாலை சாற்றி வழிபடவும். இன்னல்கள் யாவும் வந்த வேகத்திலேயே காணாமல் போய்விடும். பெண்கள், துர்க்கைக்கு 27 நெய்தீபம் ஏற்றி வைத்து வழிபடவும். சகல தோஷங்களும் நீங்கும்.

ஏப்ரல் - ஜூலை – விழிப்பு அவசியம்

ஜூலை – டிசம்பர் – நிலம், வீடு, வாகனம் நலமாகும்.

டிசம்பர் - பிப்ரவரி - உடன்பிறந்தவர்கள் தொல்லை

பிப்ரவரி – ஏப்ரல் – விரதம் பலிக்கும்.



**சிம்மம்:** உங்களோட ஆப்த நண்பர் ராசிநாதனுக்கு முதலில் சலாம் வையுங்க. அவர் மேஷத்தில் உச்ச ஆரோகியாக இருப்பதால்தான் உங்களுக்கு இத்தனை மதிப்பும் கௌரவமும் கிடைச்சிருக்கு. அதேசமயம் உத்தியோகஸ்தர், அலுவலகப் பணியாளர்களுக்குச் சிறு சிறு பிரச்னைகள், தடைகள்னு ஏதாவது ஸ்பீடு பிரேக்கர் போட்டுக்கிட்டு இருக்கும். பொருளாதாரம், பண விஷயம் எல்லாம் 53 கிரேட்

சிமெண்ட் போட்டு கட்டின வீடு மாதிரி ஸ்ட்ராங்கா இருக்கும். கவலையே படாதீங்க. குருவோட சஞ்சாரம் முதல் இரண்டு மாசம் அத்தனை அனுகூலமா இல்லாததால, எதிலும் கொஞ்சம் உஷாராவே இருக்கிறது நல்லது. வருஷ இறுதியிலே, வாதம், மூட்டு வலின்னு வாயு சம்பந்தப்பட்ட வியாதி ஏற்படும். அதனால உடல் ஆரோக்கியத்துல விளையாட்டா இருந்துடாதீங்க... கூட்டுத் தொழில் நல்ல லாபம் தரும். எதிர்ப்புகளும் உடன்பிறவாத் தோழி போல கூடவே ஒட்டிக்கிட்டு வரும். குரு பார்வை இருப்பதால் ஹெவி வெயிட் சாம்பியன் மல்லேஸ்வரி மாதிரி சுலபமா சமாளிச்சுடுவீங்க.

**பரிகாரம்:** குருவுக்குப் பிரியமான விஷயங்களைச் செய்துக்கிட்டே வாங்க. ஸ்ரீராகவேந்திரர் கோயிலுக்குப் போய், துளசிமாலை சாத்தவும். ஸ்ரீ தட்சிணாமூர்த்தி ஸ்லோகம், பாராயணம் நன்மை தரும். திருச்செந்தூர் முருகனுக்கு வேண்டிக்கங்க. குருவருள் நிச்சயம் திருவருள் தரும்.

ஏப்ரல் – ஜூலை – செலவு

ஜூலை – நவம்பர் - குழப்பமான சூழ்நிலை

நவம்பர் – பிப்ரவரி – பொருள்வரவு

பிப்ரவரி – ஏப்ரல் - முன்னேற்றம்.



**கன்னி:** முதல் இரண்டு மாசம் ஏனோதானோன்னு இழுத்தடிக்கும்தான். ஆனா அதுக்குப் பின்னாடி வர்ற பத்து மாசமும் அல்போன்ஸா மாம்பழத் துண்டு மாதிரி இனிக்கும். அரசாங்க விவகாரம் இலேசல முடியாது. சட்டையில ஒட்டிக்கிட்ட பபிள்காம் மாதிரி இழுத்தடிக்கும். அரசியல்வாதிகளுக்குச் சோதனை காலம். குஜராத் பூகம்பம், தெஹல்கா புயல்னு ஒவ்வொண்ணா சமாளிச்சுக்கிட்டிருக்கிற வாஜ்பாய் மாதிரி சிரம திசை என்பதால், ஜூன் மாதம் எல்லா பிரச்னைக்கும் பெரிசா ஒரு முற்றுப்புள்ளி வெச்சுடுவீங்க. வருஷ இறுதியில பூமி லாபம் கிடைக்கும். திடீர் அதிர்ஷ்டம் வரும். வெளிநாடு போகும் வாய்ப்பு கிடைக்கும். வியாபாரிகள், விவசாயிகள் முன்னேற்றம் பார்ப்பாங்க.

**பரிகாரம்:** பிள்ளையார் தும்பிக்கை, நம்பிக்கை தரும். ஸ்ரீ மகா கணபதி ஹோமம் பலன் தரும். 'விநாயகர் அகவல்' பாராயணம் செய்யவும். வினைகள் அகலும். ஸ்ரீதுர்க்கை வழிபாடு, நன்மைகள் பல தரும்.

ஏப்ரல் – ஜூன் மாமூல் பலன்கள்

ஜூன் – செப்டம்பர் – அனுகூலமான போக்கு

செப்டெம்பர் - ஜனவரி – சுபகாரியம்

ஜனவரி – ஏப்ரல் – வெற்றி.



**துலாம் :** 'சவால்! போட்டி! கோதா!' என்ற ரீதியிலேயே இந்த ஆண்டு பலன்கள் அமைந்திருப்பதைப் பார்த்தால், நீங்கள் கடுமையா உழைச்சு முன்னேற வேண்டியிருக்கும். 'கட்அவுட், அலங்கார வளைவுகள்' எதுவும் வைக்கக் கூடாதுன்னு தேர்தல் கமிஷனர் கண்டிப்பா சொன்னாலும், கண்டுக்காம காத்துல விடற அரசியல்வாதிகள் மாதிரி நீங்களும் அலட்சியமா இருந்துடாதீங்க.

யார்கிட்டேயும் வெளிப்படையா பேசாதீங்க. கூடியவரை எந்த விஷயத்திலும் நிதானமா இருக்கிறது நல்லது. குடும்பத்துல கூட

> **மிதுன ராசிக்காரரான**
>
> **சீர்காழி சிவசிதம்பரத்துக்கு**
>
> **பெயர், புகழ், பணம்னு**
>
> **ஆதாயம் கூடிட்டே போகப்**
>
> **போகுதாம்!**

சலசலப்பு ஏற்படறதுக்கு வாய்ப்பிருக்கு. சுபகாரியங்கள் நடக்கிறதுல கூட ஏகப்பட்ட குளறுபடி. குறுக்கீடு ஏற்படும்.

ஜூலை மாசத்துக்கு மேலதான் கோடை மழை மாதிரி உங்க வாழ்க்கையிலும் ஜில்லுன்னு ஏதாவது வீசும்.

பெண்களுக்கு வருடத்தின் பின்பகுதி உற்சாகம் தரும். கணவன் – மனைவி இடையே இருந்த மனக்கசப்பு நீங்கி சந்தோஷம் காண்பார்கள்.

**பரிகாரம் :** நவக்கிரகத்திற்கு ப்ரீதி செய்து வரவும். சனி பகவானுக்கு அர்ச்சனை செய்து வழிபட நலம் தரும். தென்னாட்டில் உள்ள நவக்கிரக ஸ்தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்தால், கோடி புண்ணியம் கிடைக்கும்.

ஏப்ரல் – ஜூன் – திருப்திகரமான சூழ்நிலை.

ஜூன் - ஆகஸ்ட் - மனக்கசப்பு

ஆகஸ்ட் - ஜனவரி - ஸ்பெகுலேஷன் லாபம் தரும்

ஜனவரி - ஏப்ரல் - மகிழ்ச்சி



**விருச்சிகம்** : டொனேஷன், எம்.எல்.ஏ.சிபாரிசு எதுவும் இல்லாமல் நர்சரிப் பள்ளியில் எல்.கே.ஜி. அட்மிஷன் கிடைச்ச குழந்தையின் பெற்றோர் போல, உங்கள் வாழ்க்கையிலும் மகிழ்ச்சி கரைபுரண்டோடப் போகுது. எதிர்பாராத பண வரவு நிச்சயமா வரும். 'குரோர்பதி' 'ஹாட் சீட்ல' உட்கார்ற வாய்ப்பு கூட கிடைக்கலாம். ட்ரை பண்ணுங்க.

ஜூன் மாசத்துக்கு மேலே உடம்பு கார்ப்பரேஷன் குழாய் மாதிரி மக்கர் பண்ணும். குறிப்பா கண் சம்பந்தப்பட்ட உபாதை ஏற்படும். குடும்பத்திலும் சில மாற்றங்கள் வெளிப்படையா தெரியும். சிலர் பிரிந்து போவாங்க. பிரிஞ்சு போன அரசியல் பிரமுகர், மறுபடி பழைய துண்டையே போட்டுக்கிட்டு தாய் வீட்டுக்கே திரும்பற மாதிரி, உங்க உறவுக்காரங்களும் திரும்பி வந்துடுவாங்க. கவலைப்படாதீங்க.

உத்தியோகஸ்தர்களுக்கு ஊதிய உயர்வு கிடைக்கும். பணப் பிரச்னை கையைக் கடிக்கும். கூட்டுத் தொழில் சரிபட்டு வராது. பெண்கள் நினைத்ததை முடிப்பார்கள்.

**பரிகாரம்** : குலதெய்வப் பிரார்த்தனை செய்து வந்தாலே போதும். சகல நன்மைகளும் உண்டாகும். ஸ்ரீ துர்க்கைக்கு ராகு கால பூஜை செய்து, நெய் தீபம் ஏற்றி பய பக்தியுடன் வழிபடுவது தோஷம் நீக்கும். கிராம தேவதைக்கு மஞ்சள் அபிஷேகம் செய்தாலும் மங்களம் உண்டாகும்.

ஏப்ரல் - ஜூலை - வளர்ச்சி

ஜூலை - செப்டெம்பர் - உணவுக் கட்டுப்பாடு அவசியம்

செப்டெம்பர் - பிப்ரவரி - எச்சரிக்கை

பிப்ரவரி - ஏப்ரல் - ஆதாயம்.



**தனுசு** : பவர்கட் சமயத்தில், ஜன்னல் வழியே தென்றல் வீசி, புழுக்கத்தைத் தணிக்குமே அது மாதிரி, உங்க மனசுல இருந்த புழுக்கம் இந்தப் புத்தாண்டுல மறையப் போகுது. பொருளாதார நிலை ஏற்றமும் இறக்கமுமாய்த்தான் இருக்கும். அதுக்காக முகத்தை 'உம்'னு வைச்சுக்காதீங்க.

முதல் மூணு மாசம், எதிலும் நிதானமா இருக்கணும். கணவன் மனைவிக்குள்ளே உறவு விரிசல் ஏற்படும். அல்லது கணவன் ஆரோக்கியம் கெடும். எச்சரிக்கை தேவை.

'ஆத்துல போட்டாலும் அளந்து போடு'ன்னு ஒரு பழமொழி இருக்குது தெரியுமா? அது உங்களுக்குத்தான். அகலக் கால் வைச்சீங்கன்னா அவ்வோதான்! கதையே இல்லாம, மெகா பட்ஜெட் ஜிகினா படம் எடுக்குற தயாரிப்பாளர் மாதிரி, துண்டைத் தலையில போட்டுக்க வேண்டியதுதான்.

மாத இறுதியில் புதிய முயற்சிகள் நடைபெறும். கடன் பாரம் குறையும். வியாபாரிகளுக்குப் போட்டிகள் மறையும். பெண்களுக்கு நல்ல பேர் கிடைக்கும். குழந்தைங்க வழியில சந்தோஷம் உண்டாகும்.

**பரிகாரம்** : ராகு - கேது வழிபாடு செய்து வர அமைதி கிடைக்கும். ஸ்ரீ துர்க்கைக்கு அர்ச்சனை அபிஷேகம் செய்யவும். ஸ்ரீ கனகதாரா தோத்திரம் சொன்னால் வறுமை நீங்கும்.

ஏப்ரல் - ஜூலை - கையிருப்பு காணாமல் போகும்.

ஜூலை - அக்டோபர் - சஞ்சலம்

அக்டோபர் - ஜனவரி - திருப்தி

ஜனவரி - ஏப்ரல் - சுபிட்சம்



**மகரம்** : கையைக் குடுங்க சார். இந்த வாரம் முதல் அஞ்சு மாசம், ஜெயண்ட்வீல்ல சுத்தின மாதிரி உற்சாகம் தலைக்கேறப் போகுது. வைகாசி - ஆனி மாசத்துல சனி பகவான் கொஞ்சம் ஓவர்-டைம் செஞ்சு காய்ச்சப் போறதனால, குழப்பமான பலன்கள் நடக்கும். வீண் செலவு, அபவாதம், கசப்பான அனுபவம்னு பிட்டர்லைஃப்தான் சார். அதனால மண்டை காஞ்சிடாதீங்க. பேச்சுல இனிமையைத் தாராளமா சேர்த்துக்குங்க. ஆளுக்கு ஏத்த மாதிரி பதமா நடந்துக்குங்க. பிரச்னை அதிகமிருக்காது.

வியாபாரிகளுக்கு, முக்கியமாக பட்டு ஜவுளிக்காரங்களுக்குச் சிரமதசைதான்.

பயணத்தில் கைப்பொருள் இழப்பு நேரும். ஜாக்கிரதை. தெய்வ வழிபாடு தியானம் செய்யவும். மன அமைதி உண்டாகும்.

சட்டம், இராணுவம், காவல் போன்ற துறைகளில் வெற்றிக் கொடி கட்டுவீங்க. அரசியல்வாதிங்களுக்கு நல்ல நேரம் - பெண்கள் நினைச்சது நடக்கும்.

**பரிகாரம் :** ஸ்ரீ தட்சிணாமூர்த்திக்கு மஞ்சள் ஆடை அணிவித்து, அர்ச்சனை அபிஷேக வழிபாடு செய்வதன் மூலம் நன்மை பெறலாம். குருவருள் காக்கும்.

ஏப்ரல் - ஜூன் - கடும் உழைப்பு

ஜூன் - செப்டெம்பர் - ஆதாயம்

செப்டெம்பர் - ஜனவரி - சாதகமான பலன்

ஜனவரி - ஏப்ரல் - வாகன விபத்து உஷார்!



**கும்பம் :** சித்திரைப் பொறந்தா நித்திரைப் போச்சு'ன்னு சொல்வாங்க. ஆனா உங்க விஷயத்துல ஜஸ்ட் உல்டா! உங்கள் வாழ்க்கையில் இது வரை இருந்து வந்த ஏழரைசனி, ஜென்ம சனி, அஷ்டமத்து சனி போன்ற விதவிதமான சனி பகவான் தொல்லைகள் மறைந்து புதிய திருப்பங்களையும் மனமகிழ்ச்சியையும் தருவார். குழந்தைங்க விஷயத்துல குதூகலம் நிரம்பி வழியும். வீட்டுல எப்பவும் விருந்து, சாப்பாடும், மங்கள இசையும்தான். உத்தியோகஸ்தர்களுக்கு விரும்பிய இடங்களுக்கு மாற்றம் கிடைக்கும். பொருளாதாரப் பிரச்னை போயே போச்சு!

---

**"நடிகை நளினாஸ்ரீக்கு ஞாபகசக்தி அதிகம் சார்."**

**"எப்படிச் சொல்றீங்க?"**

**"போன தடவைதான் நீங்க வராமல் இருந்துட்டீங்க. இந்த தடவையாவது அவசியம் என் கல்யாணத்துக்கு வரணும்னு சொல்லி இன்விடேஷன் கொடுத்துட்டுப் போனாங்களே!"**

**- வி.ரேவதி**



உடல் ஆரோக்கியம் கொஞ்சம் படுத்தும். மருத்துவர் ஆலோசனைப்படி நடந்துக்கிட்டா, ஓரளவு சமாளிச்சுடலாம். வியாபாரத்தில் வளர்ச்சி அமோகமா தெரியுது.

**பரிகாரம் :** திருச்சானூர் போய் அலர் மேல் மங்கை தாயாரைத் தரிசனம் செய்து, திருமலை வெங்கடாஜலபதியை சேவித்துத் திரும்புங்கள். வாழ்க்கையில் நல்ல திருப்பங்கள் ஏற்படும்.

ஏப்ரல் - ஜூன் - சிறப்பான முன்னேற்றம்

ஜூலை - செப்டெம்பர் - உடல் உபாதை

செப்டெம்பர் - ஜனவரி - ஆதாயம்

ஜனவரி - ஏப்ரல் - அதிர்ஷ்ட வாய்ப்பு



**மீனம் :** அடேயப்பா! என்னமா கஷ்டப்பட்டிருக்கீங்க... எப்படியெல்லாம் சமாளிச்சிருக்கீங்க. ப்ளஸ் டூ ரிசல்டுலே நம்பர் வராத பையன் மாதிரி திகைச்சுப் போய் நின்ன காலமெல்லாம் விஷீப்டு ஏறி போயிடுச்சுங்க. வாழ்க்கை இனிமேதான் பிரகாசமா இருக்கப் போகுது. ஜூன் மாசத்துக்கு மேலே பொருளாதாரம் ஸ்டிராங்கா ஆயிடும். நினைச்ச காரியமெல்லாம் நடக்கும். மண்ணைத் தொட்டாலும், கேட்மியம் தங்கமா மாறும். உத்தியோகம் நிலைக்கும். பதவி உயர்வு தானா வரும். பொருள் சேர்க்கை அதிகமாகும். எதிரிகள் அட்ரஸே இல்லாமல் ஓடிப் போயிடுவாங்க. நவதான்யம், காய்கறி வியாபாரம் செய்யறவங்களுக்கு நிறைய ஆதாயம் கிடைக்கும். குடும்பத்தில் அமைதியும் மன நிறைவும் ரெயில்வே ரிசர்வேஷன் கவுன்டர் கூட்டம் மாதிரி அலைமோதும்.

வருஷ ஆரம்பத்தில் இலேசா சஞ்சலம் இருக்கும். கசப்பான சம்பவங்கள் நடக்கலாம். அந்தச் சமயத்துல உங்க பேச்சும் குண்டூர் ஊசி மிளகாய் மாதிரி இருந்துச்சுன்னா, காரியம் அம்பேல்! பார்த்து நடந்துக்குங்க.

**பரிகாரம் :** ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமம், ஸ்ரீ காமாட்சி ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டு வந்தாலே போதும். ஜெயம் நிச்சயம். பிரதோஷ காலத்தில் சிவனுக்குப் பாலாபிஷேகம் செய்தால், மன சாந்தி கிடைக்கும்.

ஏப்ரல் - ஜூன் - சாதாரண பலன்கள்

ஜூன் - செப்டெம்பர் - பொருளாதாரம் நலம்

செப்டெம்பர் - ஜனவரி - ஆதாயம்

ஜனவரி - ஏப்ரல் - உற்சாகம். ●

# தூங்கிப் போன காவலாளி!

ஹர்ஷத் மேத்தாவை நாம் மறந்து விட்டால் என்ன செய்வது என்பதற்காக, பங்கு மார்க்கெட் ஊழல் வரலாறின் அத்தியாயம் இரண்டை அரங்கேற்றியுள்ளார் கேதன் பாரேக்.

மேத்தாவைப் போலவே ஸ்டாக் ப்ரோக்கர் பாரேக். மேத்தாவைப் போலவே, பங்குகளின் விலையைச் செயற்கையாக உயர்த்துவதற்காக, தாமே அவற்றை மிக அதிக அளவில் வாங்கி அவற்றுக்குக் கிராக்கி ஏற்படுத்தினார். மேத்தா அனைத்து நிறுவன பங்குகளிலும் புகுந்து விளையாடினார். ஆனால் பாரேக் ஐ.டி. எனப்படும தகவல் தொழில்நுட்ப நிறுவனங்களின் (கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் இன்டர்நெட் போன்றவை) பங்குகளில் மட்டும் விளையாடி அவற்றின் விலை ஏறச் செய்தார்.

விலை ஏறியதும், வாங்கியவற்றை அவசர அவசரமாக விற்று கொள்ளை லாபம் அடிப்பது என்பது உள்நோக்கம்.

ஆனால், இந்தத் தந்திரம் அவரையே பலிகொண்டது! தாமே துவக்கி வைத்து ஆடிய சூதாட்டத்தில் தாமே தோற்றுப் போனார் பாரேக். கையில் காசில்லாத நிலையில், ஆமதாபாத்தில் உள்ள ஒரு சின்னூண்டு கூட்டுறவு வங்கியிடம் போனார். எப்படியோ தாஜா பண்ணி 130 கோடி ரூபாய்க்கு அந்த வங்கியில் டி.டி.எடுத்து பாங்க் ஆஃப் இந்தியாவில செலுத்தினார்.

ஏதடா, ஒரு முன்பின் தெரியாத வங்கி இத்தனை பெரிய தொகைக்கு டி.டி. கொடுத்திருக்கிறதே என்ற வீண் ஆராய்ச்சியிலெல்லாம் பாங்க் ஆஃப் இந்தியா இறங்கவில்லை.

நிகர விளைவு?... பாங்க் ஆஃப் இந்தியாவுக்கு 130 கோடி ரூபாய் நஷ்டம்!

இதற்கப்புறம்தான் கேதன் பாரேக் என்ன பண்ணுகிறார் என்று வங்கி வட்டாரமும் பங்குச் சந்தை வட்டாரமும் கவனிக்க ஆரம்பித்தது. பாரேக்கின் வண்டவாளங்கள் வெளிப்பட்டன. சுமார் எண்ணூறு கோடி ரூபாய் அளவுக்கு பாரேக் பங்குச் சந்தை வட்டாரங்களை ஏய்த்துப் பணம் பண்ணியிருக்கக்கூடும் என்று நம்பப்படுகிறது. மும்பை பங்குச் சந்தை இரண்டு வாரங்களாக அழுது வடிகிறது. பங்குகள் விலை தடாலென்று வீழ்ந்து விட்டது. வழக்கம் போல் பலமான அடி சிறு முதலீட்டாளர்களுக்குத்தான்!

ஹர்ஷத் மேத்தா விவகாரத்துக்குப் பிறகு பங்குச் சந்தையைக் கண்காணிக்க செபி (Seurities and Exchange Board of India - SEBI) என்றொரு கூர்கா அமைப்பைத் தோற்றுவித்தது இந்திய அரசாங்கம்.

'மும்பை பங்குச் சந்தையில் ஒரே தரகர் இத்தனை பங்குகள் வாங்கி விற்கிறாரே...? இதில் ஏதோ மர்மம் இருக்க வேண்டுமே...' என்றெல்லாம் அனுகி ஆராயாமல் நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கி விட்டது செபி. பங்குகளின் விலைகள் திடீரென்று உயர்வதைக் கூட கவனிக்காத அளவுக்கு ஆழ்ந்த உறக்கம்!



• பாரேக்



• ஹர்ஷத் மேத்தா

இந்த உறக்கத்தைத் தோற்கடிக்கும் சகோதர உறக்கம் பாங்க் ஆஃப் இந்தியாவினுடையது. ரிசர்வ் வங்கியிடம் விசாரித்து உறுதிசெய்து கொள்ளாமல் 130 கோடி ரூபாய் கேதன் பாரேக்கிடம் தந்துவிட்டு, இப்போது கையை உதறிக் கொண்டு நிற்கிறது.

இந்த இரண்டு நிறுவனங்களும் தூங்கிவிட்டதால் தூக்கமிழந்து இப்போது தவிக்கிறார்கள் சிறு முதலீட்டாளர்கள்.

— வி. கோபாலன்

# வெளிநாட்டு டூரா?

## இதோ, சில டிப்ஸ்:

● இந்தியாவை விட்டு எந்த வெளிநாட்டுக்குச் செல்ல வேண்டுமானாலும், முதலில் பாஸ்போர்ட் தேவை. பாஸ்போர்ட் வாங்க விண்ணப்பிக்க வேண்டும். க்யூவில் அரை நாள் நிற்க வேண்டி இருக்கும், அவ்வளவுதான். இரண்டு மாதங்களில் பாஸ்போர்ட் உங்கள் கைக்கு வந்துவிடும். பிரயாணம் கிளம்புமுன் ஒரு ஜெராக்ஸ் பிரதி எடுத்துத் தனியே வைத்துக் கொள்ளுங்கள்.

● சில வெளிநாடுகளுக்குச் செல்லுமுன், அந்த நாட்டுக்குள் நுழைவதற்கான விசா தேவை. இந்தியாவில் உள்ள அந்த நாட்டின் தூதரகத்துக்கு விண்ணப்பித்து விசா வாங்கி வைத்துக் கொள்ளுங்கள். விண்ணப்பிக்கும்போது பாஸ்போர்ட்டையும் கூடவே அனுப்ப வேண்டும். அதில்தான் விசா பதிவு செய்து அனுப்புவார்கள்.

● சில வெளிநாடுகளுக்குப் போய்ச் சேர்ந்த பிறகுகூட, விசா பெற்றுக் கொள்ளலாம். இதற்கு விசா இன் அரைவல் என்பார்கள். உதாரணம் பாங்காக். ஏர்போர்ட்டிலேயே இதற்கான அலுவலகம் இருக்கிறது. விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து, அதற்கான கட்டணத்தை உள்ளூர் கரன்சியில்தான் செலுத்த வேண்டும். பக்கத்திலேயே மனி எக்ஸ்சேஞ்ச் கவுண்ட்டர்கள் இருக்கும். நீங்கள் இங்கிருந்து, கொண்டு போகும் டாலர்களுக்கு உள்ளூர் கரன்சியை மாற்றாகப் பெற்றுக் கொள்ளலாம்.

● இங்கிருந்து புறப்படுவதற்கு முன்னால், வெளிநாட்டில் செலவழிப்பதற்கான டாலர் நோட்டுக்களாகவோ, டிராவலர்ஸ் செக்குகளாகவோ மாற்றிக் கொள்ள, இங்கே உள்ள அங்கீகரிக்கப்பட்ட மனி எக்ஸ்சேஞ்ச் நிறுவனங்களில் நமது இந்திய ரூபாயைக் கொடுத்துவிட்டால், பாஸ்போர்ட்டில் ஓர் என்ட்ரி போட்டுவிட்டு, டாலர்களைக் கையில் தந்துவிடுவார்கள். (நம்மூர் ரூபாயை அங்கே யாரும் சீந்த மாட்டார்கள்!)

● இதற்கெல்லாம் ஒவ்வோர் இடமாகத் தேடி அலைவதற்குப் பதில், அங்கீகரிக்கப்பட்ட டிராவல் ஏஜெண்டிடம் நீங்கள் உங்கள் வெளிநாட்டுப் பயணத்துக்கான டிக்கெட்டை வாங்கும்போதே, அவர் உங்களுக்கு விசா, டாலர் – மாற்று என்று எல்லா விஷயங்களிலும் உதவுவார். நல்ல டிராவல் ஏஜெண்டாக இருந்துவிட்டால் நல்லது. இதில் கவனமாக இருங்கள். இல்லை என்றால் ஒவ்வொரு குறைபாட்டுக்கும் நீங்கள் கம்ப்ளெயின்ட் பண்ணப் போக, அவர் ஒவ்வொன்றுக்கும் நழுவலான சால்ஜாப்புச் சொல்ல, 'வெளிநாட்டுப் பயணமே வேண்டாம்டா சாமி' என்று வெறுத்துப் போய் விடுவீர்கள்.

● உங்கள் பாஸ்போர்ட், டிக்கெட் எல்லாம் கொண்ட வேலட்டைப் பத்திரமாகத் தனியே வைத்துக் கொள்ளுங்கள். வெளிநாட்டு ஏர்போர்ட்டுகளில் முகம் கழுவ டாய்லெட்டுக்குப் போனால் கூட, வெளியே வைத்து விட்டுச் செல்லாதீர்கள். வெளியே வைக்கும் உங்கள் பைகூட பத்திரமாக இருக்கும். வேலட் மாயமாய் மறைந்துவிடும்!

வெளிநாடுகளில் டாலர்களை உள்ளூர் கரன்சியாக மாற்றும்போது, நீங்கள் தங்கி இருக்கும் ஓட்டல்களிலேயே மனி எக்ஸ்சேஞ்ச் கவுண்ட்டர் இருந்தால்கூட, வெளியே அங்கீகரிக்கப்பட்ட மனி எக்ஸ்சேஞ்ச் டீலர்களிடம் மட்டுமே மாற்றிக் கொள்ளுவது நல்லது. ஏனென்றால் ஓட்டல்களில்,



வெளியே கிடைப்பதைவிட, குறைவாகவே தருவார்கள். கமிஷன் ஜாஸ்தி!

எந்த வெளிநாட்டுக்குப் போனாலும், அங்கே உள்ள அரசாங்க டூரிஸம் அலுவலகத்தைத் தொடர்பு கொண்டு, பார்க்க வேண்டிய இடங்கள் பற்றிப் பட்டியல் போட்டுக் கொள்ளுங்கள். உள்ளூர் நண்பர்கள், உறவினர்கள் இருந்தால் அவர்களே உங்களைக் கவனித்துக் கொள்ளுவார்கள். வாயை மூடிக்கொண்டு, (பர்ஸையும் மூடிக் கொண்டு) அவர்கள் காண்பிக்கும் இடங்களில் மட்டும் அவ்வப்போது வாயைத் திறந்து, அல்லது வாயைப் பிளந்து அதிசயிக்கலாம்.

● சுற்றுலாக் குழுவோடு சென்றால் பல வசதிகள் உண்டு. அவர்களே அங்கங்கே பார்க்க வேண்டிய இடங்களுக்கான கட்டணங்களைச் செலுத்தி, முறையான கைடு உதவி செய்ய, சிரமங்கள் குறைச்சல். ஆனால் குழுவாகச் செல்லும்போது அவர்கள் சொல்லுகிற கால அவகாசத்துக்குள் பார்க்கிற இடங்களைப் பார்த்துவிட்டு அவர்களுடன் படகிலோ, பஸ்ஸிலோ டயத்தில் சேர்ந்து கொள்ளுங்கள். சாவகாசமாகப் பார்த்துக் கொண்டோ, மனைவியை விதம் விதமாகப் படம் எடுத்துக் கொண்டோ, சுற்றுலா போன இடத்தில் சுற்றிக் கொண்டிருந்துவிட்டு அப்புறம் அவர்களைக் கோட்டை விட்டு விடாதீர்கள். பிறகு நீங்களாகவே உங்கள் ஓட்டலைத் தேடிப் பிடித்து அலைய வேண்டும். சிக்கல், செலவு எல்லாம் கூட!

● எப்போதும், தங்கியிருக்கும் ஓட்டலின் விலாச கார்டை சட்டை பாக்கெட்டில் வைத்திருங்கள்.

● எல்லா வெளிநாட்டு ஓட்டல்களிலும், அறையின் பூட்டுக்குச் சாவி தருவதில்லை. பெரும்பாலும் பிளாஸ்டிக் கார்டுதான் தருவார்கள். பூட்டின் இடைவெளியில் நுழைத்து, பிளாஸ்டிக் கார்டின் பச்சை வட்டம் ஒளிரும்போது, கார்டை உருவி விட்டு, கைப்பிடிக் குமிழைத் திருகுங்கள். இரண்டாவது பிளாஸ்டிக் கார்டை, நுழைந்தவுடன் இருக்கும் 'பவர்' பாக்கெட்டில் செருகி விட்டால், விளக்குகள், மின்விசிறி, ஏஸி எல்லாம் உயிர் பெற்று விடும். ஒவ்வொன்றுக்கும் பணியாளை அழைத்துக் கொண்டிருந்தால், காத்திருக்க வேண்டும்!

— சாருகேசி



நில், கவனி, வெற்றிகொள்!



# கல்கி

## ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

இணைந்து வழங்கும்

# இளைஞர் திருவிழா!

அன்பிற்கும் பண்பிற்கும் வணக்கத்திற்கும் உரிய வாசக தெய்வங்களே... (தேர்தல் நெருங்கிட்டிருக்கிற பாதிப்புதான் வேறொன்றுமில்லை.. ஹி... ஹி!)

சென்ற மாதம் நடந்த '7வது சுவை' நிகழ்ச்சிக்கு தாங்கள் அளித்த ஏகோபித்த வரவேற்பில் திரளான பங்கேற்பில் நாரதகான சபா அரங்கமே தளும்பித் தள்ளாடியது. அரங்கம் நிறைந்த கரகோஷம் அளித்த உற்சாகத்தில் இதோ அடுத்த அறிவிப்பு...

ஏப்ரல் மாத திருவிழா தலைப்பு என்ன தெரியுமா?

## 'பணம்'

துட்டு அய்யா துட்டு...! டப்பு சாமி டப்பு!

தனி நபரோ, வீடோ, நாடோ... சகலமும் நாசிக் கரன்ஸி மேலதானே நிக்குது..

நாள் : 22.4.2001 (ஞாயிறு)

இடம் : **பாரதியார் இல்லம், திருவல்லிக்கேணி, சென்னை - 5**

நேரம் : மாலை 6 மணி

தலைமையுரை : **ஏவி.எம். சரவணன்**

சிறப்புரை : **சாலமன் பாப்பையா**

கலகலக்கும் 'மணி'யான நிகழ்ச்சி!




பின்குறிப்பு : சிரிக்கத் தெரிந்தவர்களுக்கு முன்னுரிமை தரப்படு

**சிரிக்க... சிந்திக்க... சிறக்க..**

**வருங்கால ப்ரூனே சுல்தான்களே, வருக, வருக!**

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

"சமச்சீரான சத்துணவிற்கு, வீட்டு உணவைத் தவிர,
## செரிலாக்கும் மிகவும் அவசியமானது என்று நான் கருதுகிறேன்."

"எனது செல்லக் குழந்தைக்கு 4 மாதங்கள் முடிந்தவுடனேயே, 'பருப்பு ரசம்', 'ரவைப் பாயசம்', 'குழைத்த வாழைப்பழம்', 'ஜூஸ்' முதலியவற்றை, நான் கொடுக்கத் தொடங்கிவிட்டேன். எனது குழந்தையை ஆரோக்கியமாகவும், வலிமையாகவும் ஆக்கிடச் செய்வதற்கு, அத்தியாவசியமான சத்துணவை சமச்சீரான அளவில் தரவேண்டும் என்று மருத்துவர் கூறினார். அதனால்தான் நான் செரிலாக்கை பயன்படுத்தினேன்.

**செரிலாக் ஒவ்வொரு முறையும் சமச்சீரான சத்துணவு :**



அத்தியாவசியமான ஊட்டச் சத்துக்களை, செரிலாக், சரியான அளவில் வழங்குகிறது. இயற்கையாகவே புரதச்சத்து பெருமளவிற்கு அடங்கியுள்ள பால் மற்றும் கோதுமையினால் தயாரிக்கப்பட்ட செரிலாக்கில், கார்போஹைட்ரேட்டுகளும், கொழுப்புச் சத்துக்களும் கூட இருக்கின்றன. அத்துடன், மிகவும் அத்தியாவசியமான வைட்டமின்கள் மற்றும் தாதுப் பொருட்களும், இதில் விசேஷமாக அடங்கியுள்ளன; இதனால் உங்கள் குழந்தைக்கு ஒவ்வொரு முறையும், சமச்சீரான சத்துணவு கிடைக்கிறது.

**ஜீரணிப்பது எளிது, பல்வேறு சுவையின் அனுகூலம் :**

நெஸ்லேயின் அதிநவீன '2-வைன் என்ஸைமேடிக் செய்முறை' கார்போஹைட்ரேட்டுகளை, ஜீரணிப்பதற்கான எளிய வடிவில் மாற்றுகிறது. இதன் மூலம், செரிலாக் மென்மையாகவும், லேசானதாகவும் ஆவதுடன் உங்கள் குழந்தை உணவை ஜீரணிப்பதும் வெகு சுலபமாகிறது.




செரிலாக்கின் ருசியை குழந்தைகள் மிகவும் விரும்புகிறார்கள் 4 மற்றும் 6 மாதங்களுக்கு இடைப்பட்ட காலத்தில், செரிலாக் வீட் மற்றும் செரிலாக் ரைஸிலிருந்து ஒன்றைத் தெரிந்தெடுத்திடுங்கள்; பிறகு உங்கள் குழந்தையின் மகிழ்ச்சிக் கும்மாளத்தை கேட்டு ரசியுங்கள்.



**உங்கள் குழந்தைக்கு செரிலாக் அனுகூலத்தை அளியுங்கள்.**

IMPORTANT NOTICE : MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.

महत्वपूर्ण सूचना: माँ का दूध आपके बच्चे के लिए सर्वोत्तम है। ४ महीने के बाद ही उसे शिशु आहार देना शुरू करें।

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka